# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை

## தொகுதி - 4

## மொழி, கணிதம், பண்பாடு

பதிப்பாசிரியர்
முனைவர் தி. மகாலட்சுமி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம், தரமணி,
சென்னை - 600 113.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை

தொகுதி - 4

## மொழி, கணிதம், பண்பாடு

பதிப்பாசிரியர்
முனைவர் தி. மகாலட்சுமி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம், தரமணி,
சென்னை - 600 113.

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Ulakat Tamiḻāraicci Niṟuvanac Cuvaṭi Viḷakka Aṭṭavaṇai |
| Editor | : | Dr. T. Mahalakshmi<br>Research Assistant<br>Faculty of Literature and Manuscriptology<br>International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai - 600 113. |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai - 600 113. |
| Edition | : | First |
| Date of Publication | : | 2001 |
| Publication No. | : | 400 |
| Language | : | Tamil |
| Paper Used | : | 18.6 kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | x+318 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.70/- |
| Printed by | : | Sri Vignesh Printers<br>12/4. Narasimhan Street<br>West Mambalam. Chennai - 600 033. |

**முனைவர் ச.சு. இராமர் இளங்கோ**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை 600 113

# அணிந்துரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் தமிழாய்வுகளில் சுவடியியல் ஆய்வும் அடங்கும். தமிழ் ஓலைச்சுவடிகளின் பெருமைகளை உலகிற்கு உணர்த்தும் வகையில் 1979 முதல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் சுவடியியல் பட்டய வகுப்பைத் தொடர்ந்து நடத்தி வருகிறது. சுவடியியல் பட்டய வகுப்பு மாணவர்கள் ஆண்டு இறுதியில் நிறுவனச் சுவடியில் ஒன்றையோ அல்லது பிற சுவடி நூலகங்களிலுள்ள ஒரு சுவடியையோ பெயர்த்தெழுதி, ஆய்வு செய்து நிறுவனத்திற்கு ஆய்வேடாக வழங்கி வருகின்றனர். இவ்வாய்வு ஏடுகளில் சில இந்நிறுவன வெளியீடுகளாக வந்துள்ளன. மேலும், சுவடிகள் தொடர்பான கருத்தரங்குகளும் பயிலரங்குகளும் இந்நிறுவனத்தில் நடைபெற்று வருகின்றன.

டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூலகத்துடன் இணைந்து திங்கள் தோறும் சுவடியியல் கருத்தரங்கைத் தொடக்க காலத்தில் இந்நிறுவனம் நடத்திவந்தது. தஞ்சை சரசுவதி மகால் நூலகத்துடன் இணைந்து சுவடியியல் கருத்தரங்கினை 1997இல் இந்நிறுவனம் நடத்தியுள்ளது. 1980 முதல் இந்நிறுவனம் சுவடிப் பதிப்புகளை வெளியிடத் தொடங்கியது. இதுவரை 50 சுவடிப் பதிப்புகள் வெளிவந்துள்ளன.

சுவடிகளை விளக்க அட்டவணை செய்து வெளியிடும் திட்டப்பணி இந்நிறுவனத்தில் 1983இல் தொடங்கப்பெற்றது. இத்திட்டத்தின் பயனாகத் 'தமிழ்ச் சுவடிகள் அட்டவணை' என்னும் நூல் 1983இல் சூ. நிர்மலாதேவி அவர்களாலும், 'Siddha Medical Manuscripts in Tamil, என்ற நூல் 1989இல் வே.இரா. மாதவன் அவர்களாலும் பதிப்பிக்கப் பெற்று நிறுவனத்தில் வெளியிடப்பெற்றன. மேலும், இத்திட்டத்தின் பயனாகக் கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச்சுவடிகள் நூலகத்திலுள்ள தமிழ்ச் சுவடிகள், முனைவர் சூ. நிர்மலாதேவி அவர்களால் அட்டவணை செய்யப்

பெற்று, கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் விளக்க அட்டவணை (முதல் தொகுதி) என்ற தலைப்பில் 1995 இல் வெளிவந்தது.

தமிழ்ச் சுவடிகளுக்கு விளக்க அட்டவணை தயாரிக்கும் பணியின் தொடர்ச்சியாக உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடிகளுக்கு விளக்க அட்டவணைகள் தயாரித்து அச்சிட்டு வெளியிடுவதற்குத் தில்லித் தேசிய ஆவணக்காப்பகம் 1995-96இல் ரூ. 30,000/- வழங்கியது. அதன் பயனாக, 'உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை' என்ற பெயரில் இரு தொகுதிகள் முனைவர் தி. மகாலட்சுமி அவர்களால் 1998இல் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. இவ்விரு தொகுதிகளைத் தொடர்ந்து மூன்றாம் தொகுதி நிறுவன வழியாக வெளியிடப்பட்டது.

1996-97இல் அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகளை விரிவாக விளக்க அட்டவணை செய்து நூலாக அச்சிட்டு வெளியிட தில்லி தேசிய ஆவணக் காப்பகம் ரூ. 40,000/-மும் 1998இல் ரூ. 2,00,000/-ஐயும் நல்கையாக நல்கியது. அந்நல்கையின் பயனாக நான்கு தொகுதிகளைப் பதிப்பித்து வெளியிட்ட இதன் பதிப்பாசிரியர்களான முனைவர் ஆ. தசரதன், திரு. மொ. மருதமுத்து, திரு. மூ. பரிமணன் ஆகியோரை மனமுவந்து பாராட்டுகிறேன்.

தற்போது, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணையின் நான்காம் தொகுதி நிறைவுற்று நூலாக வெளிவருகிறது. அப்பணியைச் செய்து முடித்த முனைவர் தி. மகாலட்சுமி பாராட்டுக்குரியவர்.

சுவடித் துறையில் ஈடுபாடு கொண்டவர்களுக்கும், தமிழறிஞர்களுக்கும், 'உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை' தொகுதிகள் மிகவும் பயனுடையன. நிறுவன ஓலைச்சுவடிகள் பாதுகாக்கப் பெற வேண்டுமென்ற எண்ணத்தில் செயல்பட்ட முனைவர் சிலம்பொலி செல்லப்பன் அவர்களும், நிறுவனச் சுவடிகள் விளக்க அட்டவணை செய்யப் பெற வேண்டுமென்று விரும்பிய முன்னாள் இயக்குநர் பொறுப்பிலிருந்த பேராசிரியர் முனைவர் அன்னி மிருதுலகுமாரி தாமசு அவர்களும் பாராட்டுக்குரியவர்கள்.

இத்திட்டப்பணி சிறப்பாக அமைய வழிகாட்டிய பெருந்தகை பேராசிரியர் அமரர் மு. சண்முகம் பிள்ளை அவர்களை நன்றியுடன்

நினைவுகூர்கிறேன். அவருடன் இணைந்து வழிகாட்டிய முனைவர் ஆ. தசரதன், முனைவர் பூ. சுப்பிரமணியம் ஆகியோர்க்கும் என் நன்றி.

இந்நிறுவன வளர்ச்சியில் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகின்ற நிறுவனத்தலைவர் மாண்புமிகு கல்விஅமைச்சர் முனைவர் மு. தம்பிதுரை அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை செயலாளர் திருமிகு. பி.ஏ. இராமையா, இ.ஆ.ப. அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறையின் கூடுதல் செயலாளர் திரு. தா. சந்திரசேகரன் இ.ஆ.ப. அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

இந்நான்காம் தொகுதியைச் சிறப்பாக அச்சிட்டுத் தந்த விக்னேஷ் அச்சகத்தார்க்கும் நன்றி.

**இயக்குநர்**

# முன்னுரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இலக்கியத் துறையுடன் இணைந்துள்ள சுவடிப்புலம், பட்டய வகுப்புகள், பயில ரங்குகள் வழி மாணவர்களுக்கும் பிறருக்கும் சுவடிப் பயிற்சி அளித்தல், அச்சில் வெளிவராத சுவடி நூல்களைப் பதிப்பித்து அச்சிடல், சுவடிப்பதிப்பு வரலாறு அறிதல், சுவடிகளுக்கு விளக்க அட்டவணை தயாரித்து வெளியிடுதல் முதலான பணிகளை மேற்கொண்டு வருகிறது.

## சுவடி விளக்க அட்டவணை

இந்நிறுவனத்தில் ஏறக்குறைய 592 சுவடிக்கட்டுகளும், அவற்றில் 950 நூல்களும் உள்ளன. 1990-91 இல் இந்நிறுவனச் சுவடிகளைச் செப்பம் செய்வதற்கும் அட்டவணை செய்வதற்கும் ரூபாய் ஐந்தாயிரம் இந்நிறுவன அந்நாளைய இயக்குநர் முனைவர் சிலம்பொலி செல்லப்பன் அவர்களால் தில்லி தேசிய ஆவணக் காப்பகத்தி லிருந்து பெறப்பட்டது. பின்னர், 1995-இல் இந்நிறுவனச் சுவடிகளின் விளக்க அட்டவணையை அச்சிட்டு வெளியிடு வதற்கு ரூபாய் முப்பதாயிரம் இந்நிறுவன இந்நாள் இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களால் அக்காப்பகத் திடமிருந்து பெறப்பட்டது. இத்திட்டத்தின் வாயிலாக உருவாகிய விளக்க அட்டவணைகளே இப்போது வெளி வருபவை.

## பொருளடிப்படைப் பாகுபாடு

இந்நிறுவனச் சுவடிகளின் விளக்க அட்டவணை 4 தொகுதிகளில் அமைகிறது. முதல் தொகுதி **சித்த மருத்துவச் சுவடி விளக்க அட்டவணை** என்ற தலைப்பிலும், இரண்டாம் தொகுதி **இலக்கியச் சுவடி விளக்க அட்டவணை** என்ற தலைப்பிலும், மூன்றாம் தொகுதி **மெய்யியல் மற்றும் நாட்டுப்புறவியல் சுவடி விளக்க அட்டவணை** என்ற தலைப்பிலும், நான்காம் தொகுதி **மொழி, கணிதம் மற்றும்**

**பண்பாட்டுச் சுவடி விளக்க அட்டவணை** என்ற தலைப்பிலும் அமைகின்றன.

இந் நான்காம் தொகுதியில் அகராதி, நிகண்டு, இலக்கணம், கணிதம், ஆவணம், வரலாறு, ஆரூடம், சரசாத்திரம், சாமுத்திரிகா இலட்சணம் (உடல் அங்கவியல்), சோதிடம், ஞானம், பூசைமுறை, மந்திரம், மனைசாத்திரம் எனும் பொருண்மைகள் இடம் பெறுகின்றன. இதில் இடம் பெற்றுள்ள சுவடிக்கட்டுகளில் அடங்கிய நூல்களின் எண்ணிக்கை 203.

## சுவடிக் கொடை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்குத் தங்களிடமிருந்த சுவடிகளை அன்பளிப்பாகவும், நன்கொடையாகவும், வழங்கிய நல்ல மனம் கொண்ட அன்பர்கள் பலராவர். திருவாவடுதுறை ஆதீனத்தினரும், திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடத்தினரும் இக்கொடையில் முக்கிய இடம் பெற்றவராவர். இங்ஙனம் சுவடி வழங்கிய அனைவருக்கும் இந்நிறுவனம் மனம் நிறைந்த நன்றியையும், அன்பு நிறைந்த பாராட்டையும் தெரிவிக்கின்றது.

## நன்றியுரை

சுவடி விளக்க அட்டவணை விரைந்து நூல்களாக வெளிவரவேண்டுமென்ற ஆவலோடு என்னை ஊக்கப்படுத்தி யும், ஆற்றுப்படுத்தியும், அச்சிட நிதிபெற்றுத் தந்தும், தோன்றாத் துணையுமாக நின்ற இந்நிறுவன இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களுக்கும், இத்திட்டத்திற்கு நல்கை வழங்கிச் சிறப்பித்த தில்லி, தேசிய ஆவணக்காப்பக இயக்குநர் அவர்களுக்கும், சுவடிகளைச் செப்பமிடுவதற்கும் அட்டவணைப் பணியை நான் செய்வதற்கும் வாய்ப்பு நல்கிய அந்நாளைய இயக்குநர் பொறுப்பிலிருந்த முனைவர் அன்னிதாமசு அவர்களுக்கும், கேட்டபோதெல்லாம் ஐயம் தீர்த்துத் துணையாக நின்ற இலக்கியத்துறை இணைப்பேராசிரியர் முனைவர் ச. சிவகாமி அவர்களுக்கும், இந்நூலாக்கத்தின் தொடக்கக் காலக்கட்டத்தில் எனக்கு ஆசானாக இருந்து, நான் இடர்ப்படும்போதெல்லாம்

தேவையான ஆலோசனை வழங்கி, எழுத்துருவின் பெரும்பகுதியைத் திருத்திக் கொடுத்துப் பல்லாற்றானும் துணைபுரிந்த முனைவர் பூ. சுப்பிரமணியம் அவர்களுக்கும், அட்டவணைப் படுத்தும்போது தொடக்கத்தில் எனக்கு உதவிய முனைவர் வ. அலமேலு அவர்களுக்கும், இவ்வட்டவணைத் தொகுதிகள் சிறக்கவும், விரைந்து முடியவும், துணைநின்ற எங்கள் துறை சிறப்புநிலை ஆய்வாளர் முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், நான் வேண்டும்போதெல்லாம் சிரமம் பாராது தன்வேலையைப் போல் கருதி தேவைப்படும் கருத்துரைகளையும் நூல்களையும் கொடுத்துதவிய எங்கள் துறை ஆராய்ச்சி உதவியாளர் திரு. த.பூமிநாகநாதன் அவர்களுக்கும், தன் பணிகளுக்கிடையே இந்த நூலின் மெய்ப்புகளைத் திருத்துவதில் உதவிய எங்கள் துறை ஆராய்ச்சி உதவியாளர் திரு. மொ. மருதமுத்து அவர்களுக்கும், அட்டவணைப் பணிக்குத் துணைநின்ற எங்கள் துறை ஆராய்ச்சி உதவியாளர்கள் முனைவர் சூ.நிர்மலா தேவி, திரு மூ. பரிமணன் அவர்களுக்கும் அன்பார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நூல்களைத் தடையின்றித் தந்தருளிய அன்பு கெழுமிய நூலகர் திரு இரா. பார்வதி அவர்களுக்கும், இந்நூல் நன்முறையில் வெளிவருவதற்கு அச்சுப்பணி செய்த ஸ்ரீ விக்னேஷ் அச்சுக் கூடத்திற்கும் என் நன்றி உரித்து. நான் சிறந்த ஆராய்ச்சியாளராக அமைதல் வேண்டும் என்ற பெரு நோக்கோடு என் கல்விப் பணியில் உற்ற நண்பராக தோள்கொடுத்து நின்றவரும், எந்நிலையிலும் கடமை தவறாதிருக்க வேண்டுமென்ற உணர்வை ஊட்டியவருமான என் இதயம் நிறைந்த, அண்மையில் மறைந்த என் கணவர் அமரர் எஸ்.சந்திரசேகரன் அவர்களை வணங்கி என் நன்றியை நிறைவு செய்கிறேன்.

**தி. மகாலட்சுமி**

# பொருளடக்கம்

# பதிப்புரை

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை மாதிரிப் படிவம்

(பொருள் அடிப்படைப் பாகுபாடு)

**1. நூற்பெயர் (வரிசை எண்ணுடன்)**

அ. கட்டு எண் + நூல் எண்

ஆ. ஏடுகளின் எண்ணிக்கை

இ. அளவு

ஈ. வரிகள்

உ. சுவடியின் நிலை

ஊ. கையெழுத்தின் தன்மை

எ. சுவடி முழுமை / குறைவு

ஏ. அச்சான விவரம்

முற்குறிப்பு (இருப்பின் மட்டும்) (Colophon)

தொடக்கம் (காப்பு + நூலின் முதல்பாட்டு)

முடிவு (இறுதிப்பாடல்)

பிற்குறிப்பு (இருப்பின் மட்டும்) (Colophon)

**II. குறிப்புரை**

1. நூற்பெயர் (சுவடியில் உள்ள வடிவம்)
2. செய்யுட்களின் எண்ணிக்கை
3. செய்யுளா? உரைநடையா? இரண்டும் கலந்ததா?
4. நூலின் சிறப்பு
5. நூலின் சுருக்கம்
6. நூலின் உட்தலைப்புகள்
7. நூற்செய்தியைக் கொண்டமைந்த உட்தலைப்புகள்

8. குறிப்பிட்ட ஒரு நூல் இவ்வட்டவணையில் வேறு இடங்களில் இடம் பெற்றிருப்பின் அதனைச் சுட்டுதல்
9. குறிப்பிட்ட அந்நூல் பிற அட்டவணையில் இடம் பெற்றிருப்பின் ஓரளவு சுட்டுதல்

10. அந்நூலை இவ்வட்டவணையிலுள்ள பிற நூல்களுடனும், வேறு அட்டவணைகளிலுள்ள நூல்களுடனும் ஒப்பிட்டு அது தொடர்பான சில ஆய்வுச் சிந்தனை களைத் தருதல்
11. மாற்றுச் சுவடி உள்ள வேறு இடங்கள்
12. அச்சான நூல்களின் விவரம்
13. குறிப்பிட்ட நூல் தலைப்பை ஒட்டி வெளிவந்துள்ள அச்சு நூல் விபரம்
14. சுவடிப் பட்டய ஆய்வேடாக அளிக்கப் பெற்றிருப் பின் அதனையும், ஆய்வேடு நூலாக வந்திருப்பின் அதனையும் சுட்டுதல்
15. நூலாசிரியர்
16. நூலாசிரியர் காலம்
17. நூலாசிரியரின் பிறநூல்கள்

**சுவடி விளக்க அட்டவணையின் அமைப்பு முறை விளக்கம்**

முதலில் நூல் தலைப்பும், நூல் தலைப்பை ஒட்டி இடது பக்கம் நூல் வரிசை எண்ணும் தரப்பட்டுள்ளன. அதன் பின் **அ** முதல் **ஏ** வரையிலான எட்டு உட்பிரிவுகளில் செய்திகள் தரப்பெற்றுள்ளன.

**காட்டு**

806. அகராதி

**அ. 143:319**

**ஆ.** 1-102 ஏடுகள்

**இ.** 42. 5 x 3.5செ.மீ.

**ஈ.** 6-9 வரிகள்

**உ.** சுமாரான நிலை

**ஊ.** தெளிவு

**எ.** குறை;

**ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

**தொடக்கம்** என்பதில் நூலின் தொடக்கத்தில் அமையும் முதல் பாடல் முழுமையாகத் தரப்பட்டுள்ளது. 14 அல்லது 16 சீர்வரும் பாடல்களிலும், நூலோடு தொடர்பில்லாத காப்புப் பாடல், நூல் பாடல் ஆகியவற்றைத் தருமிடங் களிலும் ஒரு பாடலின் இரண்டு வரிகளைத் தரும் முறையும் பின்பற்றப் பெற்றுள்ளது. காப்புப் பாடல், நூல்பாடல் ஆகிய இரண்டை யும் முழுமையாகத் தரும் முறையும் பின்பற்றப்பட்டுள்ளது. **முடிவு** என்பதில் நூலின் இறுதிப் பாடல் இயன்றவரை முழுமையாகத் தரப்படுகிறது. **முற்குறிப்பு** என்ற பகுதியில் நூல் தொடங்குவதற்கு முன்பு இடம் பெறும் சில குறிப்புகளும், **பிற்குறிப்பு** என்ற பகுதியில் நூல் முடிந்த பின் இடம்பெறும், சில குறிப்புகளும் தரப் பெற்றுள்ளன. நூலின் பெயர், நூலாசிரியர் பெயர், நூலை ஏட்டில் எழுதியவர் பெயர், முகவரி, நூலின் காலம், சுவடியை எழுதத் தொடங்கிய நாள், எழுதி முடித்த நாள், சுவடி உரிமையாளர், சுவடியைப் படியெடுக்கச் சொன்னவர், சுவடிக் கட்டில் அடங்கியுள்ள நூல்களின் பட்டியல், நூலை எடுத்தவர்களும், படித்தவர் களும் திருப்பிக் கொடுக்காவிட்டால் இன்னின்ன தீய விளைவுகள் ஏற்படும் என்ற அச்சுருத்தல், இரகசியக் குறிப்புகள் முதலான செய்திகள் பிற்குறிப்பில் இடம் பெற்றுள்ளன. மேலும் இவற்றுள் ஒரு சில செய்திகளே முற்குறிப்பில் இடம் பெற்றுள்ளன. மேலும் அவ்வாறான இடங்களும் மிகக் குறைவே.

**காட்டு**

முற்குறிப்பு

871. ஸ்ரீ லக்ஷ்ணம் (14:30)

பிரமாதி வருஷம், பங்குனி மாதம் 15 ஆம் தேதி புதன்கிழமை, பூச நட்சத்திரம், திருக்கோவிலூர் திட்டக்குடி ஆவிரன் கொளப்பாக்கம் வாத்தியார் அப்பாவு வாசிக்கின்ற ஸ்ரீலக்ஷ்ணம். எடுத்தவன் பார்த்துக் கொடுக்க வேண்டியது.

## பிற்குறிப்பு

### 865. சந்தனக் குறள் சாஸ்திரம் (360:596)

கீலக வருஷம் ஆடி மாதம் இருபதாம் நாள் செவ்வாய்க் கிழமை தினம் இந்தச் சந்தனக் குறள் சாஸ்திரம் எழுதி முடிவாய்விட்டது. ஸ்ரீராம ஜெயம் யெழுதியது.

மேலே குறிப்புரையில் இடம்பெற்றுள்ள அனைத்து விபரங்களும் இடம் பெறாமல் இவற்றுள் ஒன்றிரண்டு விபரங்களை மட்டுமே கொண்டமையும், குறிப்புரைகளும் உள்ளன.

ஒரு சுவடியில் ஒரு நூல் அமைதல் இயல்பானது, அன்றியும் சுவடியில் ஒன்றுக்கு மேற்பட்ட நூல்கள் உடன் எழுதப் பெற்றிருத்தலும் உண்டு. அவை வெவ்வேறு பொருள் பற்றியனவாகக் கூட இருக்கலாம். விளக்கத்தில் அவ்வாறு ஒன்றுக்கு மேற்கூறப்பட்ட நூல்கள் ஒரு சுவடியில் இருப்பின் அவற்றிற்கும் தனித்தனியே விளக்க அட்டவணை செய்யப் பெற்றுள்ளது. அங்ஙனம் செய்யப் பெறும் போது சுவடிக்குரிய எண் **கட்டு எண்ணாகவும்,** அதிலுள்ள நூல்களுக்குத் தரப்படும் எண் **நூல் எண்ணாக வும், அ** என்ற பகுதியில் சுட்டப் பெறுகிறது. எனவே ஒரு சுவடியில் ஒன்றுக்கு மேற்பட்ட நூல்கள் இருப்பின் கட்டு எண் மாறாது. நூல் எண் தொடர்ச்சியாக எண்களைப் பெறும்.

முதல், இடை, கடை ஆகியவற்றில் ஏடுகள் இல்லாதிருப் பின், இருந்து தெளிவற்று, சிதைந்து இருப்பின் அல்லது ஏடுகளுக்கு எண் இல்லாது இருப்பின் ஏடுகளின் மொத்த எண்ணிக்கை மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளது. இல்லாத ஏடுகளின் எண்களும், எண்ணிக்கை விபரங்களும் ஓரளவு தரப் பெற்றுள்ளன. ஏடுகளின் எண்ணிக்கையைத் தரும் நிலையில் ஏடுகள் விடுபட்டிருப்பின் பிறைக்குறிக்குள் மொத்த எண்ணிக்கையைச் சுட்டும் நிலையும் பின்பற்றப் பெற்றுள்ளது.

தொடக்கம், முடிவு ஆகியவற்றின் முடிவில் பெரும் பாலும் பாடல் எண் தரப் பெற்றுள்ளது. ஒரு சிலவற்றில் பக்க எண்ணும், ஒரு சிலவற்றில் பக்க எண்ணும், பாடல் எண்ணும் தரப்பெற்றுள்ளன.

முழுமையாக, இடையில், இறுதியில் என்றவாறு பல சுவடிகளின் ஏட்டெண்கள் சிதைந்துள்ளன. அதுபோன்ற நிலைகளில் இயன்றவரை பாடல்களை வைத்து ஏடுகள் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. பாடல்களிலும் தொடர்ச்சி முறை அறிதலில் இடர்ப்பாடு நேரும்போது ஏட்டுஎண் இல்லாதவை இறுதியில் சேர்க்கப் பெற்றுள்ளன.

ஒரு நூலில் பிற நூற் செய்திகள் இடம்பெற்று அவை அட்டவணை செய்யப்படாது இருப்பின் நூல் தலைப்புடன் முதலியன என்ற சொல்லாட்சி இடம் பெற்றிருக்கும். ஒரு நூலின் தொடர்பற்ற ஒன்றிரண்டு ஏடுகள், சிதைவு போன்றன அட்டவணை செய்யப் படாமைக்குக் காரணங்களாகின்றன.

அச்சு நூல் விவர அட்டவணை ஒரு சேரக் கிடைக்காமையும், விரைந்து அட்டவணையைத் தயாரித்து முடிக்க வேண்டிய நிலையும் இருந்ததனால் அச்சு நூல் விவரக் குறிப்புகள் முழுமையாகத் தரப்படவில்லை. மேலும் ஒரு நூல் அச்சானதா அச்சாகாததா எனத் தெரிந்து கொள்வதில் சில இடர்ப்பாடுகள் உள்ளன. பல சுவடிகளில் இடம் பெற்றுள்ள பாடல்களையோ, செய்திகளையோ திரட்டி வேறு ஒரு சுவடியாகத் தொகுக்கும் முறை மிகுதியாகக் காணப்படுகிறது. இங்ஙனம் உருவான சுவடிகளில் இடம் பெற்றுள்ள பல பாடல்களும், செய்திகளும் அச்சு நூல்களில் இடம் பெற்றதாக இருக்கின்றன. ஆயின் அச்சு நூல்களில் இடம் பெறாத பாடல்களும் இருக்கின்றன. எனவே இத்தகைய சோதிடம், ஞானம் முதலான சுவடிகளை அப்படியே எழுதித் தனி நூல்களாக வெளியிடுதல் இயலும். சான்றாக இந்நிறுவன வெளியீடான **சித்த மருத்துவ மணிகள்** என்ற நூலிலுள்ள பாடல்கள் பல சுவடிகளிலிருந்து திரட்டப் பெற்றுள்ளன. ஆயின் அவற்றுள் ஒரு சில பாடல்களே அச்சு நூலில் இடம் பெற்றுள்ளன. எனவே இத்தகைய சுவடி நூல்கள் **அச்சானதாகத் தெரியவில்லை** என்றே சுட்டப் பெறுகின்றன.

**தாள் சுவடிகள்**

ஓலைச் சுவடிக் கட்டுகளின் தொடர் வரிசையில் இடம் பெறாமல் தாள் சுவடிகள் தனித்த எண்களைப் பெறு கின்றன. எனவே அவற்றை வேறுபடுத்திக் காட்ட **அ.** என்ற பகுதியில் **தாள்** என்ற சொல் சேர்க்கப்பெற்றுள்ளது.

அ. தாள். கட்டுஎண் + நூல் எண்

ஆ. பக்கங்கள்

இ. முழுமை/குறை

ஈ. அச்சானதா / அச்சாகாததா எனும் அமைப்பில் தாள் சுவடிகள் விளக்கம் பெறுகின்றன.

**காட்டு**

914. நந்தி திருமூலருக்கு அருளிய பூத்தாது

***அ. தாள்.1:14***

**ஆ. *69-77*** பக்கங்கள்

இ. முழுமை

ஈ. அச்சானதாகத் தெரியவில்லை.

**நூல்களுக்குத் தலைப்பிடல்**

இந்த நான்காம் தொகுதியில் நூற்பெயர் தெரியாத நூல்களும், ஆசிரியர் பெயர் தெரியாத நூல்களும் இடம் பெற்றுள்ளன. நூற் பெயர் தெரியாத நூல்களுக்கு அந்நூற் செய்திகளை உட்கொண்டு தலைப்புகள் வழங்கப் பெற்றுள்ளன. எண்சுவடி, ஆவணம், வீட்டுக்கணக்கு, ஆருடம், சோதிடத் திரட்டு, சோதிடம், மந்திரத்திரட்டு, மந்திரம், மந்திரமும் சோதிடமும், மாந்திரீகம் எனப் பொதுப்பட அத்தலைப்புகள் இடம் பெற்றுள்ளன. இங்ஙனம் பொதுப்பட அமைந்த தலைப்புகள் அடைப்புக் குறிக்குள் காட்டப் பெறவில்லை. ஆயின் சில தலைப்புகள் சிறப்பு நிலையில் இடம் பெற்றிருப்பின். அவை மட்டும் அடைப்புக் குறிக்குள் தரப்பட்டுள்ளன. நூற்பெயர் இல்லாதிருப்பின் முதலில் வரும் உட்தலைப்பை நூற்பெயராகத் தரும் முறையும் பின்பற்றப் பெற்றுள்ளது. காட்டு: (வாக்கு சல்லியம் - சக்காதேவி மந்திரம்) *(444:691)*.

## பதிப்புக் குறிப்புகள்

தொடக்கம், முடிவு, முற்குறிப்பு, பிற்குறிப்பு எனும் பகுதிகளில் சுவடிகளிலிருந்து பெயர்த்தெழுதும் போது தற்போது எழுத்துச் சீர்திருத்த முறையைப் பின்பற்றி எழுத்துகள் மாற்றி அமைக்கப்பட்டுள்ளன. ஏடுகளில், பாடல்களில் இடம்பெற்றுள்ள தமிழ் எண்கள் அராபிய

எண்களாகத் தரப்பெற்றுள்ளன. சுவடிகளினின்று இவ்வாறு பெயர்த்தெழுதிய பகுதிகளில் தேவையான இடங்களில் காற்புள்ளி, முற்றுப்புள்ளி முதலியன இடம் பெற்றுள்ளன. மருத்துவச் சுவடிகளில் வீசம், பலம் போன்ற எடை அளவுகளுக்குத் தரப்பெற்றுள்ள குறியீட்டு வடிவங்கள் சுட்டப் பெறாமல் அவற்றின் விரிவே எழுதப் பெற்றுள்ளன. சிதைந்த இடங்களைக் குறிக்க '....' என்றவாறு புள்ளிகள் இட்டும், சிதைந்த இடங்கள் வருவித்து நிரப்பப்பட்டிருப்பின் அதன்கீழ் கோடிட்டும் காட்டப்பெற்றுள்ளன. ஒரு நூலின் மாற்றுப் பிரதி இடம்பெறின் அதனை 'இன்ன எண்ணில் காண்க' என்பது சுட்டப்பெற்றுள்ளது. **உ** என்பது உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தையும், **த** என்பது தஞ்சைப் பல்கலைக் கழகத்தையும், **ச** என்பது தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலையத்தையும், **கே** என்பது கேரளப் பல்கலைக் கழக அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தையும் குறிக்கும் சுருக்க விளக்கங்களாகின்றன.

### யாப்பு

அறுசீர், எழுசீர், எண்சீர் ஆகியவற்றாலான விருத்தப் பாவகைகளே மிகுதியாக உள்ளன. இவற்றுள் எண்சீர் விருத்தங்களே மிகுதி. வெண்பா, அகவல் போன்ற வகைகளும் உள்ளன. அவ்வகைகளுள் அடங்காத சில பாடல்களும் இடையிடையே காணப்பெறுகின்றன. பல பாடல்கள் அந்தாதி அமைப்பில் அமைந்துள்ளன. மூல நூல்களில் யாப்பு பெரும்பாலும் சரியாய் அமைந்து, அவை பிரதி செய்யப்படும் போது பல யாப்புக் குறைபாடுகள் தோன்றியுள்ளன. இதனைச் சில சுவடிகளில் அமையும் பல பாடல்களை நோக்குமிடத்து உணரமுடிகிறது.

### சுவடிநடை

பேச்சு வழக்கு நடை பல சுவடிகளில் காணப் பெறுகின்றன. சில சுவடிகளில் மிகவும் தெளிவற்ற கையெழுத்து இடம்பெறுவதால் படித்தறிவது மிகவும் சிரமமாகவே உள்ளது. இவ்விடங்களில் பொருள் உணர்ந்து எழுத வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. சொற்றொடரி லுள்ள எழுத்துகள் ஒன்றன்மீது ஒன்று அமைந்து மிகவும் நெருக்கமாக எழுதப்

பெற்றிருப்பதால் சொற்களை உணர்வதும், அது என்ன தொடர் என்று அறிவதும் கடினமாகிறது.

ஏடுகளில் காணப்பெறும் கையெழுத்துகளில் ஒருவர் கையெழுத்துப் போல் மற்றொருவர் கையெழுத்து இருப்ப தில்லை. ஏடெழுதியோர் பயன்படுத்திய வடிவங்களையும், குறியீடுகளையும் நூல் முழுவதும் படித்த பின்னரே முழுமையாகத் தெரிந்து கொள்ள முடிகிறது. ஆயின் அட்டவணைக்காக ஓரளவு மட்டும் சுவடியைப் பயன் படுத்தும் நிலையில் ஏடெழுதியோரின் சில எழுத்து வடிவங்களையும் குறியீடுகளையும் புரிந்து கொள்வதில் சிக்கல் ஏற்படுகின்றது. பல சுவடிகள் பிழை மிகுந்ததாக இருப்பினும், வழக்கில் சொற்கள் அப்படியும் வழங்கப்பட வாய்ப்பு இருப்பதால் அனைத்துப் பிழைகளும் திருத்தப் பெறவில்லை. இயன்றவரை பேச்சு வழக்கு, சுவடிகளில் உள்ளவாறே தரப்பெற்றுள்ளது.

குறிப்புரை என்ற பகுதியில் தரப்பெற்றுள்ள கருத்து களை மூல நூல்களோடு ஒப்பிடும் நிலையில் அவற்றில் பல மாற்றங்கள் ஏற்பட வாய்ப்புண்டு. மேலும் சுவடிகளைக் கூர்ந்து காணக்காண மாற்றங்கள் ஏற்படவும் வாய்ப்புண்டு. அதைப் போன்று கருத்துகளும் வளர்ச்சி காரணமாக மாறலாம்.

**ஆய்வுரை**

சுவடிகளில் புதைந்துள்ள பல்வேறு வகையான பொருண்மைகளைச் சார்ந்த நூல்கள் இலக்கியம் என்ற பெயரில் வெளிவந்துள்ளன. அதனை அடுத்து மொழிக்குத் துணை செய்யும் இலக்கண நூல்கள் பாரம்பரியமாகக் காப்பாற்றப்பட்டு அவையும் அச்சேறி உள்ளன. சித்த மருத்துவத்தில், ஒரு சில பகுதிகள் தேவை கருதி, பாதுகாக்கப் பெற்று அவையும் அச்சேறி உள்ளன. ஆயின் சித்தர்கள் மருத்துவத்தோடு இணைத்துப் பார்த்த சோதிடம், மந்திரம், ஞானம், உடல் அங்கவியல் (சாமுத்திரிகா இலட்சணம்) முதலான நூல்கள் பல்வேறு காலத்தில் எழுந்த அறிஞர்களின் கருத்து முரண்பாடுகளால் கேட்பாரற்றுப் போயின. மானுடத்திற்கு நன்மை தரும் சிந்தனைகளைக் கொண்டுள்ள கவனியாமல் கிடக்கும் இத்துறை நூல்கள் அறிஞர்

பெருமக்களால் நோக்கப்பெற்று நூல் வடிவில் வெளி வருமாயின் இவை உளவியல், குற்றவியல், தர்க்கவியல், மொழியியல், மானுடவியல் போன்ற பல்வேறு துறை களுக்குப் பயனுடையதாய் விளங்கும்.

இத்தொகுதியில் காணப்பெறும் 14 தலைப்புகளுள் அகராதி, நிகண்டு, இலக்கணம் ஆகியன நன்முறையில் குறைவின்றி வெளிவந்துள்ளன. தமிழ் எண்கள் காப்பாற்றப்பட்டு வந்துள்ள போதிலும் தமிழ்க் கணிதம் என்பது முழுமையாக நம்மைவிட்டு மறைந்து விட்டதாகவே தோன்றுகிறது. முகத்தலளவை, நீட்டலளவை, நிறுத்தலளவை போன்றவை காலச் சுழலில் மறைந்து போய்க்கொண்டிருக்கின்றன. அவற்றை எல்லாம் தேடிக் கொண்டு வருவதற்குக் கருத்துக் கருவூலமாக விளங்குவது சுவடிகளே. இவை, கணித்விய லுக்குப் பெரிதும் துணை செய்வன. 348:580; 348:581 என்ற எண்களில் அமைந்த கணக்கு நூல்கள் வெளிவரின் பழைய கணக்களவு முறைகளை அறிய உதவியாக இருக்கும்.

வரலாற்றின் ஒரு பகுதியாக விளங்கும் ஆவணம், கல்வெட்டுகள் தோன்றிய பின் சிறிது மங்கியும், மெய்க் கீர்த்திகள் தோன்றிய பின் முழு ஒளி இழந்தும் விட்டது எனலாம். ஆனால் சமுதாயத்தில் மக்கள், வருவாய்த் துறை தொடர்புடைய குறிப்புகளுக்கு ஆவணமாக ஓலைச் சுவடிகளையே நம்பி இருந்திருக்கின்றனர். பல பெரிய நிறுவனங்கள் நாள் செலவுக் குறிப்புகளை (Ledgure) சுருணை என்ற நீள ஏடுகளில் பதிவு செய்துள்ளன. அவற்றையெல்லாம் தேடிக் கண்டால் அன்றைய சமூக, வரவு செலவுகள், வருவாய்த் துறை நிகழ்வுகள் முதலானவற்றை அறியலாம்.

இத்தொகுதியில் வீட்டுக்கணக்கு, நிலக்கணக்கு முதலான பொருண்மைகளில் ஒன்பது சுவடிகள் உள்ளன. அவற்றுள் ஆவணங்கள் என்ற பெயர் தரப்பெற்ற (583:941) 25 ஏடுகளுள்ள ஒரே ஒரு சுவடிக் கட்டில் 23 ஆவணங்கள் உள்ளன. குதுவைக் கடன்சீட்டு, குதுவைப் பத்திரம், குதுவைக் கடன் பத்திரம், விடுதலைப் பத்திரம், உயில், இரசீது, கடன் சீட்டு, உடன்படிக்கை, தண்டல், வாயிதாப்பணம் செலுத்தல் விவரம், அடிமைச்சீட்டு, மேல் ஓலைச்சீட்டு ஆகிய வகைகளில் இந்த 23 ஆவணங்களும் அடங்குகின்றன. இவற்றுள் ஆவணப் பதிவகத்தில் பதியப்பட்ட இரண்டு உடன்படிக்கை

கள், அரசுக் கருவூல முத்திரை கொண்ட ஓலைகள் நான்கில் எழுதப் பெற்றுள்ளன.

இச்சுவடி நூலின் வழி குடிமக்களின் சொத்து விவரம், கடன் தொடர்பான விவரம், அக்கால மக்களின் வாழ்க்கை நிலை, சமுதாய நிலை, பண்பாடு, பழக்க வழக்கங்கள் முதலியன தெரிய வருகின்றன. மேலும் பொருளியல் மற்றும் சமூக வாழ்க்கையைப் பற்றிய பல செய்திகளை நேரடியாகவும், சிலவற்றை யூகித்தும் பெறமுடிகிறது. குறிப்பாகச் சாதி, சாதிப்பிரிவு, உறவுமுறை பல பெண்டிரைத் திருமணம் செய்து கொள்ளும் பழக்கம், கொத்தடிமைமுறை, நில அமைப்பு, கிராம அமைப்பு, ஊர்ப் பெயர்கள், வழக்குச் சொற்கள், பொருட் களின் பெயர்கள் போன்றன பற்றியும் அறியமுடிகிறது. இச்சுவடி நூலைப் படியெடுத்து ஆய்வுக்குட்படுத்தினால் இதன் வழி மேலும் பல அரிய புதிய உண்மைகளும், ஆர்வமிக்க சுவையான சமுதாயச் செய்திகளும், வரலாற்றுச் செய்திகளும் தெரியவரும்.

ஆருடம், சோதிடம் போன்றவை புறக்கணிக்கப்படக் கூடிய நிலையில் ஒரு புறம் இருப்பினும், மக்களிடையே மிகுந்த செல்வாக்கைப் பெற்றுள்ளன என்பதையும் மறுத்தற்கியலாது. தற்போது தமிழ்ச் சஞ்சிகைகள், தொலைக்காட்சி போன்றன இவற்றிற்கும் முக்கியத்துவம் தந்திருக்கின்றன. இவற்றில் பொதிந்துள்ள அறிவியல் கருத்துகளும், சமுதாய நடைமுறை களும் பண்பாட்டின் ஆழத்தைக் காட்ட வல்லன. இத்தகு சுவடிகளை வெளிக் கொணர்ந்தால், வானசாத்திரத்தின் ஒரு பகுதியாக விளங்கும் சோதிடக் கலையில் அன்றைய மக்கள் எவ்வளவு தேர்ச்சி பெற்றிருந்தனர் என்பது தெரிய வரும்.

இத்தொகுதியில் பெயர் ராசி பார்த்தல், திருமணப் பொருத்தம் காணல், இன்னற் காலத்தில் கோள்நிலை யறிதல், தசாபுத்திப் பலன், கோச்சாரம், தொடுகுறிப் பலன் என, பல பொருள்களில் சோதிட நூல்கள் காணப்படுகின்றன. புரியத்தக்க எளிய நடையில் அமைந்த நூல்களும் உள்ளன. இத்தகு சோதிட நூல்களை ஆய்ந்து வெளியிடுவது பெரும் பயன் விளைப்பதாம்.

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன சித்தர்கள் கண்ட பேரின்பத்திற்குரிய மார்க்கம். இதில் சைவ சமயத்தார் அல்லது

தத்துவவியலார் கொள்ளும் பொருளுக்கும் சித்தர்கள் சொல்லும் பொருளுக்கும் வேறுபாடு உண்டு. இவை தொடர்பான நூல்கள் பதிப்பிக்கப் பெறின் பல்வேறு சித்தர்கள் பேசும் பல பொருண்மைகளை ஓரிடத்தில் கண்டு ஆய்வு மேற்கொண்டு அறிவியலுக்கு ஏற்றம் தரும், பல செய்திகளைப் பெறமுடியும்.

ஞானம் தொடர்பான பல செய்திகளைக் கொண்ட தர்க்க ஞான காவியம் *(391:635)* என்ற நூலும், ஞானம் தொடர்பான சில நூல்களின் தொகுப்பாக அமையும், நீலகண்டம் பன்னிரெண்டத்தியாயம் *(377:618)* என்ற நூலும், பிரமதர்க்க நிச்சயம் *(232:446)* என்ற நூலும் வெளிவரத் தக்க நூல்களாகும்.

பொதுவாகப் பூசைமுறை என்பது சித்தர்களைப் பொறுத்த வரை ஒரு நிகழ்வுக்குச் செய்யப்பெறும் முதற்செயல்முறை. அதாவது இரசமணி, முப்பு, செயநீர் இவற்றில் ஒன்றைச் செய்யப் புகுமுன் அம்மருத்துவர் மேற்கொள்ள வேண்டிய வழிபாட்டு நெறிமுறைகளைக் கூறுவது. சமயத் தத்துவத்தார் கூறும் பூசை முறைக்கும் இதற்கும் வேறுபாடுண்டு. முன்னது மருந்து செய்ய வழி வகுப்பது. பின்னது இறைவனுக்குரிய சடங்கு. பூஜாவிதி *(269:491)*, பூஜாவிதி, தீட்சாவதி *(105:209)* முதலானவை அச்சுருக்காண வேண்டிய நூல்கள்.

ஞான பூசைத் திருவிருத்தம் என்ற நூலில் *(167:356) 1-8* எண்சீர் விருத்தப் பாடல்கள் உள்ளன. இந்நூலிற்கான உரை மட்டும் ஞான பூசைத் திருவிருத்தவுரை என்ற நூலில் *(138 : 277)* இடம்பெறுகின்றது. இச்சுவடி போன்று பல்வேறு இடங்களில் பல சுவடிகள் உள்ளன. இந்நூலைப் பதிப்பித்தால் மேற்கண்ட சுவடிகளுக்கு எழுத்துருவிலான பாடவேறுபாடு நூலாக அமையும்.

இத்தொகுதியில் **சல்லியம்** என்ற பெயரில் பல சுவடிகள் உள்ளன. சல்லிய முனிவர் எழுதிய சல்லியம் என்ற நூல் அதர்வண வேதத்தைப் பின்பற்றி எழுந்த நூல் என்பது அறிஞர் பலரின் கருத்து. இங்குக் கிடைக்கக் கூடிய சுவடிகள் அந்நூலோடு தொடர்புடையனவா என்று கண்டு, தொடர்புடையதாயின் எவ்வகைப் பகுப்பில் அது அடங்குகிறது என அறிதல் வேண்டும். மருத்துவத்தில்

எவ்வாறு அகத்தியர் பெயரைப் பயன்படுத்தி நூல்கள் எழுந்தனவோ அது போன்று சல்லிய முனிவரின் பெயரைப் பயன்படுத்தி நூல்கள் எழுந்துள்ளனவா என்பதும் அறியப்படுதல் வேண்டும். ஏனெனில் ஒட்டியம், சல்லியம் நீங்கலாகப் பிறிதொரு தமிழ் நூல் இல்லை யென்பது குறிப்பிடத்தக்கது. இவ்வகையில் இத்தொகுதியில் காணப்பெறும் தோடம் கழிப்பு, நவரத்தினவராகி மாலை *(214:424)*, மோடிவித்தை; வாலைதேவி மனோன் மணிமாலை முதலான சுவடிகள் அச்சுருக்காண வேண்டிய சிறந்த நூல்களாகும்.

மூச்சு ஓட்டத்தைக் கொண்டு பலனறியும் முறை சரசாத்திரம் எனப் பெறுகின்றது. இத்தொகுதியில் இது குறித்து இரு சுவடிகள் *(487 : 745; 206:413)* உள்ளன. சரசாத்திர நூல்கள் அச்சு வடிவிலே குறைவாக இருப்பதாலும், எந்தக் கலையும் அழியாமல் பாதுகாக்கப்பட வேண்டுமென்பதாலும் இவை பதிப்பிக்கப் பெறுதல் வேண்டும்.

மருத்துவச் சுவடிகளைப் போன்று சோதிடம், மந்திரம், ஞானம் போன்றவற்றிலும் தனக்குத் தேவையான பல நூல் செய்திகளைத் தொகுத்து ஒரு சுவடியில் எழுதும் முறை காணப்பெறுகின்றது. இத்தகைய சுவடிகள் குறிப்பிட்ட தலைப்போ நூற்பெயரோ இன்றி உரைநடை நூல்களாகவும் பாடல் வடிவிலான நூல்களாகவும், உரைநடையும் பாடலும் கலந்த நூல்களாகவும் காணப்படுகின்றன. இவை பல ஆசிரியர்களால் இயற்றப் பெற்றவை. முன்னோர் மொழிப் பொருள், அனுபவத்தில் பெற்ற உண்மைகள் போன்றவற்றை முதன்மையாகக் கொண்டு இந்நூல்கள் எழுந்துள்ளன. ஒரு நூலின் சில பகுதிகளை அல்லது பல பொருண்மையுடைய ஒரு நூலிலிருந்து தனக்குத் தேவையான பொருண்மையை, கொண்டு எழுந்த சுவடிகளும் உள்ளன.

காட்டு: **அகத்தியர் தண்டகம் நூறில் ஞானம்** (தாள்*:1:5)* அகத்தியர் தண்டகத்தில் 101 பாடல்கள் உள்ளன. அதிலுள்ள ஐந்து பாடல்கள் மட்டுமே இந்நூலில் எழுதப்பெற்றுள்ளன. இத்தகைய சுவடி நூல்களிலும், பல நூல்களிலிருந்து திரட்டி எழுதப்பெற்ற சுவடி நூல்களிலும் பல அரிய செய்திகள் பொதிந்துள்ளன. இவற்றை எல்லாம் ஆய்வுக்குட்படுத்தி வெளிப்படுத்தும் நிலை விரைந்து உருவாதல் வேண்டும்.

மனைசாத்திரம் தொடர்பான நூல்கள் அறிவியல் கலையில் ஒன்றான கட்டடக் கலையுடன் தொடர்புடையது. பொறியியல் சார்ந்த இம்மனை நூல்களைக் கட்டடக் கலைக் கோட்பாடுகளோடு ஒப்பிட்டு நூல்கள் வெளிவரின் அவை சமுதாயத்திற்குப் பெரிதும் பயனுடையதாய் அமையும்.

சில சுவடிகளின் இறுதியில் அட்டவணை (Index) உள்ளது. இதில் குறிப்பிட்ட ஒரு சுவடிக் கட்டில் உள்ள நூல்களின் பெயரும், பாடல்களின் எண்ணிக்கைகளும், யாப்பு பற்றிய விவரமும் உள்ளன. இதிலிருந்து சுவடியில் இருந்து விடுபட்ட நூல்களை அறியமுடிகிறது.

# தமிழ்ச் சுவடிகளின் விளக்க அட்டவணை

சுவடிகளைத் திரட்டிப் பாதுகாக்கும் கடமைகளைப் பல அமைப்புகள் மேற்கொண்டுள்ளன. அங்ஙனம் திரட்டப் பட்ட சுவடிகளைத் தொகைவகை செய்து தெளிவும், திட்பமும், நுட்பமும் செறிந்த முறையில் ஆய்வாளர்களின் பயன் பாட்டிற்கு அளிப்பது விளக்க அட்டவணை.

### அட்டவணை - சொல்லும் பொருளும்

அட்டவணை எனும் சொல்லிற்குப் பொருட்குறிப்பு, விவரங்களை முறைப்படுத்திப் பல வகைகளில் காட்டுவது. (Lexicon, 1982, தொகுதி *1. ப.4*), வரிசைக் குறிப்பு, பட்டியல், அகர வரிசையில் அமைக்கப்பட்ட பட்டியல், சேர்க்கப்பட்டது, சொல்லப்பட்ட காரியத்திினொழுங்கு (இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, ப.37) என்ற பல பொருட்களை அகராதிகள் தருகின்றன. பணவிடுதூது என்ற நூலில் வரும், 'அட்டவணை யிட்டதுபோ லத்தனையுந் தானிருந்து' (3) என்ற தொடரில் அட்டவணை எனும் சொல்லாட்சி கையாளப் பெற்றுள்ளது.

### நூலகப் பயன்பாட்டில் சுவடி அட்டவணைகள்

நூலகங்களில் ஒழுங்கும் தூய்மையும் செய்யப்பட்ட சுவடிகளுக்கு எண் இடப்படும். சுவடிக் கட்டுகளுக்குக் கொடுக்கப் பெறும் வரிசை எண் **கட்டு எண்** எனவும், அச்சுவடிக் கட்டிலுள்ள நூல்களுக்குக் கொடுக்கப்பெறும் வரிசை எண் ***'நூல் எண்'*** எனவும் பெயர் பெறுகின்றன. இச்சுவடிகளைப் பதிவு செய்து வைக்கப் பதிவேடுகள், வழிகாட்டிகள் என்ற இருபதிவேட்டு முறைகள் பயன் படுத்தப்படுகின்றன.

### பதிவேடுகள்

சுவடி பற்றிய வரலாற்றை அறிய உதவுவது சுவடி வரவுப் பதிவேடு, சுவடிகளைப் பயன்படுத்துவோர் சுவடிகளின் இருப்பை அறிய உதவுவது இருப்புப் பதிவேடு. ஓர் எண்ணுள்ள சுவடி எந்தக் கட்டில் உள்ளது என்பதை அறியவும், சுவடிகளைச் சரிபார்க்கவும் துணைபுரிவது கட்டு எண் பதிவேடு. ஒவ்வொரு சுவடியையும் இம் மூவகைப்

பதிவேடுகளிலும் பதிவு செய்தல் வேண்டும். ஓலைச் சுவடிகளுக்கு, தாள்களுக்குத் தனித்தனி பதிவேடுகள் வைக்கலாம். ஒரே பதிவேடாயின் முதல் இருவகைப் பதிவேடுகளிலும் ஒரு வரிசை ஒதுக்கி ஓலையா தாளா எனக் குறிப்பிடலாம்.

**வழிகாட்டிகள்**

நூல் பெயர் அகர வரிசை (பொதுப் பட்டியல்), ஆசிரியர் பெயர் அகரவரிசை, பொருள்வாரி அகர வரிசை என வழிகாட்டிகளும் மூன்று வகையாக அமைகின்றன. இவற்றை அறைப் பெட்டிகளில் வரிசைப்படுத்தி வைப்பது சுவடியைப் பயன்படுத்துவோருக்கு எளிதாகிறது. அச்சு நூலுக்குரிய அட்டைகளில் தரப் பெற்றிருக்கும் பதிப்பு, ஆண்டு முதலிய விவரங்கள் சுவடிக்குரிய அகர வரிசை அட்டைகளில் இடம் பெற்றிருக்காது.

**முதற் சுவடி அட்டவணை**

வெளிவந்த தமிழ் நூல்களைப் பற்றிய வரலாற்றினை அறிய வழிகாட்டியாய்த் தமிழ் நூல் விவர அட்டவணை' *1960*-ஆம் ஆண்டு முதல் பல நூற்றொகுதிகளில் வெளி வரத் தொடங்கின. இதற்கும் முன்பே சுவடிகளை எளிதில் எடுத்துப் பயன்படுத்தச் சுவடி அட்டவணைகள் வெளி வரத் தொடங்கிவிட்டன.

ஏட்டிலேயே சுவடி விவரம் எழுதப் பெற்ற குறிப்புச் சுவடி சரசுவதி மகால் நூல் நிலையத்தில் உள்ளது. கி.பி.*1801* ஆம் ஆண்டு எழுதப்பெற்ற பனையோலை சுவடியில் தமிழ்த் துறைச் சுவடிகளின் பட்டியல் தெலுங்கு லிபியில் உள்ளது. பின்பு கி.பி.*1842* ஆம் ஆண்டு வரகப்பய்யர் உத்தரவின் பேரில் மோடி எழுத்தில் இந்நூலகச் சுவடிகளின் பட்டியல் சுவடியில் எழுதப் பெற்றிருக்கிறது. கி.பி.*1857* இல் பனையோலைச் சுவடியில் தொகுக்கப் பெற்ற ஒரு பட்டியலும், நோட்டுப் புத்தகத்தில் எழுதப்பெற்ற ஒரு பட்டியலும் ஆக இரண்டு உள்ளன. *1925* ஆம் ஆண்டில் இந்நூல் நிலையச் சுவடி விவரம் அச்சில் வெளிவந்தது. சுவடி விவரங்களை ஏட்டில் எழுதிப் போற்றிய சிறப்பினை இந்நூல் நிலையம் பெற்றுள்ளமை வரலாற்றுச் சிறப்புடைய ஒரு நிகழ்வாகும் (தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணை, தொகுதி-*1*, முகவுரை. பக். xxxii)

**சுவடி அட்டவணை**

இச்சுவடி அட்டவணைகள் இருவகையில் அமைகின்றன. சுவடி பற்றிய சுருங்கிய குறிப்புகளைத் தரும் நூல், 'அட்டவணை' என்றும், விரிவான செய்திகளைத் தரும் நூல் 'விளக்க அட்டவணை' என்றும் கூறப் பெறுகின்றன.

**அட்டவணை**

இது குறைந்த அளவே செய்திகளைத் தருவதால் இதனைச் 'சுருக்க அட்டவணை அல்லது குறிப்பு அட்டவணை' என்றும் கூறுதற்கியலும். இம்முறையில் சில அட்டவணைகள் வெளிவந்துள்ளன. அவ்வகையில் 3440 தமிழ்ச் சுவடிப் பெயர்களைக் கொண்ட அட்டவணையைக் கேரளப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது. இந்நூலகத்தி லுள்ள 1091 தமிழ்ச் சுவடிகளுக்குரிய அட்டவணையை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 1979 இல் வெளியிட்டுள்ளது. கல்கத்தா தேசிய நூலகச் சுவடி விவரங்களை முதலில் சென்னைப் பல்கலைக் கழகமும், பின்னர் அந்நூலகமும் வெளியிட்டுள்ளன. அ. கிருட்டினமூர்த்தி (4000 சுவடிகள்), டாக்டர் அ, தாமோதரன் ஆகியோர் ஐரோப்பிய நூலகங்களி லுள்ள தமிழ்ச் சுவடிகளுக்கு அட்டவணை தயாரித்துள்ளனர்.

1985 ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் வரை தஞ்சை, தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் தொகுப்பில் இருந்த சுமார் 1123 தமிழ் ஓலைச் சுவடிகளுக்கு இப்பல்கலைக் கழகத்தின் வழி "International Catalogue of Tamil Palm leaf Manuscripts" என்ற அட்டவணை வெளிவந்துள்ளது. கணிப்பொறியின் வழி வெளிவந்த முதல் அட்டவணை நூல் இதுவாகும். இதில் இடம் பெற்றுள்ள சுவடிகளின் ஆசிரியர் பெயர், நூற்பெயர், நூல் செய்யுளா, உரைநடையா, ஏடு எத்தனை இதழ்களைக் கொண்டவை, முழுமையான சுவடியா, குறைச் சுவடியா, சுவடிக்குத் தரப்பெற்றுள்ள எண் ஆகியவை இவ்வட்ட வணையில் இடம் பெறுகின்றன. சுவடிகளுக்குப் பொருளட்ட வணைப்பட்டியல், இப் பொருளடைவில் அவ்வப் பொருள் களுக்கு உரிய சுவடிகளைத் தந்து, எல்லாச் சுவடிகளையும் தொடர் எண் குறிப்புடன் கணிப்பொறியில் ஏற்றியுள்ளனர். இந்நூல் முழுமையும் ரோமன் எழுத்தில் அமைந்துள்ளது.

ஒவ்வோர் ஆசிரியருக்குமுரிய நூற்சுவடிகளின் எண்ணிக்கையும் ஓர் இணைப்பில் இடம் பெற்றுள்ளது. பொதுவாக இத்தொகுதியில் உள்ள மதிப்பீட்டுக் குறிப்புகளும் தனியாகத் தரப்பெற்றுள்ளன. இவ்வட்டவணை ஆசிரியரை முதன்மையாக வைத்துப் பொருளடிப்படையில் தொகுக்கப் பெற்றுள்ளது.

### பேரட்டவணை

இக்கணிப்பொறியின் உதவியுடன் 21973 ஓலைச் சுவடிகளைப் பற்றிய செய்திகள் பேரட்டவணையாக **அனைத்துலகத் தமிழ் ஓலைச் சுவடிகள் அட்டவணை** என்ற பெயரில் ஐந்து தொகுதிகளில் தமிழில் வெளி வந்துள்ளன. இவை தமிழ்ப் பல்கலைக் கழகம், தமிழ் நாட்டின் பல்வேறு பகுதி, ஐரோப்பிய நாடுகள் உட்பட 46 வெளிநாட்டு நூலகங்கள் போன்றவற்றிலிருந்து தொகுக்கப் பட்ட, சிறுசிறு தொகுப்புகளின் பெருந்தொகுப்பாக அமைகின்றது. இவை பகுத்தாய்வு செய்யப்பட்ட பொருள் தலைப்புகளில் தொகுத்து வழங்கப்பட்டுள்ளன.

இத்தொகுப்பு நூல் 626 பொருள்களின் கீழ் வருமாறு அடைவு செய்யப் பெற்றுள்ளது. இதில் நூலகத்தைக் குறிக்கும் எண் குறிப்புடன் அவ்வந் நூலகத்திலே சுவடிகளுக்குத் தரப் பெற்றுள்ள எண் குறிப்பும் கொடுக்கப் பெற்றுள்ளன. முற்குறித்த கணிப்பொறி அட்டவணை போன்று இந்தப் பெருந்தொகுப்பும் முக்கியமான சில செய்திகளைக் கொண்டு அமைந்துள்ளது. இந்த ஐந்து தொகுதிகளும் மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டுள்ளன. முதல் பிரிவில் (பகுதி-1) 21973 ஓலைச் சுவடிகளின் பட்டியல்கள் பகுத்தாய்வு செய்யப்பெற்ற பொருள் தலைப்புகளில் தொகுத்து வழங்கப் பெற்றுள்ளன. இரண்டாம் பிரிவில் (பகுதி-2) குறிப்பட்டவணை கொடுக்கப் பெற்றுள்ளது. மூன்றாம் பிரிவில் (பகுதி-3) நூலடைவு ஆய்வு பற்றிய புள்ளி விவரம் வழங்கப் பெற்றுள்ளது.

### விளக்க அட்டவணை

சுவடிகள் ஒவ்வொன்றையும் பற்றிய விரிவான செய்திகள் தரப்பட்டால்தான் குறித்ததொரு நூல் பற்றிய விவரங்களைத் தெரிந்துகொள்ள முடியும். எனவே நூற் பெயர் மட்டுமன்றி

அதன் உள்ளடக்கமும் தெளிவுற விரிவாகத் தெரிவிக்கப்பட வேண்டும். தேவைப்படும் சில சுவடிகளை அகர வரிசை அட்டைகளின் வழி தேர்ந்து, அவற்றை எடுத்துப் பார்க்காமலே பதிப்பித்தல் தொடர்பான முடிவுக்கு வருவதற்கும், பிற இடங்களில் உள்ளவர் சுவடிகளைப் பற்றிய குறித்த செய்தி களை அறிதற்கும், அரிய மற்றும் மிகவும் இன்றியமையாத தமிழ் ஓலைச்சுவடிகளைக் கண்டறிந்து அவை அழிந்து போகாமல் பேணிப் பாதுகாப்பதற்கும், அச்சிடுதற்கும், இந்திய நாட்டிலும் வெளிநாட்டிலும் உள்ள ஆய்வாளர்க்குத் தமிழ் ஓலைச் சுவடிகள் பற்றிய செய்திகள் தெரிய வருதற்கும், அகராதி தொகுத்தல், இலக்கிய ஆய்வு, வரலாற்றாய்வு, மொழியியல் ஆய்வு முதலிய துறைகளில் ஈடுபட்டுள்ள ஆய்வாளர்க்கு வழிகாட்டியாய் அமைதற்கும் முறையாகத் தயாரிக்கப்பட்ட விளக்க அட்டவணைகள் பெரிதும் உறுதுணை புரியும்.

சுவடிகளுக்கு, சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூலகம் (1912 முதல் 1995 வரை 26 தொகுதிகள்), உ.வே. சாமிநாதையர் நூலகம் (ஆறு தொகுதிகள், 2300 ஓலைகள்; 700 தாள்கள்), அடையாறு நூலகம் (2 தொகுதிகள்), ஆசியவியல் நிறுவனம் (தொகுதிகள் 5; பகுதிகள் 10) தஞ்சைப் பல்கலைக் கழகம் (7 தொகுதிகள்), சரசுவதி மகால் நூல் நிலையம் (ஏழு தொகுதிகள்) போன்ற அமைப்புகள் விளக்க அட்டவணை வெளியிட்டுள்ளன. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் கேரளப் பல்கலைக்கழக விளக்க அட்டவணையை (ஒரு தொகுதி) வெளியிட்டுள்ளது. இந்நிறுவனச் சுவடிகளின் விளக்க அட்டவணை பொருளடிப்படையில் நான்கு தொகுதிகளில் வெளிவருகின்றது. மேலும் இந்நிறுவனம், சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூலகத்திலுள்ள 16389 தமிழ்ச் சுவடிகளுக்கு, கூடுதல் செய்தியுடன், திருந்திய விளக்க அட்டவணை களை வெளியிடும் பணியினை மேற்கொண்டுள்ளது.

ஆசியவியல் நிறுவனம் தமது நிறுவனத்திற்கும் (தொகுதி இரண்டு; பகுதி மூன்று) திருவாவடுதுறை ஆதீனத்திற்கும் (தொகுதி ஒன்று; பகுதி இரண்டு); உ.வே.சா. நூலகத்திற்கும் (தொகுதி இரண்டு; பகுதி நான்கு), சித்த மருத்துவ ஆய்வு மையத்திற்கும் விளக்க அட்டவணைகளை வெளியிட்டுள் ளது. ஆசியவியல் நிறுவன அட்டவணையின் இரண்டாம்

தொகுதியில் ஒரு பகுதி அந்நிறுவன அட்டவணைக்கும், இரண்டாம் பகுதி சித்த மருத்துவ ஆய்வு மையத்திற்கும் வந்துள்ளது. இப்பணி தொடர்ந்து சித்த மருத்துவ ஆய்வு மையத்திற்கு நடைபெற்று வருகிறது. இந் நிறுவனமும், அடையாறு நூலகமும் (தியாசபிகல் சொஸைட்டி) ஆங்கிலத்திலும், சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூலகம் தமிழிலும் ஆங்கிலத்திலும் அட்டவணைகளை வெளியிட்டுள்ளன. இவ்வட்டவணைகளைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் அமைத்தல் பயனுடைய தாகும்.

குறிப்பட்டவணை மிகுதியான சுவடிகளுக்கு வெளி வந்திருப்பினும் அவற்றின் உதவியுடன் எதனைப் பதிப்பிப்பது, அது அச்சாகாமல், பதிப்பிக்கும் நிலையிலுள்ளதா, ஒப்பீட்டிற்கு மாற்றுச் சுவடிகள் எங்கெங்கு உள்ளன என்பனவற்றை அறிதற்கியலாது. எனவே எண், நூல், ஆசிரியர், நூற்பொருள், செய்யுளா, உரைநடையா, மொத்த ஏடு, மொத்தச் செய்யுள், நீளம், அகலம், ஒருபக்கத்திலுள்ள வரிகள், ஓலையின் நிலை, ஏட்டெழுத்தின் நிலை, முழுமை, குறை, சிதைவு, தொடக்க, முடிவுப் பாடல்கள், ஏட்டின் காலம், அச்சானதா, இல்லையா, மாற்றுச் சுவடிகள் காணுமிடங்கள், சுவடி பற்றித் தெரிய வேண்டிய தொடர்புடைய செய்திகள், நூலுக்குப் புறம்பான செய்திகள் என்பன போன்ற பல விளக்கங்களை உள்ளடக்கிய விளக்க அட்டவணை அனைத்துத் தமிழ்ச் சுவடிகளுக்கும் ஏற்படுத்தப் பெறுதல் வேண்டும். மாற்றுச் சுவடிகள் காணுமிடங்கள், அச்சான விவரம் போன்றவற்றைத் தருவதற்குக் கால நெருக்கடி, தமிழ் நூல்களின் விவர அட்டவணை கிடைக்காமை போன்றவை இடையூறாக அமைந்து வெளிவந்த அட்டவணைகள் பலவற்றில் இதுபோன்ற சிறப்புச் செய்திகள் விடுபடக் கூடிய நிலை காணப்படுகின்றது. இனி வருவன வற்றில் இத்தகைய குறைபாடுகள் தவிர்க்கப்படுவதற்கான வசதி வாய்ப்புகள் ஏற்படுத்தப்பட வேண்டும்.

தஞ்சைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள அனைத்துலகத் தமிழ்ச் சுவடிகளின் அட்டவணைகளை, விளக்க அட்டவணைகளாக மாற்றும்போது அதன் பலன் முழுமையாக நுகர்வோரைச் சென்றடையும். எனவே கணினியிலுள்ள குறிப்பட்டவணையில் ஏற்கனவே தயாரிக்கப்பட்ட விளக்க அட்டவணைகள் சேர்க்கப்பட்டு, இல்லாதவற்றிற்குத்

தயாரிக்கும் பணி மேற்கொள்ளப்பட்டு, ஆங்கில மொழிபெயர்ப்புடன் இவ்வட்டவணைகள் விரிவாக்கம் செய்யப்பட வேண்டும். வணிக நோக்கிலான தனியார், தனிக் குடும்பங்கள், பிற இடங்கள் என அனைத்து இடங்களிலு முள்ள சுவடிகளின் விளக்க அட்டவணையை அறியும் முயற்சி மேற்கொள்ளப்பட்டுக் கணினியில் சேர்க்கப்படுதல் வேண்டும். கணினி வலை யமைப்பின் (Net work) வழியாகச் சுவடி ஆய்வு மையங்களும், பதிப்பு மேற்கொள்ளு மிடங்களும் இவ்வட்டவணைகளைக் கணினியின் வழி பயன்படுத்தும் வாய்ப்பினை ஏற்படுத்த வேண்டும். தேவைப்படின் இணையத்தின் (Inter net) வழியாகப் பிற மாநில பல்கலைக் கழகத்தைச் சேர்ந்தவர்களும், வெளிநாட்டினரும் தகவலைப் பெற்றுப் பயன் பெறலாம்.

எளிய முறையில் தகவலை மீட்டுப் பெறுவதற்கான திரை வடிவமைப்பை (Friendly type menu retrival) கணினியில் ஏற்படுத்த வேண்டும். இதன் வழி விசைப் பலகையின் பயன்பாட்டைத் தவிர்த்து தகவல்களைத் திரையில் பார்க்க முடியும். இக்கணினியின் வழி அட்டவணைகளை நுகர்வோர் தேவைக்கேற்பப் பல்வேறு நோக்கில் எளிதாகப் பயன்படுத்திக் கொள்ள முடியும்.

அச்சிட விரும்பினால் கால விரயமின்றி நேரடியாக ஒளிக் கோர்வைக்கு (Off-set) அனுப்புதலும் இயலும். மேலும் தேவைப்படும் அளவுக்குத் தேவைப்படும் பகுதிகளையும் பெறுதல் இயலும் (மருத்துவத் தொகுப்பு, சிற்றிலக்கியத் தொகுப்பு). தமிழ், ஆங்கிலம், தமிழும் ஆங்கிலமும் என்ற மூன்று நிலைகளில் அச்சு நூலை வெளிக் கொணர்தலும் இயலும்.

# 1. அகராதி

## 806. அகராதி

**அ.** **143:319;** **ஆ.** *1-102* ஏடுகள்; **இ.** 42.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *6-9* வரிகள்; **உ.** சுமாரான நிலை; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

### தொடக்கம்

அம்பிகைபாகன் - சிவன்
அம்பியம் - கள்
அம்பு - எலுமிச்சை, தாமரை, நீர், மூங்கில், மேகம்
அம்புதம் - நீர் மேகம்
...........
அன்று - அந்நாள், அசைச்சொல்
அன்ன - உவமைச் சொல்
அன்னம் - ஓர்புள், சோறு, கவரிமான், பிரமன் வாகனம்
அன்னவூர்தி - பிரமன்
அன்னியம் - குயில்

### முடிவு

நிவப்பு - உயர்ச்சி
நிவர்தல் - ஓங்கல்
நிவறல் - நுணுக்கம், மொய்த்தல்
நிவாரணம் - நீங்கல், விடுத்தல்

### குறிப்புரை

சொற்களுக்குரிய பொருள்களை முறையாகக் கூறுவதுடன் அகரவரிசை முறையும் ஒழுங்காக அமைந்துள்ளது. 62 வரை ஏடுகளுக்கு எண்கள் கொடுக்கப் பெற்றுள்ளன. அடுத்து வரும் ஏடுகளுக்கு எண்கள் கொடுக்கப் பெறவில்லை.

## 807. சதுரகராதி

**அ.**35:59; **ஆ.** *1-260* ஏடுகள்; **இ.** 30 x 2.5 செ.மீ.; **ஈ.** *6* வரிகள்; **உ.** *6, 8, 9, 12, 36, 60, 67, 82, 86, 102, 105, 139, 189, 198, 199, 200, 207, 215, 228, 239, 241, 245, 246* ஆகிய ஏடுகள் இடையிடையே காணப்பட வில்லை; **ஊ.** சுமாராக உள்ளது; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

**மூவுல கனைத்து முயன்றடி யேத்த**
**யாவுல கனைத்து மேந்தியாள் கடவுளை**
**பணிந்துனான் சூடிய பதமல ருலகெலாம்**
**பணிந்து வாழ்த்த வருந்தமி ழைம்பொருள்**
**மதுர வனாதி வளந்தரச்**
**சதுரக ராதி சாற்று மன்றே**

சிவசண்முக மெஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க. சிவம்.

அகக்காழ் - உள்வயிரம்
அகங்காழ் - உள்வயிரம்
அகங்கை - உள்ளங்கை
அகடு - உள், நடு, பொல்லாங்கு
அகணி - உள், மருதநிலம், வயல்.

### முடிவு

வெளவல் - கொள்ளையிடல், பிடித்தல், வாருதல்
வெளவால் - வீட்டினிறை ஒரு மிருகம்
வெளவியம் - துன்பம்

வவ்வரித் தொகுதி முற்றும். பத்து தொகுதியாகப்
பெயரகராதி முற்றும்.

### பிற்குறிப்பு

பவ வருஷம் ஆனி மாதம் *19* சுக்கிரவாரம் உதித்து, அஞ்சு நாழிகைக்கு எழுதி நிறைவேறினது. சபாபதி கையெழுத்து.

### குறிப்புரை

வீரமாமுனிவரின் சதுரகராதி எனும் நூலின் முதலாவது பெயரகராதி மட்டும் வகர வரிசை முடிய முற்றுமுள்ளது. சபாபதி கையெழுத்து என்று இருப்பதால் ஏடு எழுதியவர் பெயரை அறிய முடிகிறது.

# 2. நிகண்டு

## 808. உரிச்சொல் நிகண்டு

**அ.** *19:38;* **ஆ.** *67-93* ஏடுகள்; **இ.** *18.5X3.5* செ.மீ. **ஈ.** *9-11* வரிகள் **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

முதலாவது தெய்வப்பெயர்த் தொகுதி

திருமாலுஞ் செங்கமல மாயோனும் காணா
பெருமான் பிறைசூடும் பெம்மா னருண்மூர்த்தி
நன்னெஞ்சி னான்மறையோன் றில்லை நடம்புரிவா
னென்னெஞ்சின் மேய விறை (1)

காப்பு முற்றும்

முடிவு

தலப்பச்சை வண்ணம் பலாச மாகும்
பாடலம் சிவப்புப் பாதிரி யாகும்
நலம்சேர் மருந்தும் வெளுப்பும் அருச்சுனமாகு
மருமை சிவப்புமா னாம்

குறிப்புரை

இச்சுவடியில் முதலாவது தெய்வப்பெயர்த் தொகுதி தொடங்கி, பத்தாவது, ஒரு சொற்புல்பொருட் பெயர்த் தொகுதி முடிய உள்ளது. ஆயினும், பத்தாவது தொகுதி 34 ஆம் பாடல்வரை மட்டுமே காணப்படுகிறது. பாடல்களும் முறையற்றுக் காணப்படுகின்றன.

## 809. சூடாமணி நிகண்டு

**அ.** 19:37; **ஆ.** *1-66* ஏடுகள்; **இ.** *18.5* X 3.5 செ.மீ; **ஈ.** 9-11 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச்சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

காப்பு

முடிவிலின் பத்து மூவா முதல்வனைப் போற்றி செய்தே
அடிதொறு மிரண்டு மொன்று மாதியிற் பொருள டக்கி
நடைபெறு ககர மாதி னகரவீ ரெதுகை யாகப்
படியிலோர் சொற்பொ ருட்பல் விதத்தொகை பகர
லுற்றாம்

நூல்

பகவனே யீசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்
பகலேநா ளொருமூ கூர்த்தம் பகலவ னடுவே தேசு
மகரமே சுறாப்பூந் தாதாம் வசிகூர்மை வசியம் வாளே
அகமன மனையே பாவ மகலிட முள்ளு மாமே

முடிவு

அன்பினை யொடுபெ யர்க்கும் விகுதிசா ரியையு மாகும்
மன்னிடுங் கனைத்த லென்ப திருளோசையி ருபேர்
வைக்கும்
இன்னை வொருசொற் பல்போர்க் கியற்கவி முந்நூற்
றொன்பான்
சொன்வென் குணபத் திரன்றாள் சூடுமண் டலவன்
றானே

ஆக விருத்தம் *309*

குறிப்புரை

'ககர வெதுகை' தொடங்கி 'னகரவெதுகை' முடிய **309 விருத்தங்கள்** உள்ளன.

## 810. சூடாமணி நிகண்டு

**அ.** 28:50; **ஆ.** *1-126* ஏடுகள்; **இ.** *37.5X3* செ.மீ.; **ஈ.** *8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு: **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் அம்பலவன்
ஞானகுரு வாணியையுண் நாடு

சிவமயம்

பொன்னுநன் மணியு முத்தும் புனைந்தமுக் குடைநி ழற்ற
மின்னுபூம் பிண்டி நீழல் வீற்றிருந் தவனை வாழ்த்தி
மன்னிய நிகண்டு சூளா மணியென ஒன்று சொல்வன்
இன்னிலந் தன்னின் மிக்கோர் யாவரு மிருந்து கேண்மின்!
(1)

சொல்லொடு பொருளு ணர்ந்தோன் சோதிட நீதி
வல்லோன்
நல்லறி வாலன் எங்க ணறுங்கோன் ஞான மூர்த்தி
பல்லுயிர்க் கொருதா யாகும் பரமமா முனிவன் மெய்ந்நூல்
வல்லுநர் வல்லார்க் கெல்லாம் வரையற தரையில் வந்து
(3)

முடிவு

வரைத்தவிப் பலபேர் கூட்டத் தொருபெயர் தொகுதி
தன்னில்
விருத்தமூ வைம்ப தின்மேல் மிகுதிபன் னொன்றும்
செய்தான்
செருக்குயர் ஞான சீலம் தரிசன மிவையே பூண்டோன்
மருக்கிலா பொழில்சூழ் வீரை மன்னன் மண்டல
வன்றானே

பன்னிரெண்டாவது பலபெயர்க் கூட்டத்து ஒருபெயர்த்
தொகுதி முற்றும்.

குறிப்புரை : சூளாமணி நிகண்டு

வீரைமாநகர் மண்டலப்புருடன் என்பவரால் இயற்றப்பட்டது என்பது இறுதிப் பாடலால் தெரியவருகிறது. முதலாவது தெய்வப் பெயர்த்தொகுதி தொடங்கி, பன்னிரெண்டாவது பலபெயர்க் கூட்டத்து ஒரு பெயர் முடிய பன்னிரெண்டு தொகுதிகளும் முழுமையாக உள்ளன.

## 811. சூடாமணி நிகண்டு

பதினோராவது தொகுதி

**அ. 150:328; ஆ.** *261-289* ஏடுகள்; **இ.** *31* X *3* செ.மீ.; **ஈ.** *9-10* வரிகள்; **உ.** சுமாரான நிலை; இடையில் சில ஏடுகள் இல்லை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச்சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

முடிவு

ஆனகம் படகத் தின்பே ராகுந்துந் துபியு மப்பேர்
மானமே யளவிலச்சை விமானமே பெருமை குற்றம்
பானலே பழன நெய்தல் பாங்கரே யிடம்பக் கப்பேர்
மானலே மயக்க மொப்பாம் வருடமே மழையு மாண்டும்
(6)

குறிப்புரை : சூளாமணி நிகண்டு

'பகவனே யீசன்' என்ற பாடலுடன் நூல் தொடங்குகிறது. சூடாமணி நிகண்டு என்னும் நூலின் பதினோராவது - ஒரு சொற் பல்பொருட்பெயர்த்தொகுதி மட்டும் அடங்கியது. 'ககரவெதுகை' தொடங்கி 'னகர வெதுகை' யீறாக உள்ளது. ஆயினும் இடையிடையே பல பாடல்கள் இல்லை; னகர எதுகையில் 6 பாடல்கள் மட்டுமே உள்ளன. பாடல் வரிசை எண்கள் பல மாறி அமைந்துள்ளன.

## 812. சூடாமணி நிகண்டு

பதினோராவது நிகண்டு
ஒரு சொல் பல்பொருள் பெயர்த்தொகுதி

**அ. 461:708; ஆ.** *100* ஏடுகள்; **இ.** *36* X *3* செ.மீ.; **ஈ.** *4-5* வரிகள்; **உ.** நன்று; இடையிடையே சில ஏடுகள் இல்லை; **ஊ.** படிக்கக்கூடிய எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச்சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

முடிவு

இல்லில்லா ளில்லை யென்ற லிராசிசா விடம்வீ டாறே
மல்வளம் வலியி னோடு மாயவ னாடன் முப்பேர்
சில்லையென் பதுபி ரண்டை சிள்வீடு தூர்த்தைக் கும்பேர்
ஒல்லையே விரைவு தொல்லை கடுப்புடன் சிறுபோ தாமே

குறிப்புரை : சூளாமணி நிகண்டு

சூடாமணி நிகண்டின் பதினொராவது ஒரு சொல் பல்பொருள் பெயர்த்தொகுதி என்னும் ஒரு பகுதி மட்டும் அடங்கியது. ககர எதுகை தொடங்கி லகர எதுகையில் ஒன்பதாவது பாடல்வரை மட்டுமே உள்ளது. முதலில் ஒன்று முதல் ஐம்பது வரையிலான ஏட்டு எண்கள் கொடுக்கப் பட்டுள்ளன. பின்பு தகர எதுகையின் ஒரு பகுதியாகிய **சாதியே பிரம்புகள்** என்று தொடங்கும் பாடல் முதல் மீண்டும் ஒன்று, இரண்டு என்பதாக ஏட்டு எண்கள் கொடுக்கப்பட்டுள்ளன. 'முடிவிலின்பத்து' என்ற காப்புப் பாடலும், 'பகவனே யீசன்' என்ற நூலின் முதற்பாடலும் *19:37* இல் உள்ளதே.

## 813. மண்டல புருடநிகண்டு

**அ.** 142, 318; **ஆ.** *1-160* ஏடுகள்; **இ.** *33 X 3* செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** சுமாரான நிலை; இறுதிப் பத்து ஏடுகள் முறிந்துள்ளன; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச்சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

அகண்டபூ ரணமா யாறு சமையத்தி னரசாய் மேலோர்
புகன்றவே தப்பு ராண சாத்திரப் பொருளாய் ஞான
சுகந்தரு பரைப்பெண் பாகத் தொல்லையோன் றந்த நந்தி
நிகண்டுசூ ளாம ணிப்பா நிகழ்த்துமென் நெஞ்சிற் றானே

### தெய்வப் பெயர்த் தொகுதி

பொன்னுநன் மணியு முத்தும் புனைந்தமுக் குடைநி ழற்ற
மின்னுபூம் பிண்டி நீழல் வீற்றிருக்க தவழை வாழ்த்தி

மன்னிய நிகண்டு சூளா மணியென வொன்று சொல்வன்
இந்நிலந் தன்னில் மிக்கோர் யாவரு மிருந்து கேண்மின்

முடிவு

பணியிமந் துகின மும்போர்
பரிவேட மூற்கொள் வட்டந்
தளியிடு வான வில்லே
யிந்திர தனுவென் றாகும்
இணையவை தேவ ரீட்டச்
செய்யுனூற் றைந்து செய்தான்
புனைகுண பந்தி ரன்றாள்
போற்றுமண் டலவன் றானே (106)

குறிப்புரை : மண்டல புருஷ நிகண்டு

இந்நூல் பெயர்த்தொகுதி, மக்கட்பெயர்த்தொகுதி, விலங்கின் பெயர்த்தொகுதி, மரப்பெயர்த் தொகுதி, இடப்பெயர்த் தொகுதி, பல்பொருட்பெயர்த் தொகுதி, செயற்கை வடிவப் பெயர்த்தொகுதி, பண்புப் பெயர்த்தொகுதி, செயல்பற்றிய பெயர்த்தொகுதி, ஒலி பற்றிய பெயர்த்தொகுதி, ஒரு சொல் பல பொருட்டொகுதி, பல்பொருட் கூட்டத் தொரு பெயர்த்தொகுதி என்னும் பன்னிரண்டு தொகுதிகளை யுடையது. ஈற்றுத் தொகுதி ஓர் ஏடு மட்டுமே உள்ளது.

# 3. இலக்கணம்

## 814. இலக்கண நூல்கள்

**அ.**95: 197; **ஆ.** *26* ஏடுகள்; **இ.** *37* X *2* செ.மீ.; **ஈ.** *3-5* வரிகள்; **உ.** ஏடுகள் பல சுவடிகளிலிருந்து சிதறியவை; பல ஏடுகள் தனித்தனி ஏடுகள்; **ஊ.** பல்வேறு கையெழுத்துகள்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதிலிலுள்ள நூல்கள் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

செவிவாயாகப் பருகி நெஞ்சு கண்ணாக உணர்ந்து
கொள்வது கல்வி விரும்பினர் கடனே.
தெய்வ வணக்கமும் செய்பொருள் விளக்கமும்
செப்பு வதாகும் சிறப்புப் பாயிரம்.

எழுத்து சொற்பொருள் யாப்பணி என ஐம்பொருள் இலக் கணங்களை விளக்கத் தொடங்கி, முன்னீண்டெழுத்தியல் பின்னதென உரைத்து ஓதுவாம்.

### முடிவு

பொதுப் பெயரால் குற்றெழுத் தெனவும்
சிறப்புப் பெயரால் குற்றியலுகர மெனவும்
ஏற்கும் பெயரொடு வழங்கும்
அம்முதல் ஈறாறுயிர்
கம்முதல் மூவாறுடல்
குறில் அ, இ, உ, எ, ஒ ஐந்தே
நெடில் ஆ, ஊ, ஈ, ஓ, ஔ ஏழே.

### குறிப்புரை

இச்சுவடியில் 7ஆம் ஏடு முதலே காணப்படுகிறது. 10ஆவது ஏட்டில் நேமிநாதத்தில் சொன்னது என்ற தலைப்போடு, ‘உண்ண முடியாத ஓதநீர் வான்வாய்ப்பட என்று தொடங் கும்’ அவையடக்க நூற்பாவும்’ தொடர்ந்து சில

நூற்பாக்களும் காணப்படுகின்றன. அடுத்த ஏட்டிலிலே தளைவகைகள், ஓசை, பாவினங்கள் போன்ற பலதலைப்பு களில் சில நூற்பாக்களும் உரைநடையும் உள்ளன. தொடர்ந்து 'மருவுவிளமுன்னர் நிரைநிரை ஒன்றாசிரியம்' என்னும் சிதம்பரப்பாட்டியல் நூற்பா காணப்பெறுகின்றது. மேலும் சில இலக்கணக் குறிப்புகள் அங்கொன்றும் இங்கொன்று மாகத் தனித்தனி ஏடுகளில் காணப்படு கின்றன. சில இலக்கணச் சுவடிகளிலுள்ள ஏடுகள் பல இதில் ஒன்றாகக் காணப்படுகின்றன.

## 815. உதாரணப்பாட்டு

**அ. 164:347; ஆ.** 2-25 ஏடுகள்; **இ.** 37 x 3 செ.மீ.; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** நன்று; இறுதியில் ஒன்றிரண்டு ஏடுகள் சற்று உடைந்துள்ளன; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

போது சாந்தம் பொற்ப வேந்தி
யாதி னாதற் சேர்வோர்
சோதி வானந் துன்னு வோரே (1)

அணிநிழ லசோகமர்ந் தருணெறி நடாத்திய
மணிதிக ழவிரொளி வரதனைப்
பணிபவர் பவநனி பரிசறுப் பவரே (2)

முடிவு

பண்ணுந் திறமும்பொற் பாவு மினமுமாய்
வண்ண விகற்ப வகைமையாய்ப் - பண்டுமற்
றிறம்விளரித் தில்லதுபோற் செப்ப லகல
லிசைமருட்பாக் கில்லை யினம் (145)

உதாரணப்பாட்டு முற்றும்.

குறிப்புரை

**1-145 பாடல்கள்.** யாப்பருங்கலக்காரிகையிலுள்ள உதாரணப் பாடல்கள் தொகுத்து எழுதப்பெற்றுள்ளன. சுவடியின் முதல் ஏடு இல்லையென்றாலும் உதாரணப்

பாட்டுகள் ஒன்று முதல் முழுமையாக எழுதப் பெற்றுள் ளன. அச்சு நூலினின்றும் இதில் சில வேறுபாடுகள் காணப்படு கின்றன.

## 816. நம்பியகப்பொருள் விளக்கம் முதலியன

**அ. 57:85; ஆ.** *38* ஏடுகள்; **இ.** 39 x 2.5 செ.மீ.; **ஈ.** *6* வரிகள்; **உ.** சில ஏடுகள் முறிந்தும், துளைகளைப் பெற்றும் உள்ளன; **ஊ.** அழகான எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

அளவில் இன்பத்து ஐந்திணை மருங்கில்
களவுகற்பென இருவகைக் கைக்கோள் வழங்கும்

இது மேற்கூறிப் போந்த ஐந்திணைக்குரிய கைக்கோள் வரையறையைக் கூறுகின்றது (ஏடு. *26*).

### முடிவு

காட்சிஐயம் துணிவு குறிப்பு அறிவுஎன
மாட்சி நான்கு வகைத்தே கைக்கிளை

இது மெய்க்களை யாழோர் வேண்டும் புணர்ச்சி முன் நிகழ்வதாக மேற்கூறிய கைக்கிளைப் பகுதி கூறுகிறது (ஏடு.*54*).

### புலவிநுணுக்கம்

அஃதாவது புல்லிய நுணுக்கம் என விரியும்.
''பெண்ணியலார் எல்லாரும் கண்ணின் பொதுஉண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு.

என்பது உலா போய்வந்த தலைமகன் பள்ளியிடத் தானாகத் தலைமகள் சொல்லியது (ஏடு.*302*).

### குறிப்புரை

நம்பியகப் பொருள் விளக்கத்தின் சில நூற்பாக்களை இச்சுவடியின் முதற்பகுதி உரையோடு கொண்டுள்ளது

பிற்பகுதியில் சில குறட்பாக்கள் உரையுடன் காணப்படு கின்றன. *11, 12* என்று தொடங்கி **54, 68, 116, 239** என முறையில்லாத நிலையில் ஏடுகள் உள்ளன.

## 817. நன்னூல்

**அ. 11:27; ஆ.** *1-41 (30)* ஏடுகள்; **இ.** 33 x 2.5 செ.மீ.; **ஈ.** *6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** நல்ல கையெழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை.பல உரைகளுடன் இந்நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

சிறப்புப் பாயிரம்

மலர்தலை உலகின் மல்கிரு ளகல
இலகொளி பரப்பி யாவையும் விளக்கும்
பரிதியி னொருதா னாகி முதலீ
றொப்பள வாசை முனிவிகந் துயர்ந்த....

### முடிவு

பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே.

நன்னூல் மூலம் முற்றும். அதிகாரம் *11*.சூத்திரம் *664*.
சிவமயம்.

### குறிப்புரை

சிறப்புப் பாயிரம், பொதுப்பாயிரம், சிறப்புப் பாயிரத் திலக்கணம் ஆகியனவும், எழுத்தியல், பதவியல், உயிரீற்றுப்புணரியல், மெய்யீற்றுப் புணரியல், உருபுப்புணரியல் என்ற இயல்களும் எழுத்ததிகாரத்துள் அமைகின்றன. எழுத்தின் தோற்றங்களை, புணர்ச்சிவிதி இலக்கணங்களை இவ்வியல்கள் தெளிவாக உணர்த்து கின்றன. அடுத்துப் பெயரியல், வினையியல், பொது வியல், இடையியல், உரியியல் என்னும் இயல் பகுப்பு களைக் கொண்டு சொல்லதிகாரம் அமைகிறது. இந்த அதிகாரம் சொற்களின் இலக்கணத்தை உணர்த்தி நிற்கின்றது.

## 818. நன்னூல்

**அ.** **42:66; ஆ.** *1-16* ஏடுகள்; **இ.** 41 x 3 செ.மீ.; **ஈ.** *8-10* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம் 11: 27 போன்றது.

முடிவு

> மொழிமுதற் காரணம் ஆம்அணுத் திரள்ஒலி
> எழுத்தது முதல்சார் பெனஇரு வகைத்தே.

குறிப்புரை : நன்னூல் மயிலைநாதர் உரை

இச்சுவடியில் ''மலர்தலை உலகின் மல்கிரு ளகல'' எனத் தொடங்கும் சிறப்புப் பாயிரம் முதல் 55 நூற்பாக்கள் உள்ளன. இறுதி ஏட்டில் எழுத்ததிகாரம் என்பது தொடங்கி 'மொழிமுதற் காரணமாம் அணுதிரள்ஒலி' என்னும் 3ஆவது நூற்பா முடிய மட்டுமே உள்ளது. சிறப்புப் பாயிரத்திற்கு முன்பு 'தென்திரை யெறிதரு பண்டுநீர்ப் பொருநை', 'மூலப் பகுதியின் முளைத்தெழு வினையை', 'நன்னெறி உணரார் பொன்னித்துறைவன்' என்று தொடங்கும் மூன்று பாடல்கள் எழுதப்பட்டுள்ளன.

## 819. நன்னூல்

**அ.** **92:194; ஆ.** *9* ஏடுகள்; **இ.** 40 x 2.5 செ.மீ.; **ஈ.** *10* வரிகள்; **உ.** சுமாரான நிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

குறிப்புரை

எழுத்தியலின் மூன்றாம் நூற்பாவின் உரையில் ஒரு பகுதி மட்டும் தொடக்க ஏட்டில் காணப்பெறுகிறது. தொடர்ந்து,

> ''உயிரு முடம்புமா முப்பது முதலே'' (4)
> ''லளமெய் திரிந்த னணமுன்

என்னும் நூற்பா தொடங்கி

மகார னநந் தீரொற்றாஞ் செய்யுளுள்ளே

என்னும் 45ஆம் நூற்பா முடிய உரையுடன் காணப் பெறுகின்றது. இவற்றுள்ளும் இடையிடையே பல நூற்பாக்கள் இல்லை.

## 820. நன்னூல் உரையுடன்

**அ. 266:486; ஆ.** *1-174* ஏடுகள்; **இ.** 37.5 x 3 செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** அழகான எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

முடிவு

அவற்றுள்,

முதலி னான்கு மீற்றின் மூன்றும்
விளைமுதல் கொள்ளும் பிறவுமேற் கும்பிற

என்னின் அவ்வெச்சங்கட் காவதோர் விதி உணர்த்திற்கு இ—ள் – மேலைச் சூத்திரத்து முதற்கட்கூறிய செய்து, செய்பு, செய்யாச், செய்யூ என்னும் நான்கும் இறுதிகட்கூறிய வான், பான், பாக்கு என்னும் மூன்றும் வினைமுதலைக் கொண்டு முடியும்.... இங்ஙனம் வினைமுதற் பொருண்மையினை யும், அஃது ஒழிந்த பிறபொருண்மையினையும் கொள்ளு மெனக் கூறலே நூலாசிரியர் கருத்தென்க. அங்ஙனமாயின் இவ்விருவகை எச்சங்களும் பெயரினையும் வினையி னையும் கொண்டு முடிந்து நிற்க உதாரணங் காட்டிய தென்னையெனின் பெயரெச்சம் பெயரெஞ்ச நிற்றலும் வினையெச்சம் வினையெஞ்ச...

குறிப்புரை

**இதில் மூலமும் உரையும் உள்ளது.** சிறப்புப் பாயிரம் தொடங்கி உருபுப்புணரியல் முடிய எழுத்ததிகாரம் முழுமையும் உரையுடன் உள்ளது. சொல்லதிகாரத்தில் பெயரியல் முடிந்து வினையியலில், இருபத்தைந்தாவது நூற்பாவின் உரை குறையாகவுள்ளது. இறுதி ஏடு (*174*)

வினையெஞ்ச... என்ற சொல்லோடு நிற்கிறது. மேலும் எழுத இடமுள்ளது. எனவே இந்தச் சுவடி எழுதி இடையில் விடப்பட்டிருக்கிறது என்பது வெளிப்படையாகத் தெரிகிறது. இவ்வேட்டை அடுத்து 'மலர்தலையுலகின்' என்று மீண்டும் தொடங்கி தொடர்ந்து எழுதப்பட்ட மூன்று ஏடுகள் உள்ளன.

## 821. பன்னிரு படலம்

**அ.** 484:733; **ஆ.** *11-118* ஏடுகள்; **இ.** 38 x 3 செ.மீ.; **ஈ.** *6-8* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

அழகுயவர் பாணத்தினை யுடையார் நினைத்த
தொழின்முடிய முருக பூசை பண்ணும்
வானோடு வெள்ளக் கூத்தை யாடியது

காணி லானுங் களிக்குங் கழன்மறவா
பூணி லங்கு மென்முலைப் போதரிக்
கணவர்..ணு தறான் முருகுமெய் நிற்குத்
தாமம்புறந் தினைப்பவென முருகாக் காடும்வெறி

முடிவு

கைக்கிளை பெருந்திணை யெனவிலை யகப்புறம்
வெட்சி நிரை... ந்தையா மவட்கார் மேற்செல்வது
... யாமுட் கரடுத் திருன்றல் காஞ்சியே
யில்காத்தல் நொச்சிய... துழைத்தலா...
....ாருவது தும்பையாம்
போர்க்களத்து மிக்கார் செருவென்றது வாகையாம்

பன்னிருபடல முறை முற்றும்.

குறிப்புரை

நூலின் தொடக்கப் பகுதிகள் இல்லையெனினும் அதன்பின் நூல் முழுமையும் உள்ளது. கரந்தைப் படலம், கையறுநாப்பு நெடுஆன், பௌவபௌவ குடைமுன்ன, குறுவஞ்சி, படை,

வின முன்பெரும், வாட்பொதுவிலார் முதலிய உட்தலைப்பு களில் ‘பன்னிரு படலம்’ (புறப்பொருள் வெண்பா மாலை) என்ற நூலின் செய்திகள் இடம் பெற்றுள்ளன.

## 822. புறப்பொருள் வெண்பாமாலை

**அ. தாள். 7:36; ஆ.** *1-179* பக்கங்கள்; **இ.** குறை; **ஈ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

**தொடக்கம்**

> ழையார் வினைமுடிய
> வேலனொடு வெறியாடின்று

இதன் பொருள் அழகிய வாபரணத்தினையுடையார் நினைத்த தொழின் முடிய முருகபூசை பண்ணுமவனோடு வெள்ளிக்கூத்தை ஆடியது என்றவாறு.

> காணி லரனுங் களிக்குங் கழன்மறவன்
> பூணிலங்கு மென்முலைப் போதரிக்கண் - வாணுதல்
> தான்முருகு மெய்நிறீஇத் தாமம் புறந்திளைப்ப
> வேன்முருகற் காடும் வெறி

**முடிவு**

யாழ்வென்றி

> பாலை... மலை பண்ணியதன் கூட்டம்
> கோலஞ்செய் சீறியாழ்க் கொண்டபின் - வேலைச்
> சுவை.... தோன்ற வெளியிலனாள் சூழ்ந்த
> வலையெல்லாந் தந்த வணங்கு

**குறிப்புரை**

கரந்தைப் படலம், வஞ்சிப்படலம், காஞ்சிப்படலம், உழிஞைப் படலம், நொச்சிப்படலம், தும்பைப்படலம், வாகைப்படலம், பாடாண்படலம், பொதுவியற்படலம், கைக்கிளைப்படலம், பெருந்திணைப்படலம் என இரண்டா வது படலம் தொடங்கி பன்னிரண்டு படலங்கள் வரை இந்நூலில் முழுமையாக உள்ளது. இறுதியில் ‘கொடுப்போர்

ஏத்திக் கொடால் பழித்தல்' என்னும் துறை உள்ளது. அது முற்றுப் பெறவில்லை.

## 823. யாப்பருங்கலக் காரிகை

**அ. 18:36; ஆ.** *1-103* ஏடுகள்; **இ.** 40 x 2.5 செ.மீ.; **ஈ.** *6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

'காமருசீர்' என்று சிறப்பித்த வதனால் ஆசிரியப்பா நான்கிற்கும் 'ஏ' என்னும் அசைச்சொல்லால் இருப்பது சிறப்புடைத்து. பிறவெழுத்தானும் இறப்பெறுமாயினும் எனக் கொள்க.

'அகவ லிசையன வகல் மற்றவை
ஏ ஓ ஈ ஆய் என்ஐ யென் றிறுமே'

என்றாராகலின்,

### முடிவு

இந்திரனே போலு மிளஞ்சாத்தன் சாத்தற்கு
மந்திரமே போலும் மனைவாட்கை - மந்தரத்திற்
றாழருவி போன்றுளது தார்மாலை யம்மாலை
ஏழுலகு நாறு மிணர்

ஆகக் கலித்துறை காரிகை 45 உதாரணத்துடன் யாப்பருங்கலக்காரிகையார் முடிந்தது. முற்றும்.

### குறிப்புரை

சுவடி ஏடுகள் 1, 2, 3 என்று வரிசையாகக் காணப்படு கின்றன. ஆனால், கடயல் பாதம் முச்சீர்வரின் நேரிசை. காமருசீர் இடைபல குன்றின் இணைக்குறள் என்னும் 28–ஆவது காரிகையின் உரையில் ஒருபகுதி முதலே தொடங்குகிறது. உரையில் பலவகையான வேறுபாடுகள் காணப்படுகின்றன.

## 824. யாப்பருங்கலக்காரிகை

**அ. 54:82; ஆ.** 40 ஏடுகள் ; **இ.** 20 x 3 செ.மீ.; **ஈ.** *13* வரிகள்; **உ.** ஓரளவு சிதைந்த நிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

தேமாந்தண்ணிழல், புளிமாந்தண்ணிழல், கருவிளந் தண்ணிழல், கூவிளந்தண்ணிழல் எனவும், தேமாந்தண்பூ, புளிமாந்தண்பூ, கருவிளந்தண்பூ, கூவிளந்தண்பூ எனவும் தேமாநறும்பூ, புளிமா நறும்பூ, கருவிளநறும்பூ, கூவிள நறும்பூ, தேமாநறுநிழல், புளிமா நறுநிழல், கருவிளநறுநிழல், கூவிளநறுநிழல் எனவும் கொள்க.

### முடிவு

கண்ண் கருவிளை கார்முல்லை கூரெயிறு
பொன்ன் பொறிசுணங்கு போழ்வா யிலவம்பூ
மின்ன் னுழைமருங்குன் மேதகு சாயலாள்
என்ன் பிறமகளா மாறு

எஃஃஃ கிலங்கிய கையரா யின்னுயிர்
வெஃஃஃகுவார்க் கில்லை வீடு

### குறிப்புரை

ஒழிபியல் சிந்தனை, அடிவரை, குறளடி, அசையடி, செய்யுளியல், மோனை, எதுகை என்ற பல தலைப்புகளில் இலக்கணம் கூறப்பட்டுள்ளது.

## 825. யாப்பருங்கலக்காரிகை

**அ. 102:205; ஆ.** *75* ஏடுகள்; **இ.** 35.5 x 3 செ.மீ.; **ஈ.** *5-6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** அழகான எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

### முற்குறிப்பு

வாத்தியார் கந்தப்பிள்ளை யாப்பருங்கலக்காரிகை எடுத்தவர் கொடுத்து விடவும்.

தொடக்கம்

கந்த மடிவில் கடிமலர்ப் பிண்டிக்கண் ணார்நிழற்கீழ்
எந்த மடிக ளிணையடி யேத்தி யெழுத்தசைசீர்
பந்த மடிதொடை பாவினங் கூறுவன் பல்லவத்தின்
சந்த மடிய வடியான் மருட்டிய தாழ்குழலே

முடிவு

கடையயற் பாதமுச் சீர்வரி னேரிசை காமருசீர்
இடைபல குன்றி னிணைக்குற ளெல்லா வடியுமொத்து
நடைபெறு மாயி னிலைமண் டிலநடு வாதியந்தத்
தடைதரு பாதத் தகவ லடிமறி மண்டிலமே

குறிப்புரை

*இந்நூலில் முதல் நூற்பாவிலிருந்து 28-ஆவது நூற்பாவரை யிலும் உள்ளது. இறுதி ஏட்டில் இணைக்குறள் ஆசிரியப் பாவிற்கான, 'சிறியகட் பெறினே எமக்கீயும் மன்னே' என்று தொடங்கும் உதாரணப் பாடல் உள்ளது. அச்சு நூலில் உள்ளது போன்றே நூற்பாக்களும் உதாரண முதற் குறிப்புப் பாடல்களும் காணப்படுகின்றன.*

## 826. யாப்பருங்கலக்காரிகை

**அ.** **165:348;** **ஆ.** *1-42 ஏடுகள்;* **இ.** *40 x 3 செ.மீ.;* **ஈ.** **4-5** *வரிகள்;* **உ.** *இடையில் சில ஏடுகள் இல்லை; பிற்பகுதியில் சில ஏடுகள் சிதைந்துள்ளன;* **ஊ.** *கடினம்;* **எ.** *குறை;* **ஏ.** *இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.*

முடிவு

இன்னதிவ் வழக்க மித்திற மிவணல
மென்னவு முன்னாட் டுன்னா யாகிக்
கலந்த வன்மையை யாயினு நலந்தகக்
கிளையொடு கெழிஇத் தளையவிழ் கோதையைக்
கற்பொடு காணிய யாமே
பொற்பொடு பொலிகநும் புணர்ச்சி தானே

*அச்சொல்லப்பட்ட வுறுப்போடராக வடிவைத்த நடையது வண்ணமாகும்.*

குறிப்புரை

**கந்த மடிவில் கடிமலர்ப் பிண்டிக்கன்** *எனத் தொடங்கும் தற்சிறப்புப் பாயிரம் முதல் வண்ணக ஒத்தாழிசைக் கலி ஈறாக நூலில் உள்ளது. அவற்றுள்ளும் சில பகுதிகள் தவறியுள்ளன.*

# 4. கணிதம்

## 827. அரிச்சுவடி - எண்சுவடி

**அ.** *592:950*; **ஆ.** *1–15* ஏடுகள்; **இ.** 46 x 2 செ.மீ.; **ஈ.** *1–3* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

குறிப்புரை

*12* உயிரெழுத்துகளும், க, ங, ச, ஞ, ட, ண, த, ந, ப, ம, ய, ர, ல, வ, ழ, ள, ற, ன என்ற *18* உயிர்மெய் எழுத்துகளும் அடங்கியுள்ள *246* தமிழ் எழுத்துகள் இச்சுவடியின் முதல் *11* பக்கங்களில் எழுதப்பட்டுள்ளன. அடுத்த *12* ஆவது ஏட்டில் ராம ஜெயம், நன்றாக, குரு வாழ்க, குருவே துணை என்று எழுதப்பட்டு உள்ளதால், அடுத்த தனிநூல் தொடங்குவது போன்ற தோற்றத்தை ஏற்படுத்துகிறது. மேலும்,

> முந்திரி லக்க முறையுடன் படிக்க
> தந்தி முகத்தோன் தாளே சரணம்

என வரும் காப்பு இதனை உறுதி செய்கிறது. எனவே அரிச்சுவடியான தமிழ் எழுத்துகளை முதலில் எழுதி முடித்த பின், எண் கணிதம் எழுதத் தொடங்கும் முறை தொடக்க காலக் கல்வி கற்போரிடையே வழக்கில் இருந்திருக்கிறது என்பது தெரிகிறது. முந்திரி லக்கம் பற்றி *12* ஆவது ஏடு ஒன்றில் மட்டுமே உள்ளது. *13* ஆவது ஏடு முதல் *15* ஆவது ஏடுவரை ஒன்று, இரண்டு என *200* வரையும், அதன் பின் *300, 400, 500* என நூறின் மடங்குகளாக *2000* வரையும், அதன் பின் *3000, 4000, 5000* என ஆயிரத்தின் மடங்குகளாக கோடி வரையும் தமிழ் எண்கள் எழுதப் பெற்றுள்ளன. இறுதியில் முற்றிற்று என்ற குறிப்பு உள்ளது.

## 828. எண் இலக்கம் - பின்னம்

**அ.** **420:664;** **ஆ.** *11* ஏடுகள்; **இ.** 49 x 3 செ.மீ.; **ஈ.** *4-5*, வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** அச்சாக வில்லை.

குறிப்புரை

கண்ணன் மருகன் கணபதியைத் தொழ
எண் இலக்கம் எளிதாய் வருமே

கால், காலேவீசம், காலே அரைக்கால், அரை, அரையே வீசம், அரையேஅரைக்கால், முக்கால், முக்காலேவீசம், முக்காலே அரைக்கால், ஒன்று, ஒன்றேவீசம், ஒன்றே அரைக்கால் என்னும் அடிப்படையில் நூற்றுப்பத்து முடிய உள்ள எண்களுக்கான பின்ன வகைகள் அனைத்தும் எண்ணால் எழுதப்பட்டுள்ளன. எண்கள் தமிழ் எண்கள். எல்லா ஏடுகளும் சட்டங்களாக (இரு ஏடுகள் இணைந்த நிலை) உள்ளன. எனவே எழுதிப் பழகுவோர் எழுதிய எண் சுவடியாக இருக்கலாம்.

## 829. எண் கணிதம்

**அ.** **407: 651;** **ஆ.** *1-9* ஏடுகள்; **இ.** 44 x 2.5 செ.மீ.; **ஈ.** *4-5* வரிகள்; **உ.** நன்று; சிறுவர் கையெழுத்துப் போல் உள்ளது; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

வருசப் பிறப்பை வகுத்துரைக்கும்
பூமிதனில் கரிய முகவன்
பொற்பாதம் கணபதி காப்பு

திரேதாயுகம், கிருதாயுகம், துவாபரயுகம், கலியுகம்
கிருதயுகத்துக்கு வருசம் 170க்கு 28.
திரேதாயுகத்துக்கு வருசம் 120க்கு 96.
துவாபரயுகத்துக்கு வருசம் 800க்கு 64 (ஏடு 1).

முடிவு

அமாவாசை கழித்த பிரதமை முதல் பௌர்ணமாவாசை வரைக்கும் பூர்வபட்சமென்றும் சுக்கில பட்சமென்றும் பெயர். பௌர்ணமாவாசைக் கழித்த பிரதமை முதல் அமாவாசை வரைக்கும் அமரபட்சமென்றும் கிருஷ்ண பட்சமென்றும் பெயர் (ஏடு. 9).

குறிப்புரை

ஒன்று முதல் ஒன்பது ஏடுகளுக்கு எண்கள் உள்ளன. கிருதாயுகம், திரேதாயுகம் முதலிய ஆண்டுகளின் பெயர்களும், தமிழ், ஆங்கில மாதங்களின் பெயர்களும், ஏழுநாட்களின் பெயர்களும் (சோம-மங்கள- சௌமிய-குரு-சுக்கிரஸ்—திர-வாரம்), எந்தக் கிழமையில் என்ன திசையில் சூலம் என்பதும், 27 நட்சத்திரங்களின் பெயர்களும், அவற்றிற்குரிய தனித்தனி வடிவங்களும் (மிருகசீருஷம்-மூன்று தேங்காய்க்கண் போல் இருக்கும்), பூர்வபட்சம், அமரபட்சம் என்றால் என்ன என்பனவும் இதில் கூறப்பட்டுள்ளன. பாடம் எழுதக் கற்றுக் கொள்வதற்கு முன் வாய்மொழியாக இச்செய்திகள் பலமுறை ஆசிரியரால் கூறப்பட்டுப் பின்பு மாணவர்களால் எழுதப்பட்டிருக் கின்றன. நரம்பு பிரிக்கப்படாத சட்டத்தில் எழுதப்பட்டிருப் பதாலும் (இரு ஏடுகள் சேர்ந்த நிலை) இது எழுதிப் பழகப் பயன்படுத்தப்பட்ட சுவடி எனத் தெரிகிறது. இதனை யடுத்து 1 முதல் 14 வரையுள்ள ஏடுகளிலும், 1 முதல் 10 வரையுள்ள ஏடுகளிலும், 1 முதல் 6 வரையுள்ள ஏடுகளிலும் எண்கள் எழுதிப் பழக இவ்வேடுகளைப் பயன்படுத்தியமை தெரிகிறது. அனைத்திலும் முதல் ஏடுகளில் காப்புப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

எழுத்துகளை, எண்களை எழுதிப் பார்க்கப் பயன் படுத்திய ஏடுகளில் சோதிடத்திலுள்ள அடிப்படை விதிகளையும் மாணவர் எழுதிப் பயின்றுள்ளனர். எனவே அடிப்படைக் கல்வி நிலையிலேயே சோதிட அடிப்படை விதிகளை மாணவர்களுக்குக் கற்றுத்தர முன்வந்த நிலை

தெரிகின்றது. எனவே சோதிடப் பயிற்சியினைப் பலன் அறிதல் என்ற நிலைக்காக மட்டுமின்றி நாள், வாரம், மாதம், திதி, நட்சத்திரம், கோள்கள், ஆண்டு, யுகம் பற்றிய செய்தி கள் காலம் பற்றிய அறிவைப் பெறுதற்கு இன்றியமை யாதன என்ற நிலையிலும் அவர்களது அடிப்படைக் கல்வி முறைகளிலே இடம் பெற்றிருக்கின்றன.

## 830. எண்கணிதம்

**அ.** ***590:948***; **ஆ.** *25* ஏடுகள்; **இ.** 38 x 3 செ.மீ; **ஈ. 4–5** வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### குறிப்புரை

வார நாட்களின் பெயர்கள், திதிகளின் பெயர்கள், ஆண்டுகளின் பெயர்கள், நட்சத்திரங்களின் பெயர்கள், பன்னிரண்டு இராசிகளின் பெயர்கள், இவற்றின் கால விபரம், எந்தெந்த நாட்களில் எந்தெந்தத் திசைகள் சூலம் என்ற விபரம், இந்திரன், அக்கினி, எமன், நிருது, வாய்வு ஆகியோருக்குரிய திசைகள், எண்கள், வாய்பாடுகள் போன்றன எழுதப் பெற்றுள்ளன. ஏடுகளுக்கு எண்கள் இருப்பினும் ஒரே எண்ணில் இரு ஏடுகள் அமையும் நிலையும் உள்ளது. நரம்பு பிரிக்கப்படாத சட்ட ஏடுகளாக இச்சுவடிக் கட்டு உள்ளது.

## 831. எண் சுவடி

**அ. 318:544; ஆ.** *21* ஏடுகள்; **இ.** 52 x 3 செ.மீ.; **உ.** நன்று; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### குறிப்புரை

எண் இல்லாத முதல் ஏட்டில் 'நெடுமால் திருமருகா' என்ற பாடல் உள்ளது. இதனையடுத்து *1* முதல் *14* ஏடுகளுக்கு எண்கள் உள்ளன. அதனையடுத்துத் தெளிவற்ற எண்களுடன் ஏழு ஏடுகள் உள்ளன. அக்காலத்தில் கல்வியின் தொடக்க நிலையில் உள்ளவர்கள் பயன்படுத்திய சுவடிகள் அரிச்சுவடிகள், எண்சுவடிகள் எனப்பட்டன.

அரிச்சுவடிகள் என்பன தமிழ் எழுத்துகளை எழுதிப் பார்க்கப் பயன்பட்டவை. எண்சுவடிகள் என்பவை எண்களை எழுதிப் பார்க்கவும், வாய்பாடுகள் மற்றும் அளவைகளைப் பற்றித் தெரிந்து கொள்ளவும் பயன் பட்டவை. இச்சுவடி முழுவதும் எண்களே காணப்படு வதால் எண்களை எழுதிப் பழகப் பயன்படுத்திய சுவடியிது என அறிய முடிகின்றது. நடுநரம்பு எடுக்கப்படாத நீண்ட ஓலைகளைக் கொண்டது இச்சுவடி.

## 832. எண் சுவடி முதலியன

**அ.** 380:621; **ஆ.** 45 ஏடுகள்; **இ.** 46 x 3 செ.மீ.; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### முற்குறிப்பு

திண்டிவனம் தாலுக்கா ஆலக்கிராமம் பார்சுவராத நயினார் குமாரன் சக்ரவர்த்தி பார்க்கின்ற கணக்கு,

### தொடக்கம்

*1, 2, 3, 10, 20, 30, 100, 200, 300, 1000, 2000, 3000* என எண்கள் எழுதுவதில் பயிற்சி கொடுக்கப்பட்ட பத்து ஏடுகள் முதலில் தமிழ் எண்களில் அமைகின்றன.

### முடிவு

திங்கள் மும்மாரி பொழிதேச மெங்கும் வாழி
கங்கைகுல மதிலுதித்த காராளர் வாழி
எங்குமுள்ள ஜினசமயம் என்னாலும் வாழி
மறையோர்கள் குலம்வாழி மன்னவர்கள் வாழி
தேசத்தி லுள்ளோர்கள் செழித்து மிகவாழி
கவிவான புலவோர்கள் களித்துமிக வாழி
எத்திசையும் புகழ்படைத்த லிங்கேஸ்வர் வாழி

### குறிப்புரை

முதல் பத்து ஏடுகளில் தமிழ் எண்களையும் மற்ற ஏடுகளில் பிறவற்றையும் எழுதிப் பழக இச்சுவடியைப் பயன்படுத் தியமை தெரிகிறது. பதினொன்றாவது ஏடு முதல் வாழி,

சரஸ்வதி பேரில் துதி, தேவிபேரில் துதி, தேசர் பேரில் துதி போன்றவை அமைகின்றன. மீண்டும் எட்டெண் 1, 2 என்று தொடங்குகிறது. இதில் சித்திரை முதலான மாதங்கள், கிழமைகள், திதிகள், நட்சத்திரங்கள் போன்றவை எழுதப் பட்டுள்ளன. இறுதியில் இருபதுக்கும் மேற்பட்ட ஏடுகள் கிரந்த எழுத்தில் எழுதப்பட்டுள்ளன.

## 833. எண் சுவடி

**அ.** ***589:947***; **ஆ.** *1–21* ஏடுகள்; **இ.** 45.5 x 3 செ.மீ.; **ஈ.** 4–5 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### குறிப்புரை

பெருங்குழி மாறாப் பேருள கரியை
கருங்குளிற் றானே கணபதி காப்பு

என்ற பாடல் முதலில் எழுதப் பெற்றுள்ளது. எண்கள், வாய்பாடுகள், அளவைகள் போன்றன எழுதிப் பார்க்கப்பட்டுள்ளன. ஏடுகளுக்கு எண்கள் தரப்பட்டுள்ளன. நரம்பு பிரிக்கப்படாத சட்ட ஏடுகளாக இவ்வேடுகள் உள்ளன. இறுதியில் நான்கு வெற்றேடுகள் உள்ளன.

## 834. எண்சுவடி

**அ.** ***591:949;*** **ஆ.** *1–48* ஏடுகள்; **இ.** 38 x 2.5 செ.மீ; **ஈ.** 3–5 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### முற்குறிப்பு

ராமஜெயம். சின்ன நாகப்ப நாயக்கர் குமாரன் ராமசாமி வாசித்து வருகின்ற எண் சுவடி. நீடுழி காலம் வாழ்க.

### குறிப்புரை

**நெடுமால் திருமருகா** என்ற காப்புப் பாடல் முதலில் உள்ளது. பெருக்கல் வாய்பாடு, அணா, ரூபாய், துட்டு, பைசா, வீசை, பலம், பொதி, மரக்கால், படி, கோட்டை

முதலானவை பற்றிய செய்திகள் விளக்கம் பெறுகின்றன. ஒரு ரூபாய்க்கு எத்தனை அணா, ஒரு மரக்காலுக்கு எத்தனை படி என்றவாறு இவ்விளக்கங்கள் அமைகின்றன. அடுத்து 34–ஆவது ஏட்டில் வருசப்பிறப்பு என்ற தலைப்பிலான செய்தி பின்வரும் காப்புப் பாடலுடன் தொடங்குகிறது.

யுகவருச முடன்மாதம் வாரம்திதி யோகம்
கருணை யுடநட் சத்திர ராசிமுதல் என்கருத்
துரைக்க ஆதிவிக்க னேஸ்பரனே அடியேன்
மனத்திருந்து நீடூழி காப்பதுன் கிருபையே

நான்கு யுகங்கள் அவற்றிற்கான ஆண்டுகள் கூறப் படுகின்றன. 60 ஆண்டுகளின் பெயர்கள், தமிழ் மாதங்கள், ஆங்கில மாதங்கள், கரி நாட்கள், 12 இராசிகள், வார நாட்கள், சூல நாட்கள், குளிகை நேரங்கள், கிரகங்கள், ருதுக்கள், யோகங்கள், கரணங்கள், ராசிக்கு நாழிகை விபரம் முதலானவை பற்றிய செய்திகள் விளக்கம் பெறுகின்றன. இறுதியில் வருசப் பிறப்பு முற்றிற்று என்றுள்ளது. நரம்பு பிரிக்கப்படாத சட்ட ஏடுகளாக இச்சுவடிக் கட்டு உள்ளது.

## 835. கணக்கதிகாரம்

**அ.** **348:580;** **ஆ.** *1-33* ஏடுகள்; **இ.** 35 x 3.5 செ.மீ.; **ஈ.** *6-8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

நெடுமால் திருமருகா நித்தம் முதலாய்
கொடுமா வினையறுக்குங் குன்றே - தடுமாறா
தன்முப் பதுவாயு மென்சித்தத் தேநிற்கப்
பண்உத் தமனே பணி-நமஸ்து

மல்லிகை ஐந்து மலந்தபூத் தொண்ணூறு
கொள்ளுவா னாவர் பறித்து ஆக அலகுநிலை 595

முடிவு

மேசம் 4¼, ரிஷபம் 4¾, மிதுனம் 5¼, கற்கடகம் 5½, சிங்கம் 5¼, துலாம் 5, விருச்சிகம் 5¼, தனுசு 5½, மகரம் 5¼, கும்பம் 4¾, மீனம் 4¾ ஆக இராசி பன்னிரண்டுக்கு நாழிகை 60.

குறிப்புரை

பலவிதமான கணக்குகள் கூறப்பட்டுள்ளன. திதி, வாரம், நட்சத்திரம், இராசி முதலியவற்றிற்கு நாழிகை கணக்கிடும் முறைகளும் கூறப்பட்டுள்ளன. சில புதிர்க் கணக்குகள் உள்ளன. பண்டைய எண், நீட்டல், முகத்தல், நிறை, கால அளவைகளையும், கணக்குகள் தொடர்பான சூத்திரங்களை யும் புதிர்க் கணக்குகளையும் உடைய நூல்கள் கணக்கு நூல்கள் என்ற பிரிவில் அடங்கும். ஓலைச் சுவடிகளில் கிடைக்கும் கணிதச் சுவடிகளில் பெரும்பாலானவை கணக்கதிகாரம் என்ற பெயரில் கிடைக்கின்றன. கணக்கதி காரம் என்பது ஒரு குறிப்பிட்ட நூலின் பெயரல்ல. இது பொதுப் பெயராகும். இன்று கணிதநூல், கணக்கு நூல் என்று பொதுவாக வழங்குதல் போலக் கணக்குத் தொடர்பான நூல் 'கணக்கதிகாரம்' என்று அழைக்கப்படுகின்றது. சிலர் கணித திவாகரம் என்றும் இதனை அழைப்பர்.

## 836. கணக்கு

**அ.** 348:581; **ஆ.** *1-32* ஏடுகள்; **இ.** 34.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *6-8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாக வில்லை.

தொடக்கம்

இக்கணக்கி லொன்று யிடையூறு வாராமல்
பொற்கணவன் பெத்த புதல்வனே - இக்கணக்கு
நேரே விளங்கி நிகறனறிநிற் கும்வண்ணம்
பாரே விளங்குமாம் பார் (1)

முடிவு

வட்டத் துறையே வரைஎவேரரி மாவும்
வட்டத்தைக் கொண்டு வரித்துக்கொள்ள - வட்டம்
அறையேவே ரரிமாவும் அறுமாகாணி யாற்பெருக்கி
தெரிந்து யீதெனச் செப்பு

என்பது வட்டத்தைச் சூழ்ந்த கோல் 40, இதிற்பாதி 20, கூட உயரம் ஒன்று என்று வைத்து இதிற் கழிக்க ஆக 12 1/ 2. இதனை வட்டத்திற் பாதி என்று சொல்வது.

குறிப்புரை

விநாயகருக்குப் பூசாத்துக் கணக்கு, முருகனுக்குப் பூசாத்துங் கணக்கு, நிலம் அளவு பார்ப்பது முதலிய தலைப்புகளில் பலவிதமான கணக்குகளும் அவற்றிற்குரிய விடைகளும் கூறப்பட்டுள்ளன. கணக்கு முறைகளும், கணக்கறியும் முறைகளும் இயம்பப்பட்டுள்ள இந்நூல் பழைய கணக்களவு முறைகளை அறிய உதவியாக இருக்கும்.

## 837. கணக்கு ஏடு

**அ.** 59:87; **ஆ.** 36-52 ஏடுகள்; **இ.** 40 x 3 செ.மீ.; **ஈ.** 7 வரிகள்; **உ.** இடையிடையே சில ஏடுகள் இல்லை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

தாரமுடன் சையோக ... நான் தானுமவ
தாரமோ வென்றதனால் தாரமோ யென்றேனோ
வாரம் வரிசைமுறை வந்தவர்க் கெலாமுதகும்
வீரம் வெங்கடேசு தனாமென்நாளும் வெங்கடாசலமே
................................
பொன் விட்டால் ஒன்பது மாத்தாள் என்பது.

பால்கணக்கு

ஒரு ராசாவுக்குத் தேவிமார் நாலு. இவர்கள் பாலுக்குப் பதினாறு எருமை கொடுத்தான். ஒரு எருமைக்குப் பால் ஒன்று;

இரண்டு எருமைக்குப் பால் இரண்டு; மூன்று எருமைக்குப் பால் மூன்று; .......... பால் சுரக்கிறது. இதை நாலு தேவிகளுக்கும் மாடும் பாலும் சரியாகப் பார்க்கிற விதம்....

முடிவு

**கோல் அளந்து மாறாமல் சொல்வதற்குக் கணக்கு**

நடுஅளவுகோல் முப்பதுக்கு ஆக, கோல் எண்பது. இதை நான்குக்கு ஈய, ஈவு இருபது. இதுக்குக் கீழ்கை மேல்கை கோல் அறிய நிலமாவது *100* என்றறிந்து இதைக் கண்டக்கோல் *1*–க்கு ஈய, ஈவு *6¼* என்பது....

குறிப்புரை

பால்கணக்கு, மரக்கால் அளக்கும் கணக்கு, பெருங்குழி முகச்சதுரக் கணக்கு, மாம்பழக் கணக்கு, எலுமிச்சம்பழக் கணக்கு, பணியாரக் கணக்கு எனப் பலவகையான வேடிக்கைக் கணக்குகளைக் கொண்டுள்ளது. 52-ஆவது ஏட்டிற்குப்பின் இரண்டு ஏடுகளில் ‘கர்ப்பம் தரிக்க’ என்ற தலைப்பில் மருத்துவமும், இன்னும் ஆறு ஏடுகளில் மந்திரங்களும் அவற்றிற்கேற்ற சக்கர முறைகளும் எழுதப்பட்டுள்ளன. இவற்றில் திரளாத பெண்களுக்கு, முலை எழாத பேருக்கு, பிள்ளை இல்லாதவர்களுக்கு, விடாத சுரத்துக்கு, மூணா மாறலுக்கு, நாலா மாறலுக்கு, வெதுப்புக்கு, பூத பிசாசுக்கு, வஞ்சணைக்கு, பதினெட்டு சுரத்துக்கு முதலானவற்றிற்கு எழுதிக் கட்ட வேண்டிய எந்திரங்கள் வரைந்தும் எழுதியும் காட்டப் பெற்றுள்ளன. நூல் தொடக்கத்தில் சட்ட ஏடு ஒன்றுள்ளது.

## 838. பாலபாடம் – அரிச்சுவடி

**அ.** ***192:392***; **ஆ.** *1–11* ஏடுகள்; **இ.** 43 x 3.5 செ.மீ; **ஈ.** 2 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; சில ஏடுகள் செல்லரிக்கப்பட்டுள்ளன; **ஊ.** தெளிவான எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

குறிப்புரை

ஓம் நமோஸ்து சித்தம் – நம: என்று தொடங்கி ‘அ’ முதல் **அம்**, **அ** ஈறான உயிர் எழுத்துகளும், ‘க’ முதல் த்ர’ ஈறான

மெய்யெழுத்துகளும் ஆகிய கிரந்த எழுத்துகள் முதல் இரண்டு ஏடுகளில் காணப்பெறுகின்றன. தொடர்ந்து க, கா, கி, கீ எனத் தொடங்கி க்ஷ, க்ஷா... என்னும் வரிசை ஈறான உயிர்மெய் எழுத்துகளும் எழுதப்பெற்றுள்ளன. இது தொடக்கத்தில் எழுதிக் கற்போர், எழுதிப் பழகுவதற்குரிய ஏடாகும். இது இடைநரம்பு கிழிக்கப் பெறாத ஓலைகளாகிய சட்டங்களில் எழுதப் பெற்ற சுவடியாகும். அக்காலத்தில் கல்வியின் தொடக்க நிலையில் உள்ளவர்கள் தமிழ் எழுத்துகளை எழுதிப் பார்க்கப் பயன்படுத்தியவை அரிச்சுவடிகள் எனப்பட்டன.

இச்சுவடி அரிச்சுவடியே ஆயினும் கல்வியின் தொடக்க நிலையினர் எழுதிப் பார்க்கப் பயன் படுத்திய 'எண் சுவடி' போன்ற தன்மையினதே. ஆகையால் இது எண்சுவடி என்ற பிரிவிலேயே வைக்கப்பட்டிருக்கின்றது.

## 839. பெருங்குழி மாறல்

**அ.** 411:655; **ஆ.** *1-14* ஏடுகள்; **இ.** 49 x 3 செ.மீ; **ஈ.** *4-5* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

இக்கணக்கில் ஒன்றும் இடையூறு வாராமல்
பொற்கணவன் பெற்ற புதல்வனே இக்கணக்கில்
நேரே விளங்குமாம் நேர்கொண்டே நிற்குமாம்
பாரே விளங்குமாம் பார் (சாரதாம்பாள் சகாயம்)

முடிவு

தூக்குவீசை *1¼*, தடைவீசை *2*, இடைவீசை *2½*, படிவீசை *2½*, துலாம் வீசை *5*, மணங்கு வீசை *8*, பத்திடைவீசை *25*, பொதிவீசை *80*, பாரம் வீசை *160*....

**மணங்கு அறியும்படி** - வீசை, மணங்கு, தூக்கு மணங்கு, படிமணங்கு, இடைமணங்கு, துலாமணங்கு, பத்திடைமணங்கு... பொதிமணங்கு *10*, பாரம் மணங்கு *20*, **சேர் அறியும்படி** – பாரம் - சேர் - *800*, பொதிசேர்-*400*, பத்திடைசேர் *125*, மணங்கு சேர்*40*, ... **ராத்தல்**

**அறியும்படி** - அந்தர் ராத்தல் 120, பாரம் ராத்தல் 500, பொதிராத்தல் 250, மணங்குராத்தல் 25... (ஏ.14).

குறிப்புரை

எண்களின் மடங்குகளாகப் பெருக்கல் வாய்பாடு 1, 10, 100 என்ற அடிப்படையில் அனைத்து எண்களுக்கும் எழுதப்பட்டுள்ளது. இறுதியில் எடுத்தலளவை, பலம், வீசை, மணங்கு, பொதி போன்றவற்றின் அளவைகளும் எழுதப்பட்டுள்ளன.

## 840. வாய்பாட்டுச் சுவடி

**அ.** 430:676; **ஆ.** 23 ஏடுகள்; **இ.** 4.3 x 3 செ.மீ.; **ஈ.** 4-5 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

குறிப்புரை

'நெடுமால் திருமருகா' என்ற பாடல் முதலில் உள்ளது. பழைய மரபுப்படியான வாய்பாடுகளைக் கொண்டுள்ள இச்சுவடியில் ஆயிரம் வரையிலான எண்களுக்கு வாய்பாடுகள் எழுதப்பட்டுள்ளன. பின்னங்களுக்கான வாய்பாடுகளும் இதேமுறையில் கூறப்பட்டுள்ளன. அனைத்தும் தமிழ் எண்களால் ஆனவை. எல்லா ஏடுகளும் நீளமான நரம்பு நீக்கப்படாத சட்டங்களால் அமைந்தவை. வாய்பாடுகளை எழுதிப் பழகும் தொடக்கக் கல்வி நிலையினர் எழுதிப் பழகிய ஏடுகளாக இவற்றைக் கொள்ளலாம். இறுதியில் வெற்றேடுகள் சில உள்ளன.

## 841. வேடிக்கைக் கணக்குகள்

**அ.** 381:622; **ஆ.** 35 ஏடுகள்; **இ.** 38 x 2.5 செ.மீ.; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** முதல் ஏடு இல்லை; ஒருசில ஏட்டு எண்களைத் தவிர பிற எண்களை அறிய முடியாதவாறு ஏடுகள் சிதைந்துள்ளன. **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

முப்பதுக்கு முப்பது 600... 32-60-600-60-32-60... ஆக 96க்கு ஈவு. இந்த நாலையும் நூறில் பெருக்க 104400. ஆதலால் 64 அடிக்கோலால் நானூறும், முப்பத்திரண்டு

அடிக்கோலும் இது எத்தனை யென்றால்... இந்த நாலும் நூறில் பெருக்க 104400. ஆகையால் 400 என்று சொல்லுவது.

முடிவு

> பைய அணுத்துகள் பஞ்சு மயிர்முனை
> அய்வி யென்ன தேறச் செய்வன்
> வழியெல் லாம்எத்து சிலநாள் விரலில்
> தட்டிலே பன்னிரண்டு சாண் - (பக். 34)

என்பது நில அளவு கோலின் சின்னம் அறிவித்தல். அணுவு கொண்டது தேத்துகள். தேத்துகள் எட்டு கொண்டது பஞ்சுத்துகள். பஞ்சுத்துகள் எட்டு கொண்டது அய்வி- அய்வி எட்டு கொண்டது மயிர்முனை-மயிர்முனை எட்டுக் கொண்டது நுண்மணல்-நுண்மணல் எட்டு கொண்டது வெண்சிறுகடுகு-வெண்சிறுகடுகு எட்டு கொண்டது எள்ளு-எள்ளு எட்டு கொண்டது நெல்லு- நெல்லு எட்டு கொண்டது விரல்-விரல் பனிரெண்டு கொண்டது சாண்-சாண் இரண்டு கொண்டது முழம்.

குறிப்புரை

எண்களின் பெருக்குத்தொகை, வகுத்தல் ஈவு, தொகைக் கணக்கு, காலடி கண்டு சொல்வது, சதிரங்கத்துக்கு விபரம், நிலத்துக் கணக்கு, அணு முதலியவற்றின் அளவைகள் போன்ற அளவைக் கணக்குகளுக்கான வினாக்களும் விடைகளும் கூறப்பட்டுள்ளன.

## 842. வேடிக்கை விலைக் கணக்குகள்

**அ.** 425:669; **ஆ.** 42-50 ஏடுகள்; **இ.** 40.9 x 3 செ.மீ.; **ஈ.** 7-8 வரிகள்; **உ.** ஓரளவு சிதைவு; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

ஊருக்கு சுவயனம் ஊர்ப்பங்கு மேற்படி வயனம் இன்னும் ஒரு கிராமம்... ஈய ஈவு இருபத்தி ஒன்றே முக்காலே அரைக்கால். ஆதலால் 5¼–க்கு 21, 8 ¾, 4½–க்கு நூறில் மாற 450. இதை வேலி 2க்கு ஈய யீவு 18¾. ஆதலால்

4 ½–க்கு... 10க்கு மாற 750. இதை வேலி 2க்கு ஈய யீவு 31¼. ஆதலால் 7½, 1–க்கு... 3–க்கு 1,2½.. 4–க்கு வேலி நிலம் 24.

## முடிவு

ஒரு அமலதாரன் கம்மல் வராகன் 1¼... ஒப்படியான பிறகு ஓசத்தி எடுத்தபடியினாலே மேற்படி விளங்கிப் போனார். ஆறுபேர் அமலதாரன் அழைக்கப் போனார். அது ஐம்பத்தொன்று. தப்பினவிடத்திலே வாரது இல்லையென்றார். அது ஐந்து. படி 5, ஒன்னாக் கொடுக்க வேண்டும் என்று கேட்டால் 77–க்கு 22 குடுத்தால் சரி என்றான்... இந்தப்படி பார்த்துச் சொல்லுவது.

## குறிப்புரை

கிராம நிலப் பங்கீட்டுக் கணக்கு, பொதுக்கணக்கு, நாற்று முடிக் கணக்கு, ஏரி, மதகுக் கணக்கு, பொன்விலைக் கணக்கு, வெள்ளி கணக்கு, கூட்டுத்தொகை காணல் முதலான கணக்குகள் காணப்படுகின்றன. அனைத்தும் தமிழ் எண்களால் ஆனவை.

# 5. ஆவணம்

## 843. (ஆவணக் குறிப்புகள்)

**அ.** 469:718; **ஆ.** 102 ஏடுகள்; **இ.** 56 x 2.5 செ.மீ.; **ஈ.** 4-5 வரிகள்; **உ.** ஏடுகள் முறியும் நிலையிலுள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

விய வருஷம் வைகாசி மாதம் 31ஆம் தேதி புதுத்தெருவில் வடக்கு மனைக்கிழக்கு முதல் பங்கு ஐந்து. குணகுணிக்காடு வெட்டிக்கு முதல் ஐந்தாம் பங்கு என்பது தயிலிக் கொல்லைக் கீழ்ப்பாதிக்கு 29ஆவது தெற்குக் கொல்லை கிழக்கு முதல் நான்காம் பங்கு 27. தெற்குப் பள்ளக் கொல்லை மேல் பாதிக்கு 27. பத்து பங்குக் கொல்லைக்கு மூன்றாம் பங்கு 10¾. சடையிலுப்பைக் கொல்லைக்கு முதல் ஐந்தாம் கொல்லைக்கு 133¾. துரையடிக் கொல்லைக்கு முதல் ரெண்டாம் பங்கு 84.

### முடிவு

சிவகடாட்சம், சங்கநாதப் பிள்ளை சாட்சி விட்டது. மாரியம்மன் கோவில் அடிக்கு, கோட்டான் தோப்புத் துறைக்கு, எட்டுக் குப்பமும், முத்தான கொல்லைக்கு 81½–ஆக, துறையடிக் கொல்லைக்கு 88 ஆக, பச்சையான் கொல்லைக்கு 19 ஆக, புளிச்சப் பள்ளம் வாய்க்காலோரம் 58 ஆக நூற்று ஐம்பத்தி மூன்றே அரைக்கால். சாமிநாதன் கையெழுத்து.

### குறிப்புரை

ஏடுகள் பலவற்றிற்கு எண்கள் இல்லை. எண்கள் உள்ளவை வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. மிகுதியான ஏடுகளில் ஒரு பக்கமே எழுதப்பட்டுள்ளது. இச்சுவடியில் ஆவணக் குறிப்புகளைக் கொண்ட கணக்குக் காணப்படுகிறது.

அதாவது ஒரு கிராமம் என எடுத்துக் கொண்டால் அதிலுள்ள நிலங்கள் யார் யாருக்குரியவை, அவர்களுக் குரியவை என மெய்ப்பிக்க எழுதிக் கொடுத்தவர், அந்நிலப்பகுதிகளின் பெயர்கள், அந்நிலங்கள் என்னவாக உள்ளன (வீடு/தோட்டம்/காடு/தோப்பு) என்பன போன்ற விபரங்கள் காணப்படுகின்றன. இங்ஙனம் நிலங்கள், நிலங்களின் உரிமையாளர்கள், சொத்துக்களின் விபரங்கள், தமிழ் ஆண்டு, மாதம், தேதி, சொத்துக்களின் நான்குபுற எல்லை கள், நீள, அகல அளவுகள் முதலான செய்திகள் இடம் பெற்றுள்ளன.

## 844. ஆவணம்

**அ.** *583:941*; **ஆ.** *25* ஏடுகள்; **இ.** 52.5 x 3.5 செ.மீ; **ஈ.** 7–8 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** மிகக் கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

*1820* வருஷம் பிப்ரவரி மாதம் *12* தேதிக்குத் தமிழ் பிரமாதி வருஷம் மாசி மாசம் 2 தேதி, சனி வாரம் நாள் கொண்ணூர் வெங்கடாசல மகனுக்கு மேற்படியூர் சங்கர முதலி எழுதிக் குடுத்த குதுவைக் கடன் சீட்டு யென்ன வென்றால், முதலி சரவண அருணாசலம் முதலி வீடும், மேற்படி கிராம மிராசும் நான் யேலத்தில் யெடுத்ததுக்குத் திருநின்றையூரிலிருக்கும் தாலூக்கா முனிஷிப்பு கோர்ட்டார் தீர்ப்பு செய்து யேககிஸ்திக்குக் கட்டு குடுத்த படிக்கு மேற்படி யேககிஸ்திக்குக் கட்டில் கண்டிருக்கிற படிக்கு யென்வீடும், மேற்படி கிராமிராசும் யிதுகளை நாளது தேதி தங்களிடத்தில் குதுவையாக வைத்துக் கடனாக வாங்கின, சென்ன பட்டணம் செல்லும் படிக்குப் பூவராகன் *107–½, 17–½.* யிந்த விராகன் *17–1–*க்கும் யிம்மாச முதல் மாதம் ஒண்ணுக்கு வராகன் *1–*க்கு வட்டி வராகன் ஒண்ணு ஆக வட்டி கூட்டி கூடிய வட்டியும் முதலும் யிதற்கடுத்த விக்கிரம வருஷம் ஆனி மாசம் 30 தேதிக்குள்ளே குடுத்து விட்டு யென்யேக கிஸ்திக் கட்டை மீட்டுக் கொள்ளக் கடவேனாகவும்.

## முடிவு

வட்டியும் முதலும் நாலது வருஷம் பங்குனி மாசம் 30 தேதிக்குள்ளே உமக்கு நான் செலுத்தி மேலெழுதிய நிலங்களை மீட்டுக் கொள்ளக் கடவேனாகவும். மேலெழுதிய கெடுவுப்படிக்கு மீட்டுக் கொள்ள முடியாவிட்டால் அது முதல் உமக்கு நான் வட்டியும் முதலும் கட்டுகிற வரைக்கும் மேல்கண்ட நிலங்களை உழவடை ஒத்தியாக அனுபவிச்சுக் கொண்டு அதற்குண்டாகிய சர்க்கார் தீர்வையைச் செலுத்தி அதிலுள்ளபடி அனுபவிச்சுக் கொள்ளக் கடவீராகவும். யிந்தப் படிக்கு யென் மனராசியில் யெழுதிக் குடுத்த நிலக் குதுவைக் கடன் பத்திரம்.

க. கந்தசாமி முதலி கையெழுத்து

சாக்ஷிகள் : கொ. சபாபதி முதலி அறிவேன்

கொ. சுப்பய முதலி அறிவேன்

## குறிப்புரை

ஏடுகளுக்கு எண்கள் இல்லை. தனித்தனிச் செய்திகள் அடங்கிய பல செய்திகளின் திரட்டாக, தொகுப்பாக இக்கட்டு உள்ளது. ஆறு ஏடுகளைத் தவிர பிற அனைத்தும் நரம்பு பிரிக்கப்படாத சட்ட ஏடுகளாக உள்ளன. குதுவைக் கடன் சீட்டு, குதுவைப் பத்திரம், குதுவைக் கடன் பத்திரம், விடுதலைப் பத்திரம், உயில் இரசீது, கடன் சீட்டு, உடன்படிக்கை, தண்டல், வாயிதாப் பணம் செலுத்தல் விவரம், அடிமைச் சீட்டு, மேல் ஓலைச் சீட்டு ஆகிய வகைகளில் இருபத்தி மூன்று ஆவணங்கள் இச்சுவடியில் உள்ளன. ஆவணப் பதிவகத்தில் பதியப்பட்ட இரண்டு உடன்படிக்கைகள், அரசுக் கருவூல முத்திரை கொண்ட ஓலைகள் நான்கில் எழுதப் பெற்றுள்ளன.

இச்சுவடிக் கட்டில் உள்ள 23 ஆவணங்களும் ஆவண மொழி நடையில் எழுதப் பெற்றுள்ளன. இவற்றில் இலக்கணப் பிழைகள் மிகுதியாக உள்ளன. பல பேச்சு வழக்குச் சொற்கள், ஓரிரண்டு ஆங்கில, பாரசீக, அரபுச் சொற்கள் ஆங்காங்கே காணப்பெறுகின்றன.

இச்சுவடியின் வழி அரைரூபாய் முதல் ஒண்ணரை ரூபாய் வரை வட்டி விகிதம் வாங்கப்பட்டிருக்கிறது என்பது

தெரிகிறது. மேலும் குடிமக்களின் சொத்து விவரம், கடன் தொடர்பான விவரம், அக்கால மக்களின் வாழ்க்கை நிலை, சமுதாய நிலை, பண்பாடு, பழக்க வழக்கங்கள் முதலியன தெரிய வருகின்றன. சாதி, சாதிப் பிரிவு, உறவு முறை பல பெண்டிரைத் திருமணம் செய்து கொள்ளும் பழக்கம், கொத்தடிமை முறை, நில அமைப்பு, கிராம அமைப்பு, ஊர்ப் பெயர்கள், வழக்குச் சொற்கள், பொருட்களின் பெயர்கள் போன்றன பற்றியும் அறிய முடிகிறது.

எழுதப்படும் நிலபுலன்களின் கிரய சாசனங்கள், ஒத்தி, அடமானம் போன்ற கடன் சாசனங்கள், பங்காளிகளின் பாகப் பிரிவினைப் பத்திரம், ஒப்பந்தங்கள், அதிகாரப் பத்திரம் போன்ற சாசனங்களில் கண்டுள்ள முறைகள் இன்றும் மாறுதலின்றி எழுதப்பட்டு வருகின்றன என்பது தெரிகிறது.

## 845. ஆவணம்

**அ.** ***584:942***; **ஆ.** *11* ஏடுகள்; **இ.** 46.5 x 2.5 செ.மீ; **ஈ.** 4–6 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** மிகக் கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

விளம்பி வருஷம் மாசி மாதம் *6* தேதிக்கு யிங்குலீசு *1839* வருஷம், பிப்ரவரி மாதம் *16* தேதி சென்னப் பட்டணத்தில் இருக்கும் பந்தர் சரவணக் கவுண்டர் குமாரன் வீராசாமிக்குத் தண்டையார்பட்டு, வெங்கடாசலம் முதலி குமாரன் அருணாச்சல முதலி எழுதிக் கொடுத்தது. கொண்ணூர் பங்கு *12–½*–யில் என் பங்கு ¼–க்கு நிலப் பிரிவு விவரம்.

### முடிவு

பங்கா பங்கிட்டுக் கொள்ள வேண்டியது. நாவிதனைச் சேருகுறது. வீட்டில் வாய்க்கரிசி பணிச்சவனைச் சேருகிறது, சங்குக் கூலி பணிச்சவனைச் சேருகிறது. வாய்க்கரிசி வெட்டியானைச் சேருகிறது, பண்ணைக்காரனைச் சேருகிறது.

### குறிப்புரை

ஏடுகளுக்கு எண்கள் இல்லை. தனித் தனிச் செய்திகள் அடங்கிய பல செய்திகளின் தொகுப்பாக இக்கட்டு உள்ளது. நத்தம் பிரிவு, காந்தமலி அம்மாளுடையது, காந்தமலி அம்மாள், சிவகாமி அம்மாளுடையது என்ற உட்தலைப்பு கள் உள்ளன. வரவு செலவு கணக்குகள், நிலங்கள் யார் யாருக்குரியவை, அந்நிலப் பகுதிகளின் பெயர்கள், அந்நிலங்கள் எந்தெந்தத் திசைகளில், எந்தெந்த இடங்களில் இருக்கின்றன முதலான செய்திகள் இடம்பெறுகின்றன.

## 846. நிலக்கணக்கு

**அ. 476: 725; ஆ.** *150* ஏடுகள்; **இ.** 52 X 2 செ.மீ; **ஈ.** *4-6* வரிகள்; **உ.** ஏடுகள் முறைமாறி, மிகவும் மோசமான நிலையிலுள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

...ஆகக் கொல்லை அளவு ரெண்டு... இன்னும் தென்னங் காய் மரம் இரண்டு வேலிக்கு மேற்கு பிறகுடி முத்து வீரன் வீடு... இருடியான்மனைக் கொல்லை முன்நிலம் நுழைவு. இதற்கு வலமா தடிவேலி, பாட்டை வேலி இதற்குத் தெற்கு. வாய்க்காலுக்கு வழி மானாவாரி மணல் தருசு பிற குடி வீரமுத்து உழவனுடைய... ஆக எள்ளுச் சாகுபடி சமுதாய அனுபோகம்...

### முடிவு

பெரிய சிதம்பர பிள்ளை அனுபோகம்.இதன் வடக்கு வடபுறம் சாமிக்காடு.ஆக இதன் அளவு *175* க்கு *178* வரைக்கு இதன் அளவு *38, 14* குழி பிரம்ம பொதி வகை இரண்டு. இதற்கு மேடம் *13,38*...

### குறிப்புரை

நிலங்கள் உள்ள இடம், நிலங்களின் உரிமையாளர், தற் போது பயன்படுத்தி வருபவர்களின் விபரம், அந்நிலங் களைப் போகியத்திற்கு விட்ட முறை, அந்நிலங்களில் என்னென்ன வகைப்பயிர்கள் எவ்வெவ்வளவு விளைந்தன

என்ற விளைச்சலின் அளவு, வேளாண்மை செய்தவனும் நில உரிமையாளனும் பிரித்துக் கொண்ட முறை முதலா னவை கூறப்பட்டுள்ளன. இச்சுவடி அக்காலத்தைய நில அமைப்பு, கிராம அமைப்பு, பொருளாதாரம் முதலான வற்றை அறியத் துணைபுரிகின்றது.

## 847. நிலக்கணக்கு

**அ.** **477:726;** ஆ. *100* ஏடுகள்; **இ.** *53* X *2.5* செ.மீ.; **ஈ.** 4-6 வரிகள்; **உ.** மோசமான நிலை; **ஊ.** படிக்கக்கூடியதும், சில இடங்களில் தெளிவற்றதுமான எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

விரோதி வருசம் கார்த்திகை மாதம் 13ஆம் தேதி சாவடிப் பள்ளம் கீழ்ப்பங்குக்கு முப்பத்தி மூன்று, பெருமாகுளம் நடுப்பங்குக்கு இருபத்தி ஒன்று, அங்கசாலை மானியம் கீழ்ப்பங்குக்குப் பனிரெண்டு, குரவன் பள்ளம் மேல் பங்குக்கு...

### முடிவு

பார்த்திப வருசம் ஆனி மாதம் 2ம் தேதி ... என்னவென்றால் தங்கள் ஊரு பேர்களுக்குச் சொந்தமான குரவம் பள்ளம் கட்டளை ஐந்து. இதுக்கு நான் ஒப்புக்கொண்டது. நிலம் ஒண்ணுக்கு நெல்லு 500 தாயம். இந்த 5½ களம் நெல்லும் இராசி கந்தே வங்கமில்லாமல் மாசி மாதம் முப்பதுக்குள் சரியான முத்திரை மரைக்காலால்... கொண்டு வந்து அளந்து கணக்கைப் பெற்றுக் கொள்ள வேண்டியது.

### குறிப்புரை

நிலங்கள் எந்தெந்தத் திசைகளில், எந்தெந்த இடங்களில் இருக்கின்றன, அவை யார் யாருக்குரியன என்ற விபரங் களும், தோட்டம், காடு, வயல், வீடு முதலியவற்றின் பலதரப்பட்ட விபரங்களும் கூறப்பட்டுள்ளன. மேலும் நில உரிமையாளர் குத்தகைக்கு நிலத்தை விடும் தமிழ் ஆண்டு, மாதம், நாள் ஆகியன குறிப்பிடப்பட்டு, அந்நிலத்திற்குக்

குத்தகையாக விளையும் தானியத்தில் எவ்வளவு தரவேண்டும், எப்பொழுது தர வேண்டும், எந்த அளவால் அளந்து தரவேண்டும், தந்தபின் தந்ததற்கான குத்தகைக் கணக்கை நில உரிமையாளரிடமிருந்து எப்படி எழுதிப் பெற்றுக் கொள்ள வேண்டும் என்பன போன்ற செய்திகளும் தரப் பட்டுள்ளன.

## 848. வீட்டிலுள்ள பொருட்களின பட்டியல்

**அ.** **436:682** ; **ஆ.** *4* ஏடுகள்; **இ.** *31* X *2.5* செ.மீ.; **ஈ.** *3-5* வரிகள் **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

### தொடக்கம்

தாம்பரம் சொம்பு-*4*, மேற்படி கோல் பாத்திரம்-*12* ஆக *13*, சருவம் -*4*, ஈயம் கச்சிடி-*3*, சொம்பு *1*, சோட தவலை *1*, சின்னசோட தவலை *1*, கரண்டி முட்டை-*1*, கரண்டி *1* ஆக *8* ஆக வகுப்புச்சர உருப்பு *45*.

### முடிவு

இரும்புக்கோடாலி-*1*, கொடுவாள் -*2*, மண்வெட்டி -*2*, அருவாமனை-*2*, தேங்காய்த்திருவல்-*1*, அருவா-*2*, கெந்தளம்-*1*, அருகுவெட்டி-*1*, சட்டுவம்-*2*, தேங்குழல் உரல்-*1*, வாணா-*1*, பெரியவாணா-*1*, பெரியகரண்டி-*1*, கரண்டிமுட்டை-*4*, வள்ளம்-*1*, படி-*1*, வாழப்பட்டை அருவாள்-*6* ஆக *27*.

### குறிப்புரை

பொருட்களின் பெயர்கள் வழக்காற்றில் இருந்த முறையை அறியத் துணை நிற்கின்றன. இச்சுவடியில் 4 ஏடுகளில் மட்டும் வீட்டிலுள்ள பொருட்களும் பெயர்களும் அவற்றின் எண்ணிக்கைகளும் குறிக்கப்பட்டுள்ளன. பிற 15 ஏடுகள் வெற்றேடுகளாக உள்ளன. பொருள்களை வகைப்படுத்தி அந்தந்த வகையின் ஈற்றில், 'ஆக இத்தனை உருப்படிகள்' என்பதாகத் தொகைகள் கொடுக்கப்பட்டுள் ளன. அந்தத் தொகை எண்கள் சில இடங்களில் தவறாகக் காணப்படுகின்றன.

## 849. வீட்டுக்கணக்கு

**அ.** **441:687; ஆ.** *6* ஏடுகள்; **இ.** *52* X *2.5* செ.மீ.; **ஈ.** *3-5* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

### தொடக்கம்

..........ப்பிசி திருச்சி சேர் பாசாரி தச்சுக்கு ரூபாய் 24, அய்யா வெங்கடாசலம், சிவதரகாரியம் தச்சு 3, 25, சோமு வெங்கடாசலம் அய்யாசாமி, சிவதர தச்சு 4, 26, சோமு வெங்கடாசலம் அய்யாசாமி சிவதர தச்சு 4, 27, சோமு வெங்கடாசலம் அய்யாசாமி மேற்படிக்கு உத்திரம்..........

### முடிவு

மேற்படி 12 அய்யாசாமி தச்சு ஒன்று
மேற்படி வெங்கடாசலம் தச்சு ஒன்று
மேற்படி நடேசன் தச்சு ஒன்று
மேற்படி நடேசன் தச்சு ஒன்று
பதினொான்று தச்சு ஆறு
13 தச்சு ஆறு
14 சேர் சிவ இரண்டு
17 சேர் அப்பாவே மூன்று
மேற்படி சி.ந. இரண்டு
பதினொான்று சேர் அப்பாவே மூன்று

### குறிப்புரை

வீட்டுச் செலவுகளுக்கு என்ற முறையில் குடும்பத்தில் நிகழும் அனைத்துச் செயல்களுக்கும் ஆகின்ற செலவினங்களின் கணக்குப் பட்டியல் குறிக்கப்பட்டுள்ளது. மேலும் வீடுகட்ட ஆன செலவுகளின் விபரக் கணக்குகள், தச்சரின் நாட் கூலிக் கணக்கு, தச்சு எண்ணிக்கை (தச்சன் ஒருநாள் செய்து முடித்த பொருட்களின் அளவு '*தச்சு*' எனப்படும்) முதலியவையும் குறிக்கப்பட்டுள்ளன.

## 850. வீட்டுக்கணக்கு

**அ.**445:692; **ஆ.** 65 ஏடுகள்; **இ.** 56 X 3 செ.மீ.; **ஈ.** 4-5 வரிகள்; **உ.** ஏடுகள் முறியும் நிலையிலுள்ளன; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

வெகுதான்ய வருசம் சித்திரை மாதம் 15ம் தேதி இறையிலிக்கு ரூபாய் 68¼, எள்ளு வெட்டி ரூபாய் 95¼, சன்னான் ஓடைப்பள்ளம் ரூபாய் 29 1/8; வீரன் வீட்டடி ரூபாய், 39¼, புளிச்சப்பள்ளம் ரூபாய் 42. ஆக ரூபாய் 274¼.

### முடிவு

வெகுதான்ய வருசம் ஆவணி மாதம் 15ஆம் தேதி தேகுப்பத்தெருக் கொல்லை விலைக்குப் பெத்தான் கொல்லை ரூபாய் 71¼, சடையன் கொல்லை ரூபாய் 48½, நாயக்கன் பாலன் கொல்லை ரூபாய் 140½, ஆக்குரான் கொல்லை ரூபாய் 28¼, ஊமையன் கொல்லை ரூபாய் 74¾ ஆக ரூபாய் 36 3¼.

### குறிப்புரை

வயல், காடு, தோட்டம், வீடு போன்றவற்றை யார் யார் எப்படிப் பங்கிட்டுக்கொள்ளவேண்டும் என்ற செய்திகளே பெரும்பாலும் காணப்படுகின்றன. மேலும் தென்னங் கன்று வாங்கியது வகையில் ஆன செலவு, பயிர் நடுவதற்கு ஆன செலவு முதலான செலவுகளும் குறிக்கப்பட்டுள்ளன. அத்துடன் கோவிலில் நடைபெறும் சிறுசிறு பூசைகளுக்கும் பெரிய உற்சவங்களுக்கும் அளிக்கப்பட்ட நன்கொடை விபரங்கள் இடம் பெற்றுள்ளன. கோவில் சிவராத்திரி உபயம் ரூ.500, சோதனூர் மாதன் உபயம், வைத்தீசுபரங் கோவில் அருச்சனை உபயம், கிருத்திகை உபயம் என்பன போன்றவை காட்டுகளாய் அமைகின்றன.

# 851. வீட்டுக்கணக்கு

**அ. 473:722; ஆ.** 40 ஏடுகள்; **இ.** 56 X 25 செ.மீ.; **ஈ.** 4-7 வரிகள்; **உ.** ஏடுகள் உடையும் நிலையிலுள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

## தொடக்கம்

வியவருசம் வைகாசி மாதம் 18ஆம் தேதி, இச்சிலடிக் குளம், கீழ்ப்புறம் 21... 200 கூட்டக் கீழ்ப்பாதி இச்செலவு கண்ணி ஓரம் ஓட்டு குண்டு.. முக்கால் வட்டம் குண்டு ரெண்டில் தென்பாதிக் கீழ்ப்பாதிக்கு 31 ...

## முடிவு

மேல் பெருமாள் பள்ளம் கிராமம், கிழக்கு, மேட்டுத் தெருவுக்குத் தெற்கு, குளத்துக்கு வடக்கு, சாமிநாதப் பிள்ளை மனைக்கும் வீட்டுக்கும் கிழக்கு, மேலான் மனைக்கு மேற்கு. இந்த நான்கு எல்லைக்கு உட்பட்ட ஒருபங்கு மனைக்கட்டு அளவு.

## குறிப்புரை

விய ஆண்டு, சுப ஆண்டு, வெகுதான்ய ஆண்டு முதலான ஆண்டுகளில் எழுதப்பட்ட விளை சமுத்திரம் நமச்சிவாயன் பிள்ளை நிலக்கணக்கு, குடிச்சேத்தி தாதபாளையம் ஊர்க் கணக்கு முதலிய கணக்குகளின் தொகுப்பாக அமையும் இச்சுவடி நூலில் வீட்டுச் செலவு, தோட்டம், காடு, வயல், வீடு முதலான பலதரப்பட்ட விபரங்கள் கூறப்பட்டுள்ளன.

# 6. வரலாறு

## 852. சம்பிரதாய சாத்திரம் வரலாறு குருபாரம்பரியம்

**அ.** ***111:217***; **ஆ.** *123-129;* **இ.** 19 x 3 செ.மீ.; **ஈ.** *9-10* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

> **நிற்குணனாய் நேத்தியனாய் நின்மலனாய் நித்தியனாய்**
> **சற்குருவே யானசவு பாக்கியனாம் - அற்புதனை**
> **வாக்குத் துதிக்க மனம்நினைக்க வெண்சிரசி**
> **லாக்கௌவன் பாதமே யாம்**

முடிவு

சீவுர் சையோக சுவாமி. அவர் சீவுர் தேவகதியள் அவர் சீவுர் பிரம்மானந்த சுவாமி. அவர் சீவுர் அமுர்தானந்த சுவாமி. அவர் சீவுர் சவுபாக்கிய சுவாமி என்றறிய. இந்நூல் வரலாறும் குருபரம்பரையும் முடிந்தது. முற்றும்.

குறிப்புரை

**உரைநடை**. இறைநெறிக்குட்பட்ட சம்பிரதாயச் சாத்திரங்கள் பற்றிய விளக்கங்களும் குருவினுடைய தோற்றச் சிறப்பு பற்றிய விளக்கங்களும் இந்நூலில் கூறப்படுகின்றன.

## 853. திருவள்ளுவர் சரித்திரம்

**அ.** ***442: 689***; **ஆ.** *9-33 (17)* ஏடுகள்; **இ.** 27.3 x 3.5 செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.**அச்சாகவில்லை.

### தொடக்கம்

உலகத்துள் மகாசிறப்புப் பொருந்திய கைலாயங் கிரியிலே அரசிருக்கை மண்டபத்தில் பிர்மாதி முப்பத்து முக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணாயிர முனிவர்கள், கின்னரர், கிம் புருடர், கருடர், காந்தர்வர், சித்தர், வித்தியாதரர் முதலானவர்கள் வணங்கிச் சூழும்படி, பார்வதி சமேதரராய், பரமசிவன் திருவோலக்கமாக எழுந்தருளியிருந்தார். அப் போது தேவியானவள் எழுந்து வணங்கி நின்று சுவாமி திரிலோகத்திலே இல்லறம் வழுவாது நடந்து கதியடைந்த வருண்டோவென்று வினவ, சுவாமி திருவுளம் பற்றுகிறார். உமையவளே தெய்வலோகத்தில் வசிஷ்டர், அகத்தியர், அயன், புயங்கன், சம்பு என்றைந்து பேருண்டு. பூலோகத்தில் திருவள்ளுவரென்றொரு வருண்டு....

### முடிவு

.... அந்த அம்மாள் திருமேனியைச் சமாதி பண்ணினார். பின்பு அனேக நாளிலிருந்து அனேக மகிமைகளைச் செய்து யேலேல சிங்கர் முதலாகிய சிஷ்யர்களுக்குப் பூரண அனுக்கிரகம் பண்ணிப் பின்பு யேலேல சிங்கரை அழைத்து நமக்குப் பரிபூரண தீட்சை நேரிட்டிருக்கின்றதால் நாம் பரிபூரணமான பின்பு நமது ... தைபுறி கட்டி இழுத்து ஊருக்குப் புறத்தில் புதரிற் போட்டு விடுமென்றனுக் ....

### குறிப்புரை

**உரைநடை**. திருவள்ளுவரைப் பற்றிய வரலாறு கதையாகக் கூறப்பட்டுள்ளது.

## 854. பாண்டியர் வரலாறு

**அ.** ***586: 944***; **ஆ.** *1-6* ஏடுகள்; **இ.**23 x 3 செ.மீ.; **ஈ.** 6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

### தொடக்கம்

மூன்றாவது திருநகர் கண்டது. குலசேகரன் அவன் மகன் மலையத்துவச பாண்டியன் தடாதகைப் பிராட்டியார்

திருவவதாரம். கலியாண சவுந்திரபாண்டியனின் வெள்ளி யம் பல நடனம். குண்டோதரனுக்கு அன்னமிட்டது. அன்னக் குழியும் வையையும் அழைத்தது. ஏழு கடலழைத்தது. மலையத்துவசனை அழைத்தது. வரகுணபாண்டியன் பிறந்தது. இந்திரன் முடிகாத்தது. மேருவைச் செண்டால டித்தது. அவன் மகன் செகபாண்டி மாணிக்கம் விதந்தது. வருணன் விட்ட கடலை வற்றச் செய்தது. நான் மாடக் கூடலானது.

### முடிவு

சேகயர், விதேகையர், பௌவுளர், கொல்லர், கலியாணர், தெலுங்கர், குச்சாடர், மச்சாடர், மிலைச்சர், சிஞ்சையர், கவுடத்தார், பரவர், காஞ்சியர் முற்றும்.

### குறிப்புரை

**உரைநடை**. இச்சுவடி ஆதியிலிருந்து வந்த பாண்டியர் களுடைய பெயர்களையும், அவர்கள் செய்த சாதனைகளை யும் குறிப்பிடுகிறது. அதனால் இதனைப் பாண்டியர் வம்சாவளி என்று கூறினால் தவறாகாது. இவ்வாறான வம்சாவளி ஓலைச்சுவடிகள் பிற்காலத்தில் தோற்றம் கொண்டவையாக உள்ளன.

## 855. வம்சாவளி

**அ.** ***311:536***; **ஆ.** சுமார் *260* ஏடுகள்; **இ.** 40 x 3 செ.மீ.; **ஈ.** *5 - 6* வரிகள்; **உ.** சுமார்; ஏடுகள் பலவற்றிற்கு எண்கள் இல்லை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

மருதூர், கொள்காணத்தூர், குரும்பப்பாளையம், அகரப் பேறையூர், பாடாலு...ல வாழி வகுப்பே மாதேவி மருதூர் கோட்டாதுள், திருச்சிராப்பள்ளி, தரப்பாளி, செருவேலூர், எதுரமலை, நல்லிபாளையம், அளங்கூர், உண்ணியூர், பெரியப்பாடி, காதப்பள்ளி, நவுணமங்கலம், மோளப்பட்டி, மோட்டுப்பாளயம், தூதனங்குடி...

### முடிவு

குட்டப்பட்டியில் குடியிருப்பது உப்புலி வகையறாவைச் சேர்ந்த திருமலை நாயக்கன் மகன் ரெங்கய்ய நாயக்கன், அவன் தம்பி சின்னத் திருமலை நாயக்கன், மேற்படி ஊர் அச்சநாயக்கன், கரிவண்ட நாயக்கன், கொண்டாங்கி சின்ன நாயக்கன், துவரங்குரிச்சிக்குக் கீழ்புறம் சடநாளிவதி நெல்லுப்பட்டி உப்பிலியன் மணியநாயக்கன், கருப்ப நாயக்கன்...

### குறிப்புரை

விவரணைப் பத்திரம் அல்லது பற்று என்ற பெயரில் வம்சாவளி தொடர்பான செய்திகள் அட்டவணைப் படுத்தப்பட்டுள்ளன. இராசியில் பிரிவு, நாமக்கல் தாலுக்கா தபுளி என்ற தலைப்புகள் உள்ளன. ரெட்டியார், செட்டி, நாயக்கர், படையாச்சி முதலான வகுப்பினர் அவ்வகுப்பில் எந்த உட்பிரிவைச் சேர்ந்தவர்கள், எந்த ஊரைச் சேர்ந்தவர்கள், எந்தப் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் என்ற பல்வகைச் செய்திகளும் அட்டவணைப் படுத்தப்பட்டுள்ளன.

## 856. வம்சாவளி

**அ.** ***416:660***; **ஆ.** *1 - 11* ஏடுகள்; **இ.** 41 x 3.5 செ.மீ.; **ஈ.** *4–6* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

மேற்படி ஒறையூர் தெலுங்குத் தெருவில் குடி பாபுசெட்டி தம்பி ராமசுவாமி செட்டி மேற்படியான் பங்காளிகளும் இறுப்பு மேற்கே மேற்படியூரில் குடி கொழந்தை செட்டி மறுமல் காசுகடை முத்தியன் செட்டியார் மேற்படி வீதியில் தேருக்கு தீயற நாராயணசெட்டி, தாதன் செட்டியார், சின்ன செட்டியார், கோபால செட்டியார் மேற்படியூரில் கோபாலசெட்டி மகன் அயோத்தி செட்டியார், தம்பெருமாள் செட்டியார், சித்தப்பன் கோவிந்தன் செட்டி மேற்படியான் பங்காளி ராமசெட்டியார்...

### முடிவு

தம்பி கோவிந்தசெட்டி, தம்பி பிச்சன்னா செட்டி, தம்பி முத்தாலு செட்டி, தம்பிராமன் செட்டி, தம்பி ரெங்கசெட்டி, ஒட்டப்பட்டியில் குடியிருக்கிற சக்கரப்பட்டி குடியிருக்குற வேடசந்தூர்க்கு, தெலுங்கச் செட்டி திம்முசெட்டி மகன் கோனே செட்டி, மணிகர்ண செட்டி மகன் தாண்டவராய செட்டி தம்பி மாரியப்பன் செட்டி கச்சுரி அம்மாள் மேற்படி ஊர்குடி திருமால் கொண்டான் மகன் திருமால் தானே செட்டி மகன் ரங்கசாமி செட்டியார்.

### குறிப்புரை

இந்நூல் உறையூர் தெலுங்குத்தெருவில் குடியிருக்கும் தெலுங்கு வகையறாக்கள், கருவூரில் குடியிருக்கும் தெலுங்கு வகையறாக்கள், நாமகிரி சீமை தென்புறம், மேல்புறம் தெருக்களில் குடியிருக்கும் செட்டி வகை யறாக்கள் வலசுக்குடி வகையறாக்கள், விருப்பாச்சி சீமை தெலுங்கு வகையறாக்கள் முதலான ஊர்களின், தெலுங்கு மக்களின் வம்சாவளியைத் தொடர்ந்து கூறுகிறது. இதனைத் தொடர்ந்து ஏட்டு எண்கள் இல்லாத மூன்று ஏடுகளில் தஞ்சாவூர் நகர், அம்மாப்பேட்டைக்குடி, தெலுங்கச் செட்டிகளின் வகையறாக்கள் பற்றிய சில செய்திகள் காணப்படுகின்றன. இறுதியில் சில வெற்றேடுகள் உள்ளன.

## 857. வம்சாவளி

**அ.** ***427:949;*** **ஆ.** *37* ஏடுகள்; **இ.** 38.5 x 3 செ.மீ.; **ஈ.** 3 - 5 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

காவேரிபுரம் சீமைகுடி, சேல்கண்டபுரம்குடி, திம்மிசெட்டி மகன் ஒபலிசெட்டி, வெங்கிட்டன் மகன் ஒபலிசெட்டி, சமுத்திர்தத்துகுடி விவரம், தொண்ணாகரம்.

தலங்கசெட்டி வகையறா அம்ம பேட்டை செட்டி, வளைவடமலை செட்டிக் குமாரன் வெங்கடசெட்டி

குமாரன் வடமலைசெட்டி, அப்புசெட்டி, தொரைப்பூண்டி சின்ன செட்டி, குமாரன்... குப்பு சின்னசெட்டி, முத்தியாலுசெட்டி, இராமசெட்டி.

மேற்படி அல்லிதோரை, வெங்கையன் செட்டிக் குமாரன் குழந்தைவேல் செட்டி....

### முடிவு

அவன் தம்பி நாராயணன், தம்பி புத்திரன், வெராசன், தம்பி தேங்காய்த் திட்டிலே நாராயணன் குடியிருக்கிறான். மடம் அடைத்த சேந்த புவராச மறுப்பம்குடி பழநிக் கவுண்டன் மகன் தாண்டவராயன் தம்பி, சின்னது தம்பி, பூஞ்சோலை மடத்திலே குடி, குயிலாள் மகன் அரியப்புத்திரன்...

### குறிப்புரை

காவேரிபுரம் சீமையைச் சார்ந்த சேல்கண்டபுரம் அம்மாப் பேட்டை, கல்லுக்குடி, வேடச்சந்தூர், பூதப்பாளயைம், செறுவதாட்டுப்புரம், உதியான்பாடு, புதுச்சேரி, முதலியார்ப்பேட்டை போன்ற பல ஊர்களில் குடியிருக்கும் செட்டியார், தெலுங்கச் செட்டியார், கவுண்டர் போன்ற பல குடிமக்களின் வம்ச வரலாறுகளைப் பெயரளவில் கூறிச் செல்கிறது. கிராமங்களில் பாட்டன் பெயர் பேரனுக்கும் தந்தையின் பெயர் மகனுக்கும் வைக்கின்ற முறைகள் போன்றவற்றை அறிய இச்சுவடியில் காணும் உறவுமுறைப் பெயர்கள் பெரிதும் உதவும்.

## 858. வம்சாவளி

**அ.** ***446:693***; **ஆ.** *89* ஏடுகள்; **இ.** 42 x 2.5 செ.மீ.; **ஈ.** 5 - *6* வரிகள்; **உ.** ஓர்ளவு நல்லநிலை; **ஊ.** தெளிவற்ற கிறுக்கெழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

முதுனைக்குத் தென்புறம் விருத்த விரிக்குப்பம் அரைநாழிகை வழி விருத்த விரிக்குப்பம் குட்டி செண்ப முதலி மகன் செம்ப முதலி சின்னக்கோடியன் மகன் கறுத்தா முதலி, மணக்கொல்லை பெத்தான் மகன் குழந்தை முதலி

துணையிலே குடி நயினார் குப்பத்தான் தொண்டைமான் மகன் உளிய முதலி மகன் முற்று முதலி தம்பி ஆனந்தன் தம்பிப் புத்திரன் மேற்படி செண்ப முதலி காமாட்சி மகன் வெங்கடாசலம்.

## முடிவு

நயினார் குப்பம் 15, நயினார் குப்பம் மணமுது நாட்டரையன் முத்து மகன் அரிய புத்திரன் தாண்டராயன் ஆண்டிச் சித்தப்பன்... நல்ல தம்பி புத்திரன் மகன் ஆன...

## குறிப்புரை

விரித்தவிரி குப்பம், மேல் குப்பம், வெள்ளையன் குப்பம், விக்கிரவாண்டி, அந்தராசி மண்டபம் அம்மேரி மேல் குப்பம், மெயினார் குப்பம், குள்ளனூர், கறுப்பூர், உடையார் பாளையம், வில்லியனூர் முதலான கிராமங்களிலுள்ள பலவகைச் சாதியினரின் குடிவம்சப் பெயர்கள் வரிசைப் படுத்தி எழுதப்பட்டுள்ளன. இந்த ஊர்களில் பெரும் பாலானவை தென்னாற்காடு மாவட்டத்தைச் சேர்ந்தவை யாகத் தெரிகின்றன. இறுதியில் தஞ்சாவூர் சீமை குஞ்ச மேடு, பாதாகுடி போன்ற சில ஊர்களின் பெயர்களும் காணப்படுகின்றன.

# 7. ஆரூடம்

## 859. ஆரூடம்

**அ.237:453; ஆ.** *1-49* ஏடுகள்; இடையிடையே சில ஏடுகள் இல்லை; **இ.** 9 x 2.5 செ.மீ; **ஈ.** *3-6* வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** நன்று; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

இராமர் சீதாச்சக்கிரம் நம்பிப் பார்த்தவர்களுக்கு உள்ளபடி சொல்லும். நிசம் நிஷ்ட்டாந் திரமாயிச் சொல்லும், திருதிரு நமஷ்த்து.

மாடத்துப் பிள்ளையிரேமற் சிவனை உந்தன் மலர்ப் பதமே. பொய்யாத வினாயகர் துணை. காமாட்சி அம்மன் துணை. ராமசெயம்.

### முடிவு

பரதர், சத்துருக்கன். சுவாமி வாராரென்று எதிர்கொண்டு வந்து தெரிசனம் பண்ணினவிடம் மெத்த நல்லது. உத்தமம்.

சீதாதேவி அம்மன் சக்கிர சாஸ்திரம் நினைத்த காரியம் பலிக்கும்.

### குறிப்புரை

வரையப்பட்டுள்ள சக்கரத்தில் கையை வைத்துப் பலனறியும் முறையில் சீதாச் சக்கரம், இராமர் சக்கரம், தொடுகுறி சாஸ்திரம் எனப் பலவகைகள் ஆரூட முறையில் கூறப்பெறுகின்றன. மனத்தில் நம்பிக்கை வைத்து இதன் வழி பலனறிய முற்பட்டால் பலன் சரியாக அமையும் என்பதையும், நினைத்த செயல் எப்படி நடக்கும், எப்படி முடியும், வெற்றியா, தோல்வியா, நன்மையா, தீமையா, மத்திமமா, மிக நன்மையா, மிகத் தீமையா என்பன வற்றையும் நூல் கூறுகின்றது. ஒவ்வொரு ஏட்டிலும் ஒரு பக்கம் மட்டுமே எழுதப்பட்டுள்ளது.

## 860. ஆரூடம்

**அ. 345:577; ஆ.** *8-61 (43)* ஏடுகள்; இடையிடையே பல ஏடுகள் இல்லை; **இ.** 15.5 x 3 செ.மீ.; **ஈ.** 3-5 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

வல்லதோர் ஒன்று இரண்டு நூறு மர... துதித்த தாலே
வல்லவர் பொல்லாப் பாகும் நாசமாம் நினைத்த தெல்லாம்
தொல்லையாம் சிலுகு முண்டு தூரமே போனார் மீளார்
வல்லமை பேசவே நாடி வருவதும் அறிந்து செய்யவே.
நினைத்த காரியம் தெய்வத்தால் கெடுதல் - மத்திமம் -
மதுரை மீனாட்சி.

### முடிவு

நூறு, ஒன்று, ஒன்று வந்துதிக்குமாகில் .... கடுங்கோளுஞ் சிந்தை பிளந்திடும் தீ.... யாகும். பிரியமாய் மனையாம் தெய்வமாம் பிசகுண்டு நன்மையல்ல. அன்புடன் நினைத்ததெல்லாம் அழிந்திடும். கருமம் தீது. நினைத்த எண்ணம் குலதேவதையால் மத்திமம். குலதேவதைப் பூசை செய்யவும். மீனாட்சி பாரணம்.

### குறிப்புரை

ஆரூடம் தொடர்பான செய்திகள் உள்ளவரை முழுமையாக இருக்கின்றன. எண்களும், தெய்வங்களும் ஆரூடம் பார்க்கும் முறையில் எத்தகைய பலன்களை விளைவிக்கும் என்பது கூறப்படுகின்றது. இம்முறையில் அனைத்து ஏட்டிலும் எண்கள் தரப்பட்டிருக்கும். அவரவர்க்கு வரும் எண்ணைப் பொறுத்து, அவ்வெண்ணிற்குக் கொடுக்கப் பட்டுள்ள தெய்வத்தை வைத்துப் பலனறியப்படும்.

## 861. ஆரூடம்

**அ. 383:626; ஆ.** *12* ஏடுகள்; *13, 17, 18, 30, 31, 32, 34, 36, 39, 61, 63, 78* ஆகிய ஏடுகளே உள்ளன; **இ.** 15 x 2.5 செ.மீ.; **ஈ.** *4* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கிறுக்கல்எழுத்து; ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

இந்த யாவாரம் பண்ண நன்றோ தீதோ?
இந்த யாவாரம் பண்ண அனேக லாப முண்டு.
இந்தத் தேசத்தில் போக ஆனந்தமாம்.
இந்த ஈசுவரியாலே ஆக்குவது நன்று.
இந்தக் கர்பபம் பிள்ளை பிறந்து வித்துவான் ஆவான்.

முடிவு

இந்தப் புடவை கொள்ள லாபமுண்டு.
இந்தக் கிணறு வெட்ட நீர் நன்னாய்ப் பலிக்கும்.
இவனுடனே கூடி லாபம் பண்ண அலைச்சலும் கேடும் மெத்த உண்டு.
இந்தப் பசு கொள்ள அதிக லாபமுண்டு. கெடுதியற்றுப் போம்.
அங்காடியாலே அலைச்சல் மெத்தவுண்டு.

குறிப்புரை

ஆரூட சோதிடம் பற்றிக் கேட்கப்பட வேண்டிய வினாக்கள் ஒவ்வொரு ஏட்டின் இடதுபுறமும் அமைகின்றன. அவற்றிற் கான விடைகள் வரிசை முறைப்படி ஒரு பக்கத்திற்கு நான்கு விடையாக ஓர் ஏட்டிற்கு எட்டு விடைகள் என்ற அமைப்பில் காணப்படுகின்றன.

## 862. உள்ளமுடையான்

**அ.** 209:419; **ஆ.** *1-30* ஏடுகள்; **இ.** 14 x 2 செ.மீ; **ஈ.** 4 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

நளனென்கிற ராசா, சனியனுக்குச் சூதினாலே இராச்சியம் தோற்று வனவாசம் போகையிலே அணைந்து சீலை பிரிந்த யிடமிது – நல்லதல்ல; பின்னால் பயணமுண்டு.

தேவர்கள் வனவாசம் போன இடம். சனியின் பார்வையாக இவன் இருபத்தொரு நாள் மட்டுக்கும் ஏதொரு காரியமும் பலியாது; நினைத்த காரியமும் ஆகாது. சனியின் பொல்லாத வினையுண்டு; மத்திமம்.

முடிவு

**திருமலை மீதில் பள்ளிகொண்ட இடம் - இது நன்றல்ல; பின்பலனுண்டு; நாடிக் கேட்ட காரியம் பலியாது; 21 நாள் மட்டுக்கும் யாதொரு காரியமும் கைகூடாது; இது மத்திமம்.**

குறிப்புரை

முதலிலுள்ள சட்ட ஏட்டில் நூற்தலைப்பு உள்ளது. தொடுகுறி சாத்திரத்தில் பல சுவடி ஏடுகள் உள்ள கட்டில் ஒரு கயிற்றைப் போடுவது அல்லது குத்தூசி குத்துவது அல்லது கையால் எடுப்பது அல்லது கிளி, எலி போன்றவற்றைக் கொண்டு எடுப்பது என்ற முறைகளும் அடங்குகின்றன. உள்ளமுடையான் என்று இச்சுவடியின் ஓர் ஏட்டில் குறிப்பிடப்பட்டுள்ளதால் இம்முறையில் பலன் அறிவதற்கு உள்ளமுடையான் என்ற பெயர் அமைவதை யும் அறிய முடிகிறது. கயிறு போட்டு எடுத்த ஏட்டில் காணப்படும் பலனைச் சொல்லுவதாக இந்நூல் அமைகின் றது. இதிலுள்ள முப்பது ஏடுகளும் முப்பது வகையான பலன்களைக் கூறுகின்றன. நளன் தமயந்தியைப் பிரிந்த இடம், தேவர்கள் வனவாசம் போன இடம், திருமால் பள்ளிகொண்ட இடம், சந்திர கிரணம், சூரிய கிரணம் கண்ட இடம், ரகுநாயக்கருக்குக் கல்யாணம் பண்ணின இடம் முதலான பல இடங்களின் பெயர்கள் இச்சுவடிக் கட்டில் இடம் பெற்றுள்ளன. ஒருவருக்குரிய பலன் அவருக்கு ஏட்டில் வந்த இடத்தை வைத்து அறியப்படுகின்றது. ஏட்டெண் இல்லா இறுதி ஏட்டில், ''தேசோதாபாயி - சிந்தாதிரிப்பேட்டை நாலு மேனடித் தெருவு மாமியார் - தனம் = மருமகப்பிள்ளை - தனுசுங்கு = புருஷோத்தும செட்டி மாமியார் மினியம்மாள் = வேதம்'' என்ற குறிப்புள்ளது. ஏடுகளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுதப்பட்டுள்ளது.

## 863. உள்ளமுடையான் சாத்திரம்

**அ. 187:387; ஆ.** *1-67* ஏடுகள்; **இ.** 10.5 x 2 செ.மீ.; **ஈ.** 4-5 வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

## தொடக்கம்

காமாட்சியம்மை காஞ்சிபுரம்

உத்துடனா மறையு முண்டாம்
　உளவிய விளைவு முண்டாம்
பத்தியாய்ப் பாவம் போகும்
　பரத்துடன் துணையே யாகும்
சத்தியாய்க் காட்சி தந்து
　தயவுடன் மிகவேவாழும் தானே (1)

இது உத்தமம். காமாட்சி துணை உண்டு.

## முடிவு

சஞ்சீவி அனுமார்

சந்தனம் மணம்போலே ஆகும் சந்ததம் பலனு முண்டு
பொன்னும் பொருளுஞ் சேரும் பூமணங் கீர்த்தி யுண்டாம்
சஞ்சீவி அனுமாரைக் கண்டால் காரியம் பலிக்குந்தானே (67)

சிவமயம் முற்றும்.

## குறிப்புரை

தொடுகுறி சாத்திரம் போன்று அமையும் இந்நூலில் காமாட்சியம்மை, அன்னாட்சியம்மை, வருணன், இந்திர சித்து, செவ்வாய், பொய்கை, பூரணகும்பம், பகவதி, சீதேவி, விசுவாமித்திரர், அனுமார், செக்கான், சூர்ப்பனகை, சுக்கிரன் முதலான 67 பொருள்கள் பிரத்தியட்சமாகின்றன. நாம் விரும்பி எடுக்கும் ஓலைக்கு ஏற்ப ஒவ்வொரு ஏட்டிலும் ஒவ்வொரு பலன் காணப்படுகிறது. இவ்வாறு 67 வகைப் பலன்களைக் கூறுவதாக அமையும் இச்சுவடி வெவ்வேறு காலத்திற்கேற்ற பலன்களைக் கூறும் ஆரூடவகைச் சோதிடநூலாக அமைகிறது. இன்று வழக்கில் கிளிசோதிட முறையில் கிளி எடுப்பதைப் போன்று அன்று நாமே எடுத்த முறை இருந்தமை தெரிகிறது. எளிமையான முறையாகக் கருதப்படும் கிளிசோதிடம் மேனாட்டுச் சோதிடத்திலும் டோரட் (Toret) என்ற பெயரில் வழங்கி வருகிறது.

## 864. கௌளி சாஸ்திரம்

**அ. 367:608; ஆ.** *16-30* ஏடுகள்; **இ.** 14 x 3.5 செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

**ஞாயிற்றுக்கிழமை தின கெவுளிப் பலன்**

ஞாயத்துக் கிழமை தினம் அந்தக் கெவுளி பிறசாதிப் பொன்னிறமாய் முதுகிலே வெகு கீத்தா....றுக் குடனாயு மந்தாளு மக்கிழக்கு முகமாயிருந்து கொண்டு ஆகாரங் கொண்டு நிற்கும். கிழக்கே ராகு யிருப்பான் செயம்.

### முடிவு

**சனிகெவுளி சனிக்கிழமை தினம் பாக்கறது**

"..... ஓடிப்போனவர்கள் வருவார்கள். யீசானியத்தில் சனியிருப்பான். வெகு நெஷ்த்தமான பேருக்குக் கேடு வார்த்தை. தீவினை திசையி லிச்சை வரும். ஆகாசத்திலே சூரியனிருப்பான். நினைத்த காரியம் ஆகாது. பூமியிலே சந்திரனிருப்பான். சுபவார்த்தை வரும்.

### குறிப்புரை

வார நாட்களில் பல்லி விழும் நேரம், பல்லி விழும் திசை, விழுமிடம், பல்லியின் அமைப்பு முதலானவற்றிற்குரிய பலன்களைத் தொகுத்து அளித்துள்ளது. முதலிலும் இறுதியிலும் ஒவ்வொரு சட்ட ஏடுகள் உள்ளன.

## 865. சந்தனக் குறள் சாஸ்திரம்

**அ. 360:596; ஆ.** *1-59* ஏடுகள்; இடையிடையே ஏடுகள் இல்லை; **இ.** 18 x 2.5 செ.மீ.; **ஈ. 4-5** வரிகள்; **உ.** மிகநன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

### முற்குறிப்பு

ராச்சியாபாரம் ஆண்டார்கள். இந்தச் சாஸ்திரம் பொய்யா காமல் மெய்மொழியென்று பேருள்ளத்தைச் சொல்ல அவரவர் புண்ணிய பாவங்கள் எப்படியோ அந்தப்படியிருக்கும்

என்றவாறு. செப்ப எழுதியது. செங்குறும்பட்டன் நைடாக ராமப்பன் சிரேஷ்ட குமாரன் முன்னிலை.

தொடக்கம்

குலாவினூரும் ஒண்ணும் ரெண்டும் சேருமாகில்
வந்ததூரம் கண்டாய்
வானவர் தேவியாலே காரியம் பலிக்கும் கண்டாய்
கைப்பொருள் வந்து சேரும்–இது உத்தமம்; நன்று.

முடிவு

நாடிய ஒண்ணும் பத்தும் நன்மையாயி பத்துமாகில்
தேடிய ராமராலே தெருவெல்லாம் சென்னலாகும்
கூடிய கலியாணங்கள் குறையில்லா செய்ய நன்றாம்
நீடிய சிறப்பு நீங்கும் கனலு டன்சிறை விடுமே
–இது மகா உத்தமம்.

பிற்குறிப்பு

வினாயகன் துணை. கீலக வருஷம் ஆடி மாதம் இருபதாம் நாள் செவ்வாய்க்கிழமை தினம் இந்தச் சந்தனக் குறள் சாஸ்திரம் எழுதி முடிவாய்விட்டது. ஸ்ரீராமஜெயம். யெழுதியது.

குறிப்புரை

அவரவர்களின் புண்ணிய பாவங்களுக்கு ஏற்பவே பலன்களும் அமையும் என்பதைச் சுட்டும் இந்நூல் முன்சுட்டிய நூல்களைப் போன்றே தொடுகுறி சாத்திர ஆரூட வகையைச் சார்ந்ததாய் அமைகின்றது. தொடக்கத்திலுள்ள சட்ட ஏட்டில் நூல் தலைப்பு உள்ளது ஏடுகள் அனைத்திலும் ஒரு பக்கம் மட்டுமே எழுதப்பெற்றுள்ளது.

## 866. சித்தினாரூட சிந்து

**அ. தாள். 25:56; ஆ.** 7 பக்கங்கள்; **இ.** குறை; **ஈ.** அச்சாகாதது.

தொடக்கம்

திருமரு தூர்வளரும் நாக லிங்கற்
சீர்பாத கமலமென் சிரசில் வைத்து
மருவும் சித்தி னாரூடப் பொருளினை
வகுத்துச் சொல்கிறே னிந்தகீ ரூதலத்தில்
புண்ட ரீகத்தி லுறைவோன் படைத்ததில்
பொல்லாத விஷசெந் துவெல் லாமுமே
விண்டு ரைக்கக் கேளும் யினிநல்ல பாம்பு
விரியன் மலைக்கொம் பேறி மூக்கன்

முடிவு

தோற்றிய நாகம் யெட்டுப் புவிவிட்டுத் துடரும்
வனத்தில் விண்ணடர் வெறியில் போற்றிய பணி கோடி
அதற்குள் புறவலம் போலயிருந் தரசுசெய்யும்
மாநாக மென்று பேராம் கெருடற்கு மாத்திரம் பயப்படும்

குறிப்புரை

பாண்டிச்சேரி, பிரெஞ்சு இன்டாலஜி நிறுவனத்தில் ஆர்.இ. 31234 என்ற எண்ணுள்ள இச்சுவடி, இந்நிறுவனத்தில் தாள் சுவடியாக உள்ளது. 'அத்தி மாமுகவன் செய்ய அடியினைக் கமலம் போற்றி', 'தண்டமிழ் வழங்கும் வெற்றி சங்கரந் தன்னை வாழ்த்தி' என்ற இரண்டு காப்புப் பாடல்களை அடுத்து நூல் அமைகிறது. உலகிலுள்ள விசச் செந்துக்களின் பெயர்கள், விசங்களின் கொடிய தன்மைகள், பாம்பு கடித்த நேரம், கடித்த இடத்தின் வடிவ அமைப்பு, கடித்த விதம், மரணத்திலிருந்து மீளமுடியாத நிலை, மந்திரத்தால், தியானத் தால், மருந்தால்மீளும் நிலை, பாம்பின் படத்திலுள்ள முத்திரையின் விளக்கம், பாம்பு கர்ப்பந் தரித்து முட்டை யிடும் முறை, பாம்பு கடித்தால் மீள முடியாத நட்சத்திரங்கள், திதிகள், பாம்பு கடித்தவனுக்கு உடலில் தோன்றும் அறிகுறிகள், விசச் செந்துக்களிடமிருந்து தப்பிப் பிழைத்தால் உயிரோ டிருக்கும் காலம் முதலியன விளக்கம் பெறுகின்றன.

## 867. தொடுகுறி சாத்திரம்

**அ.** 216:426; **ஆ.** 5-65 ஏடுகள்; **இ.** 5 x 3 செ.மீ.; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; சில ஏடுகள் செல்லரித்தும் முறிந்தும் உள்ளன; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

உதித்திடு ஒன்றோ டொன்றும்
உதவிய நூறு மாகில்
பதித்திடும் பொருள்கை கூடும்
பரமனா ரருளி னாலே
மதித்திடும் மாரி பெய்யும்
மனமது பூவுஞ் சாத்தும்
கடுத்திடுங் கோபம் நீங்கும்
கலியாணம் வந்து கூடும் – நன்று

முடிவு

மதித்திரு நூறு நூறும்
மற்றதோர் நூறு மாகில்
விதித்திடும் நன்மை சேரும்
வெற்றியும் படையும் போற்றும்
உதித்திடும் பகைய தாகும்
உறவுமாம் பலனு முண்டாம்
மதிர்முர சங்க ளுண்டாம்
மக்களும் மணமும் ஒன்றாம் – உத்தமம்

குறிப்புரை

பாடலின் இடதுபுறம் பாடல் எண்கள் உள்ளன. ஒவ்வொரு எண்ணிற்கும் ஒரு பலன் பாடலில் தரப்பட்டுள்ளது. பலன் அறிய விரும்புபவர் ஓர் ஏட்டினைக் கையால் எடுத்தோ, கயிறு போட்டு எடுத்தோ பலன் அறிய இந்நூல் உதவுகின்றது.

# 8. சரசாத்திரம்

## 868. (சரவோட்டம் முதலியன)

**அ. 487:745; ஆ.** *127-128* ஏடுகள்; **இ.** 26.5 x 3 செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

உதித்த னாளோ சைதனில் முதமுதி தருமிரத மாமிரதம்
கதியினி லுதிரமுதிர வூற்றதனிற் கருதரு தசையதாந்
தசைக்குள்
மதிப்படு மேதை மேதையில் மச்சை மச்சையில் தீயதீயினி
லுதித்தசுக் கிலமாஞ்சுக் கிலந்தன்னிற் சுரோணிதம்
வந்துதித் தனவே (2)

முடிவு

ஆண்பிள்ளை பிறக்குஞ் சந்திர னாகில் அழகுசேர்
பெண்ணென லாகும்
வீண்படு முபைய மலியென லாகும் விரிகதி ரோன்பிரி
திவியில்
ஊண்பட லொருநா ழிகைநடந் தோடில் ஓருரை வயப்போர்
களையரும்
அன்புசேர் மதிய மப்படி நடந்தால் வயசு னூறான
மங்கையர்க்கே. (9)

குறிப்புரை

மூச்சு ஓட்டத்தைக் கொண்டு பலனறியும் முறை சரசாத்திரம் எனப்படுகிறது. மூச்சு இடது பக்கம் ஓடினால் இடகலை என்றும், வலது பக்கம் ஓடினால் பிங்கலை என்றும், இருபக்கங் களிலும் ஓடினால் சுழுமுனை என்றும் கூறப்படுகின்றன. ஒருவர் ஒருநாளைக்கு எவ்வளவு முறை சுவாசிக்கிறார் என்று கூறப்பட்டு, ஆணிற்குச் சுக்கிலம்

வெளிப்பட்டுப் பெண்ணினுடைய சுரோணிதத்துடன் கலந்து கரு உண்டாகும்போது மூச்சு எப்பக்கம் ஓடுகின்றதோ அதற்கேற்பப் பிறக்கும் குழந்தை ஆணா, பெண்ணா என்பதும், பிறக்கும் குழந்தையின் உருவ அமைப்பு, குணநலன், ஆயுள் என்பன இதையொட்டியே அமையும் என்பதும் கூறப்படுகின்றன. இதனையடுத்துப் **பெரிய நாயகி அம்மன் பேரில் தோத்திரம்** என்ற பெயரில் எண்ணில் லாமல் ஓர் ஏடு உள்ளது. அதில் ஒரு பாடல் மட்டுமே உள்ளது.

## 869. மூலசரம் பதினாறு

**அ.** ***206:413;*** **ஆ.** *1-37* ஏடுகள்; **இ.** *10* x *3* செ.மீ.; **ஈ.** *7* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சந்திரனை முடித்தபிரா னுமையே நாம்சொல்
    சரநூலை யறிந்துணர்ந்த சதுர ரேனும்
அந்தமிலா மூலசர மறியா ரொன்றை
    யறியாதா ரென்பவர்க்கு யானு ரைப்பேன்
இந்திரன்போல் காலசர முலக வேட்கைக்
    கினியகுடி படையுளதே லிவற்றைக் காக்க
மந்திரிவேண் டுவர்போலச் சரநூ லுக்கு
    மூலசர மந்திரிநீ வலஞ்செய் கேளே (1)

எ-து - காலசர மறிந்துணர்ந்த பெரியோர்களானாலும் மூல சரநடை யறியாரெனில் ஒன்றுமறி யாரென்று சொல்லப் படும்.

முடிவு

ஒப்பரிய உமைக்கரன்சொல் சரநூல் தன்னை
    உயர்வடநூ லுரைத்தபொரு ளெல்லா மோர்ந்து
மெய்ப்படவே யானறிந்த பொருளுங் கூட்டி
    மேம்படநற் கவிசெய்தான் வீர வேந்தன்
செப்பரியக் கவியாரைச் சிங்க வேந்தன்
    செகமுனிவன் கோத்திரத்தோன் தெரிந்து சொன்ன

தப்பரிய கவியொருபத் தேழும் வல்லார்
சலதிவருஞ் சந்திரனை நேரொப் பாரே (17)

குறிப்புரை

**1-17 பாடல்கள் உரையுடன் உள்ளன.** சோதிடத்தில் பலனறிதல் போலவே யோகத்தின்வழி பலனறியும் முறை சரசாத்திரம் எனப்பெறுகின்றது. இது ஆருட வகைகளுள் ஒன்றாகவே கருதப்பெறுகின்றது. சரசாத்திர நூல்கள் சுவடி வடிவிலே மிகுதியாகக் காணப்பட அச்சு நூல் வடிவிலே குறைவாகவே உள்ளன. தத்தம் மனநினைவினாலே தம்மைப் பற்றிய பலன்களை அறிந்து கொள்ள உதவும் நூலாக சரசாத்திரம் இருக்கிறது. சித்தர் இலக்கியங்களிலே முக்கியமான ஒரு பகுதி 'சரம்' என்ற மூச்சுநிலை பற்றிய ஆய்வே. ஆண் பெண் அறிய, மற்ற பலன்களும் அறிய, நீர் விடுகிற தலமும், நாள்தோறும் பேதிக்கும் மலசல முதலிய ஐந்து வகை லக்கமும், வாரக் குடிநீர், சிறுநீரில் எண்ணை இட்டுப் பார்க்கும் விபரமும், வியாதி மூன்று மறிய முதலான தலைப்புகள் நூலில் உள்ளன. விரையின், குறியின் அமைப்புகள், சிறு நீர்கழிதல், மலம் போதல் - மூச்சுவிடுதல் - தும்மல் - இந்திரியம் இவற்றின் செயற்பாடுகள் ஒருநாளில் அமைய வேண்டிய முறை, மாறுபடின் நோய் என்றறிதல், சிறுநீர் கழிக்கும் போது அது வெளிப்பட்டுச் செல்லும் தன்மையை, நிறத்தை, திசையைக் கொண்டு பலனறிதல், அமாவாசை, பௌர்ணமி ஆகிய திதிகளிலும், செவ்வாய், புதன், ஞாயிறு ஆகிய கிழமைகளிலும் சிறுநீர் பொட்டுப் பொட்டாய் இற்று விழுந்தால் எத்தனை நாட்களில் இறப்பான், பிழைப்பானாகில் அதற்கான அறிகுறி என்ற முறைகளில் உடல் அமைப்பைக் கொண்டு பலனறியப் படுகிறது.

# 9. சாமுத்திரிகா இலட்சணம்

## 870. கொக்கோகம்

**அ.**15:31; **ஆ.** *2-180* ஏடுகள்; **இ.** *38.5 X 2.5* செ.மீ.; **ஈ.** *4-6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

காலீளம் புக்கிபராகிய பிள்ளையவர்கள் இராமானுஜம் பிள்ளையவர்கட்கு - விஞ்ஞாபநம்.

தாங்கள் வரவிடுத்த அடியினாலும் அதனுட் பொதிந்த பொருளினாலும் உச்சிமேல் வைத்து மெச்சுதற்குரிய கொக்கோக நூலை அடைந்து வக்கா நின்று அந்நூல் யாவர்க்கும் புலப்படுமாறு தாங்கள் மேற்கொண்ட புகழ்தற்குரிய முயற்சியைக் குறித்து நன்றி அறிவோர்களில் நான் முந்தினவனாக இருக்கிறேன்.

எ—து. – புருஷார் தங்களில் ஒன்றாகிய இன்பப் பொருளைக் குறித்துத் தமிழின் முற்காலத்து வழங்கிய இன்ப சாகரம் என்னும் பெருநூல் எல்லாம் இறந்து வெறுமையுற்ற எளியதாமென்றும் நாட்டில் இம்மொழிபெயர்ப்புச் சிறுநூலும் தேய்வுறத் தொடங்கிய காலத்தில் தக்கைத் தூக்கிப் பயன்படச் செய்த தங்கட்கு எவர் தலைதான் வந்தனத்திற்கு இறங்காமல் போகும். ஆனால் ஒரு குறைவு கண்டு, கலக்கம் அடைகிறேன் என்னென்றால்,...

### முடிவு

அயல்

கன்னலுஞ் சிலையா லுலகெலாம் புரக்கும்
கவின்மதி கவிகைநா யகனும்
மன்னிய நதியும் முறைமுறை புணர்ந்து
வாழிகா மாகமம் வாழி

பொன்னெடுந் தடந்தோள் ஆடவர் வாழி
புலகிதற் களவமுத் தார
வண்ணமென் முலையார் வாழிஎந் நாளும்
மலர்க்கணை ஐந்தும்வா ழியவே (81)

6ஆம் அத்தியாயம் முற்றிற்று.
கொக்கோகம் சம்பூரணம்.

## பிற்குறிப்பு

'கூடலூர்த்துக்குடி', ஆடூர்க்குப்பம் மதுரா-பில் கோவிந் தப்ப நாயக்கர் மணியம் அவர்கள் வாசிக்கின்ற கொக்கோகம் என்னும் புஸ்தகம் எழுதி நிறைவேறியது. கவரைவாத்தி இராமசுவாமி நாயக்கன் புஸ்தகம் எழுதியது. வியவருஷம் மார்கழிமாதம் 27ஆம் தேதி. சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

## குறிப்புரை

கரணம், பேதம், குறி இலட்சணம், மூவகை சாதி இலட்சணம், சுரத இலட்சணம், அன்பில்லா மகளிர், சங்கினி, அத்தினி, மருவுங்காலமும் கரணமும், மான்சாதிப் பெண், பெட்டைக் குதிரைச் சாதிப்பெண், பிடியானைச் சாதி, முயற்சாதி ஆடவன், ரிஷபச் சாதி ஆடவன், குதிரைச் சாதி ஆடவன், பெண்களின் பருவம், மூன்று பருவப் பெண்களைப் புணருங் காலம், பருவப் பெண்களைப் புணர்தலின் பயன், கனை, சிலதை, கனைக்கும், சிலதைக்கும் உரிய கல்வி, உபசாரம், சிலேத்துமப் பகுதி, பித்தவாதப் பகுதிகள், சிலேத்தும குணம், பித்த குணம், வாத குணம், தேவசத்துவப் பெண், சத்துவம், கனவு, கந்தர்வ சத்துவப் பெண், பிசாச சத்துவப் பெண், அசுர சத்துவப் பெ ண், காக சத்துவப் பெண், மானிடப் பகுதிப் பெண், காந்தர்வப் பகுதிப் பெண், இயக்கப் பகுதிப் பெண், கூடா வொழுக்க மகளிர், கன்னட தேசத்துப் பெண்கள், கூடாவொழுக்க முடைய ஆடவர், உள்ளன்புடைய மகளிர், போகம் விடாத பெண்கள், சுரதப் போது, தேசத்தியற்கை, மத்திம தேசத்துப் பெண்கள், கோசல தேசத்துப் பெண்கள், மராட்டி தேசத்துப் பெண்கள், கேரள தேசத்துப் பெண்கள்,

சோழ தேசத்துப் பெண்கள், பாண்டிய தேசத்துப் பெண்கள், புருஷலட்சணம், காமத்திற்குரிய ஆலிங்கனம், லதா வேஷ்டிதம், விருட்சாதி ரூடாலிங்கனம், அர்த்தச் சந்திரன் மண்டலம், அர்த்தச் சந்திரன் வசீகர மருந்து, புலி நகம், மயூர் பதம், உற்பலம், தந்தக்குறி, மூஷிகம், தோத்திரம், அங்குலி யோகத்தின் பயன், உத்தானிதம், காமாயுதம், காமௌஷிதம், உற்புல்லிதம், பொருந்தாக் காமம், கபட காமம், கரணத்தின் அட்டவனை முதலான தலைப்புகளில் ஆறு அத்தியாயங்களை உடையதாக அமைந்துள்ளது. இதில் ஆடவர், பெண்டிர் அங்கப் பொருத்த விபரங்களும், பொருந்தா அங்க முறைப் பெயர்களும் தெளிவுறுத்தப்பட்டுள்ளன. இதனை இயற்றியவர் அதிவீரபாண்டியன். அச்சான நூலின் உரை இந்தநூல் உரையினின்றும் சற்று மாறுபட்டது.

## 871. ஸ்ரீ லக்ஷ்ணம்

**அ.**14:30; **ஆ.** *1-42 (40)* ஏடுகள்; இடையிடையே சில ஏடுகள் இல்லை; சில ஏடுகள் மீண்டும் எழுதப்பட்டு இரண்டிரண்டு ஏடுகளாக உள்ளன; **இ.** *19.5* X *2* செ.மீ.; **ஈ.** *6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

### முற்குறிப்பு

பிரமாதி வருஷம், பங்குனிமாதம், 15ஆம் தேதி புதன்கிழமை, பூசநட்சத்திரம், திருக்கோவிலூர் துக்குடி ஆவிரன் கொளப்பாக்கம் வாத்தியார் அப்பாவு வாசிக்கின்ற ஸ்ரீலக்ஷ்ணம். எடுத்தவன் பார்த்துக்கொடுக்க வேண்டியது.

### தொடக்கம்

ஸ்ரீலக்ஷ்ணம்

பெண்கள் லக்ஷ்ணம் என்கிறது எப்படி அறியரது என்று அகஸ்தியர் கேட்க குமாரசுவாமி திருவுளம் பற்றுகிறார். பெண்களுடைய பாதாதிகேச பரியந்தமும் உள்ள லட்சணம் பார்த்தால் பதிவிரதை என்கிறதும், அற்ப ஆயுசு

என்கிறதும், தீர்க்காயுசு என்கிறதும் செல்வமுண்டு என்கிறதும், வறுமையுண்டு என்கிறதும், தூரத்திலே இருப்பாள் என்கிறதும், அன்னிய தேசத்திலே இருப்பாள் என்கிறதும், விதனெம் உண்டு என்கிறதும், உளுத்தம் உண்டு என்கிறதும்... சரீரத்திலே இருக்கிற லட்சணத்தினால் அறியலாம் என்று குமாரசுவாமி திருவுளம் பற்றுகிறார்.

முடிவு

வலதுதோள் தொடுத்து நடுவிரல் நுனிமட்டும் கண்டளவு ரெட்டித்துக் காலில் பெருவிரல் தொடுத்து நெத்தி மட்டுக்கும் வந்தால் வயசு நூறு உண்டு, செல்வமுண்டு. புருவம் நடுவிலே வந்தால் வயது எண்பது. செல்வம் உண்டு. முகத்திலே வந்தால் வயது எழுபது இரக்கம் உண்டு. மார்பிலே வந்தால் வயது நாற்பது. முழு வெறுமை உண்டு.

குறிப்புரை

உரைநடை. சாமுத்திரிகா இலட்சணத்தின் ஒரு பகுதியாகிய இது பெண்களின் பாதாதிகேச உறுப்புகளுக்கான இலக்கணங்களையும், அவற்றிற்குரிய பலன்களையும் தொகுத்துக் கூறுகிறது. உள்ளங்கால் முதலாகத் தோள் வரையிலான உறுப்புகளைப் பற்றிக் கூறும் பகுதிகளே இதிலுள்ளன.

## 872. ஸ்ரீரிகளின் சரீர லட்சணம்

**அ.தாள். 1:9; ஆ.** 40-51 பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

அகஸ்திய மகாமுனிவர் சுப்பிரமணியக் கடவுளைப் பணிந்து ஸ்ரீகளின் பதிவிரதையாக இருப்பவர்கள் இன்னாரென்று விவாகத்திற்கு முன்பு எப்படி அறியிறது என்று கேட்கக் குமாரசுவாமியார் திருவுளம்பற்றி அருளிச்செய்த வசன காவியம்.

பெண்களுடைய சரீரத்திலே பாதாதிகேச பரியந்திர முள்ள லெட்சணங்களைப் பார்த்தால் பதிவிரதை என்கிறதும்,

தீர்க்காயுசு என்கிறதும், செல்வமுண்டென்கிறதும், வறுமையுண்டென்கிறதும், தன்தேசத்திலிருப்பாளென்கிறதும், அன்னிய தேசத்திற்குப் போவாள் என்கிறதும்...

முடிவு

பெண்களுக்குப் பனிரெண்டு வயதுக்குமேல் அன்பது வயது மட்டும் எல்லா லெட்சணமும் ஒத்திருக்கும்.இதுக்கு முன்னும் பின்னும் ஒவ்வாது. இப்படி லெட்சணமுள்ள பெண்களை முன்னே பார்த்துக்கொண்டு பரிட்சைக்கு ஒத்து இருக்கிற நல்ல லெட்சண முள்ள பெண்களை ஆயிரம் பெண்கள் என்னேரமுஞ் சூழ்ந்து கொண்டு இருப்பார்கள் என்று குமாரசுவாமியார் அகஸ்திய மகா முனிக்குத் திருவுளம் பற்றி அருளினார்.

ஸ்ரீலட்சணம் முற்றும்

குறிப்புரை : அகத்திய மகாமுனிவருக்குபதேசித் தருளிய ஸ்ரீகளின் சரீர லெட்சணம்

**உரைநடை**. பெண்களுடைய கை (ரேகை, நகம்), முகம், கூந்தல், உடற்சுழி முதலான உறுப்புகளின் அமைப்பு, தன்மை முதலியவற்றைக் கொண்டு அவர்களது குண இயல்பு, உடல் தன்மை, உடல்நலம், பிள்ளைப்பேறு, ஆயுள், பொருளாதாரநிலை முதலியன கண்டறியப்படுகின்றன.

# 10. சோதிடம்

## 873. அகத்தியர் பாடல்
## இராசிபலன் முதலியன

**அ. 509:775; ஆ.** இரண்டு ஏடுகள்; 40 x 3 செ.மீ.; **ஈ.** 6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

மங்கையர் வயத்தில் கருவுஞ் செனித்த
மாதமா ருதுவில் மூன்றுநாள் கழித்து
நாலினில் கள்ளன் அஞ்சினி லப்பாவி
ஆறினில் தரித்திரன் யேழினில் புண்ணியன்
யெட்டினி லகமை ஒன்பதில் காமியன்
பத்தினில் கோபி பதினொன்றில் வியாதித்தன்
பனிரெண்டில் பண்டிதன் பதிமூன்றில் யோகவான்
பதினாலுக்குப் புவியன் பதினஞ்சுக்கு ஞானி
பதினாறுக்குப் பலனில்லை

கருசெனித்த பலன் முற்றும்.

முடிவு

அறிந்திட்ட ராசியத்தான் விபரங் கேளு
அப்பனே உத்திரமு மஷ்தத் தோடுமே
பறிந்திட்ட மூலமுத லுத்தி ராடம்
பாங்கான அசுபதியும் பரணி யானால்
நிறைந்திட்டு நின்றதொரு சோதி யானால்
நிலைக்குமடா காயசித்தி யோக சித்தி
உரைத்திட்டுச் சொன்னதொரு உத்திரட் டாதி
உத்தமனே ரேவதியு மெத்த நன்றே (6)

முற்றும்

குறிப்புரை

இரண்டு ஏடுகளிலும் 63ளு, 63ளு என்ற ஒரே எண் தரப்பட்டுள்ளது. இராசிபலனும், சென்ம இராசிபலனும் ஒன்று முதல் ஆறு பாடல்களில் கூறப்பெறுகின்றன. இதனை அடுத்துள்ள 64–ஆவது ஏட்டில் 'கவிசகர் குழம்பு இராமதேவர் பாடியது' என்ற குறிப்பு உள்ளது. இக்குழம்பின் தயாரிக்கும் முறை கூறப்பட்டு, இதனைத் தக்க அனுபானத்தில் கொடுத்தால் அனைத்து வியாதிகளும் தீரும் என்பதும் சொல்லப்படுகிறது.

## 874. சாதக சிந்தாமணீ

**அ.** 116:226; **ஆ.** *1-312* ஏடுகள்; **ஆ.** 24.5 x 3 செ.மீ.; **ஈ.** *8* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; இறுதியில் பல சிதைந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்றது வேறிடத்தில் அச்சாகி யுள்ளது.

தொடக்கம்

காப்பு

பூமருவும் பாரதத்தைப் பராசர முனிராசன் புகழ்ந்து கூற
மாமருவு மேருகிரி ஏடாக எழுத்தாணி வன்கோ டாக...

மங்கலன் குருதி வக்கிரன் செந்தில் வண்ணன்அங் காரக னாரால்
பங்கமில் குசன்சேய் நிலமக னரத்தன் பேனமன் சகியன் செவ்வாய்
திங்களின் செல்வனாம் வழிக்க ணக்கன் சிந்தைக்கு நாயன் பச்சைசமன்
பொங்கிடு மறிஞன் தூதன்மால் புலவன் புந்திபண் டிதன்புதன் பாகன்(4)

முடிவு

புத்திரபலம்

பன்னுரு மெட்டி லாறில் பனிரெண்டில் பாவர் நிற்க
கண்ணுரு சுபர்நோக் காரேற் காயமேல் வேதை உண்டாய்
நன்னுரு கொர்ப்ப வேதை நடுக்கத்தால் ஈன்ற பின்னர்
என்னுரு மகவிருக்க ஈன்றதாய் மரண மாமே (197)

குறிப்புரை

கேந்திரம் கூறல், இராசி அதிகார பலம், அரிட்ட பங்கம், ஆயுற்தாயம், முதல் எட்டு பாவங்களின் இயல்பு கூறல், பிதிர்மாதுரு கண்டம், புத்திர பலம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 875. சோதிடத்திரட்டு

**அ.** 27:49; **ஆ.** *1-70* ஏடுகள்; *10, 13, 16, 19, 22, 23, 25-38* ஆகிய ஏடுகள் இல்லை; **இ.** 39 x 3 செ.மீ.; **ஈ.** *8* வரிகள்; **உ.** பல ஏடுகள் சிதைந்தும் ஒட்டிக்கொண்டும் உள்ளன; முதலும் முடிவும் இல்லை; **ஊ.** கிறுக்கலான கையெழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

உலகொரு மூன்றும் ஏத்த உயர்மறை நான்கு மெண்ணெண்
கலைகளும் தோற்றப் பட்ட மறையவர் கசிந்து போராப்
புலமலி அருவி நின்ற பூவன ஈசர் பொன்னார்
மலரடி பணிய இன்றென் மனத்திடை முடியு மாதோ (1)

முடிவு

அசுவதி மகமூலம் - கேது தசை வருஷம் *7*
பரணி, பூரம், பூராடம் - சுக்கிர தசை வருஷம் *20*
கார்த்திகை, உத்திரம், உத்திராடம் - சூரிய ,, ,, *6*
உரோகிணி, ஹஸ்தம், திருவோணம் - சந்திர ,, ,, *10*
மிருகசீரிடம், சித்திரை, அவிட்டம் - செவ்வாய் ,, ,, *7*
திருவாதிரை, சோதி, சதையம் - இராகு ,, ,, *18*
புனர்பூசம், விசாகம், பூரட்டாதி - குரு ,, ,, *16*
பூரம், அனுசம், உத்திரட்டாதி - சனி ,, ,, *19*
ஆயில்யம், கேட்டை, ரேவதி - புதன் ,, ,, *17*
ஆக நட்சத்திரம் மொத்தம் *27*
மகாதிசை வருடம் *120*

குறிப்புரை

**பாடலும் உரைநடையும் கலந்துள்ளன.** ஊருக்குப் போக ஆகாத நாள், ஆரோக்கியமில்லாத நாளறிய, ஏர்கட்ட நாளறிய, சனி, செவ்வாய்க்கு அமிர்தயோகம், மரண யோகம், கரணபலன், திதிபலன், செய்வினைகள், மிருகங்கள், மேல்நோக்கிய நாள், கீழ்நோக்கும் நாள், முகட்டுநாள், யோனி, இராசி, அசுபதி, வசியப் பொருத்தங்கள், பஞ்சபட்சி, புறப்பாடு, பிற்பாடு, ஜாதகயோகங்கள், நாள் தேவதை, ராசயோகம், பஞ்சமி, கிராணந்தொடுக்கும் பலன், கிரக வக்கிரப்பலன், பரிவேடக்குறி, உடுவீனக்குறி, பிறைதொற்றல், சங்கிராந்தி தொற்றல், மக்ககுறி, அக்கினி யோகம், சதுட, நித்திய யோகம் மகாதசை வருடம், கால் ராசியில் கொள் நிலமனை சூத்திரம், தலைஉவாக்குறி, ஆடி உத்திமுடக்காத்து, பஞ்சமிக்குறி, பூரக்குறி, கிரணந் தீண்டுதல், வியாழ சரிதை, புதன் சரிதை, வியாழ அங்கிசம், வாஸ்து புருசன் எழுந்திருக்கிறநாள், சங்கிரமப் பலன் இரவில், பகலில் வருசம் பிறக்கில், வாரப் பலன், அகவிலை சொல்ல, சங்கிரமப் பலன், மழைக்குறி தெருட்சி பலன் முதலான தலைப்புகள் உள்ளன.

## 876. சோதிடத் திரட்டு

**அ. 198:401; ஆ.** *1-45* ஏடுகள்; **இ.** 17 x 2.5 செ.மீ.; **ஈ. 4-5** வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

முற்குறிப்பு

காஞ்சிபுரம் வயித்திய புருஷோத்தம செட்டி சாஷ்த்திரம். உமையவள் துணை.

தொடக்கம்

> திங்கள்முன் திங்கள் தானும் சென்மநாள் பகல்நாள் மட்டும்
> மங்கையர் புணர்முந் நாளும் வருங்கலை மரித்த நாளும்
> பொங்குபூ ரணமாந் தன்னில் பூவையைச் சேர்வை யாகில்
> அங்கமும் ஆவி சேதம் அருந்திட நரகந் தானே

முடிவு

ஞாயிற்றுக்கிழமை

திருவோணம், ரேவதி, மூலம், அஸ்தம், உத்திரம், உத்தி ராடம், உத்திரட்டாதி - இந்த ஏழும் அமிர்த யோகம். அனுஷம், கேட்டை, விசாகம், அவிட்டம், மகம் - இந்த ஐந்தும் மரணயோகம். மற்ற நட்சத்திரங்கள் சித்தயோகம்.

குறிப்புரை

**பாடல்கள் உரைகளுடன் உள்ளன.** முதல் ஏட்டிலுள்ள குறிப்பின் வழி காஞ்சிபுரம் மருத்துவர் புருஷோத்தம செட்டியார் அவர்களின் சுவடி என்பது தெரிகிறது. பெண்ணை விலக்கும் காலம், தசைப்பலன், நட்சத்திரப் பலன், தினப்பலன் தெய்வகணம், இராட்சசகணம், மனுசகணம் காணும் முறை, கரிநாள், நித்தியபலம், நட்சத்திரங்களுக்குரிய இராசி கூறுதல், இராசிகளுக்குரிய மாதங்கள், கோள்களுக் குரிய தானியங்கள், நவரத்தினங்கள், தோசமுள்ள நட்சத்திரங்கள், 27 நட்சத்திர நாட்களில் நோய் ஏற்படின் நோய்தீரும் அல்லது மரணம் ஏற்படும் காலம், 27 நட்சத்திரங்களின் வடிவம், அவற்றிற்குரிய மரம், பட்சி தெய்வம், இராசி, வாரம், தசை, அதிபதி, சூனியம், வயது முதலியன, பிதுர்ஸ்தானமறிவது, வாரசூலை, அயனம் ஆண் பெண் இராசி, இராசி இருப்பிடம், இராசிக்குக் கால், விருந்து சாப்பிடுகிறவர்க்கு, எண்ணை முழுகிற சாஸ்த்திரம், அமிர்த மரண, சித்தயோகம் முதலானவை கூறப்பட்டுள்ளன. இடையிடையே, முற்றிற்று, சிவகடாட்சம், துணையுண்டாக வும், சுப்பிரமணியர் துணையுண்டாகவும் என்ற குறிப்பு களும், காப்புப் பாடல் ஒன்றும் சில நூல்களிலிருந்து எடுத்தெழுதப் பட்டதே இச்சுவடி என்பதைக் காட்டுகின்றன. முதலில் இரண்டும் இறுதியில் மூன்றும் வெற்றேடுகள் உள்ளன.

## 877. சோதிடத் திரட்டு

**அ. 267:487; ஆ.** 22 ஏடுகள்; **இ.** 21 x 4 செ.மீ.; **ஈ.** 9-10 வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

சூரியன் நின்ற ராசிக்கு ஆறு ராசிக்குள்ளே சந்திரன் இருந்தால் பூர்வபட்சம்; ஆறு ராசிக்கு மேல் இருந்தால் அமரபட்சம்.

சனி விசேசம்

அட்ட மத்தில் சங்கரனும் ஐயமேதான்
அயனுமோர் சிரசிழந்தான் ஐந்தி னாலே
தெஷ்டணனும் முடியிழந்தான் இரண்டி னாலே
சீதையுமே சிறையிருந்தாள் சென்மத் தாலே
சுக்கிரனுங் கண்ணிழந்தான் இரண்டி னாலே
சோமனுமே உடல் இழந்தான் ஐந்தி னாலே

முடிவு

கட்டை வனமயிலை வேலவன்
மதித்திடில் செருவாக்காலை மாதவரருள் செய்தாரே
ஊணி லுயர்ந்தோன் வேலவ னுயர்நடைக்
குறியோன் வேலமடா புதுமைதானே
கருமமென்ன அரசுக்கு உளனென்று காரியமுங்
கைகூடும் பிசகாதப்பா பவளமாய்

குறிப்புரை

**பாடலும் உரைநடையும் கலந்துள்ளன.** முதலிலுள்ள 2 வெற்றேடுகளை அடுத்துள்ள 2 ஏடுகளில் பட்சம், சனி விசேசம் பற்றிய குறிப்புகளும், அடுத்துள்ள 5 ஏடுகளில் கோள்கள் இராசியில் நின்ற பலன், ஒன்றுடன் ஒன்று சேர்ந்த பலன், பார்வை முதலான பாடல்கள் உரையுடனும் தரப்பட்டுள்ளன. வேறு ஒரு சோதிட நூலிலிருந்து இப்பாடல்கள் எடுத்தெழுதப்பட்டுள்ளதால் பாடல் எண்கள் ஒவ்வொன்றும் தொடர்ச்சியின்றிக் காணப்படுகின்றன.

அடுத்துள்ள 5 வெற்றேடுகளில் ஒன்றில் இராசிக்கட்டமும், மற்றொன்றில் 'நட்சத்திரப் பலன் அறிய' என்ற தலைப்பும் உள்ளன. அடுத்து 4 ஏடுகளில், 1-19 பாடல்களில் முற்சுட்டிய செய்தியை ஒத்த செய்திகளும், அடுத்து 2 ஏடுகளில்'சூரியன் முதற்தானம் 8–க்கும், கிரகம் 9–க்கும் பரல் நிறுத்த லக்கம்' என்ற தலைப்பிலான செய்திகளும், அடுத்து 3 ஏடுகளில் அட்டவர்கம், ரவிவர்கம், மதிவர்கம் முதலான செய்திகளும் இடம்பெறுகின்றன. அடுத்துள்ள 4 வெற்றேடுகளுக்குப்பின், களத்திர பாவம், பூர்வபக்க நிறப்பட்சி, அமரபக்க நிறப் பட்சி, திசை பட்சி பூர்வ பக்கம், அமரபக்கம், பூர்வசதிபட்சி, அமரசதி பட்சி, பூதபட்சி, அமரபக்கம் படுபட்சி, அமர பக்கம் வெல்லு பட்சி முதலான தலைப்புகளுக்குரிய செய்திகள் பாடல் வடிவில் உள்ளன. இறுதியில் இரண்டு வெற்றேடுகள் உள்ளன.

## 878. சோதிடப் பலன்கள்

**அ.** **40:64;** **ஆ.** 5-*109* (*39*) ஏடுகள்; **இ.** 28 x 2.5 செ.மீ.; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** நல்லநிலை; இறுதிப் பகுதியிலுள்ள சில ஏடுகள் உடைந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

**தொடக்கம்**

**கோசாரப்பலன்**

ஐந்தில் - சுகம்
ஆறில் - அலைச்சல், கிலேசம், சிலவு
ஏழில் - ராச சந்தோஷம்
எட்டில் - தனநாசம்
ஒன்பதில் - தனவிருத்தி
பத்தில் - பதியழிவு, பிரீதிக்கேடு (ஏடு.5).

**முடிவு**

ஐந்தாமிடம் குருவாகி லனேக புத்திரமித்திர பவுத்திர தனம் தான்யம், பெத்த பாட்டனுக்குத் தோஷம், வேதசாத்திர அற்பாசம், அறிவு விவேகம், பெரியவர்களிடத்திலுறவு, ராசபிரபு சினேகம், உயர்ந்த சரீரம், தீர்க்காயுசு, அனேக சம்

பத்து, சம்புத்திரான் சுகம், நல்ல புத்தி. ஐந்தில் சுக்கிரனாகில் மந்திரி, சேனாபதி, வெகுதனம், நல்ல புத்தி, புத்திராளில்.

குறிப்புரை

உரைநடை. இந்நூல் பேச்சு நடையில் அமைந்து, கோச்சாரப் பலன், நவக்கிரக திசை, நவக்கிரகப் பலன், நட்சத்திரப் பலன், கிரகக்கூட்டப் பலன், இலக்கன கிரகப்பலன், இராசி பன்னிரெண்டுக்கு, இரேவதி நாளின் பலன், வாக்கு வசனம், தனம், மூன்றாமிடம் சகோதரம், சவுக்கியம், நவக்கிரக ஆட்சி வீடு, நவக்கிரகங்களின் உச்ச நீச்சம், நவக்கிரக தசை முதலான தலைப்புகளில் பலனைக் கூறுகிறது.

## 879. சோதிடம்

**அ.** 490:748; **ஆ.** 1-22 ஏடுகள்; **இ.** 19 x 3 செ.மீ.; **ஈ.** 5-7 வரிகள்; **உ.** நல்ல நிலை; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

முற்குறிப்பு

சோபகிருது வருஷம் அய்ப்பசி மாதம் 5ந் தேதி புதன்கிழமை தோடரிப்பட்டியிலிருக்கும் சி. கந்தசாமி பண்டாரத்தின் கைச்சுவடி எடுத்தவர்கள் குடுக்க.

தொடக்கம்

வாலை சுப்பிரமணியர் துணை
கலைவாணி துணை செய்யவும்
சருசுவதி துணை செய்யவும்
பரமசிவன் துணை செய்யவும்
உண்டாக வேணும் குருகிடாக்ஷசம்

காலசக்கர திசைக்கு ரவி தம் வல ஒட்டுக்கு மேட முதல் இட ஒட்டுக்கு விருஷ்சக முதல் எண்ணிப் போடுகிற விதம்.

முடிவு

மேதகு கதிரோன் நின்றநாளும் மற்ற தின்மேல் மூன்றும்
கோதறு பின்னில் மூன்றும் குருட்டு நாளென்று கொள்க

ஓதிய வதற்குப் பின்முன் நாளது வேறுகண் காணும்
ஏதமி நின்றநாள் இருகண் உண்டது கூறக் கேளே

குறிப்புரை

**பாடலும் உரைநடையும் கலந்துள்ளன.** சூரியன் அஷ்டவர்க ஆதி விபரம் 48, மதி அஷ்டவர்க ஆதி விபரம் 49, செவ்வாய் அஷ்டவர்க ஆதிவிபரம் 39, புதன் அஷ்டவர்க ஆதிவிபரம் 54, குரு அஷ்டவர்க ஆதிவிபரம் 59, சுக்கிரன் அஷ்டவர்க ஆதி விபரம் 52, சனி அஷ்டவர்க ஆதி விபரம் 39, திரிகோண சோதனை விபரம், ஏகாதிபத்தியர் சோதனை விபரம், இராசிகுணம், கிரககுணவிபரம், மண்டலம் பார்க்கும் விதம், நட்சத்திரமண்டலம் அறிய, சமயபலன் பார்க்கும் விதம், பஞ்சகம் பார்க்கும் விதம், துருவம், யோனிநிலை அறியும் படிக்கு, அவச்சாயல் பார்க்கும் விதம், மாரகம் அறிய, மனைசாதகம், மனைகங்கு, மனை அங்குலம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 880. சோதிடம்

**அ. 385:628; ஆ.** *8* ஏடுகள்; *7, 9, 11, 14, 15, 17, 19, 20* ஆகிய ஏடுகளே உள்ளன; **இ.** 12.5 x 2.5 செ.மீ; **ஈ.** 4-5 வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

துலாம் - சி, சு, சியில் பின் அரை, த, தா, தீ, தூ சோதியில் ஒன்று தீ, து, தெ, தொ விசாகத்தில் முக்கால் ஆக இரண்டாவது துலா சுக்கிரன் பத்தொன்பது. துலா சுக்கிரன் புதன் வணிகன். யெ, யொ, பா, பி மூலம் ஒன்று, பூ, நா, பா, டா, பூராடம் ஒன்று, ப, போ, சா, சி உத்திராடம் கால், ஆகத் தனுசு குருவியாழம் 50-க்குத் தனுசு குரு,செவ்வாய், ஞாயிறு அரசன்.

முடிவு

துலாம் - வெள்ளை நிறம், இருகால் சிவன், களிப்பு
விருச்சிகம் - பச்சைநிறம், பலகால் சிவன், கெந்தி
தனுசு - சிகப்பு நிறம், பட்டினி

மகரம் - கறுப்பு நிறம், இருகால் சிவன், அனுபோகம்
கும்பம் - பச்சை நிறம், இருகால் சிவன், உறக்கம்
மீனம் - பச்சைநிறம், இருகால் சிவன், ஊன்.

குறிப்புரை

**உரைநடை**. தனுசு, கும்பம் என்ற உட்தலைப்புகளும், இராசிகளுக்குரிய நிறங்கள், தெய்வங்கள், பறவைகள், எழுத்துகள், பலன்கள் முதலான செய்திகளும் இறுதியில் ஒரு சட்ட ஏடும் உள்ளன.

## 881. சோதிடம்

**அ. 429:675; ஆ.** *196* ஏடுகள்; **இ.** 33 x 2 செ.மீ.; **ஈ.** 5-*6* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; சில ஏடுகள் சிதைந்தும், சிதையும் நிலையிலும் உள்ளன; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

பல்லி காதல்

ஞாயிறு - கிழக்கில் பயம்; தென்கிழக்கு – தீமை; தெற்கு – சுகம்; தென்மேற்கு – பந்து...; மேற்கு – சண்டை; வடமேற்கு – வஸ்திரலாபம்; வடக்கு – தனலாபம்; வடகிழக்கு....; ஆகாயத்தில் ஐயம்; பூமியில் சொன்னால் நினைத்த காரியமாகும். திங்கள் – கிழக்கில் தனலாபம்; தென்கிழக்கு – கலகம்; தெற்கு – பகை; தென்மேற்கு – விரோதம்; மேற்கு – இராஜசபா பிரவேசம்; வடமேற்கு – அமங்கலம்; வடக்கு – வஸ்திரலாபம்; வடகிழக்கு – கலியாண வார்த்தை; ஆகாயத்தில் கேடு சமாச்சாரம்.

முடிவு

தேங்காய் உடைகுறை

அடித்ததோர் தேங்காய் தானும் அகலவே சிதறி விட்டால்
முடித்ததோர் மனைவிக் காகாது முகிளுட னோடு மாகில்
எடுத்ததோர் சிறுவன் கையி லிடரியே விழுமே யாகில்
வடித்தவாலை யங்களி லாவர் விபாள மனையா மென்றே

குறிப்புரை

**பாடலும் உரைநடையும் கலந்துள்ளன.** மூலத்திரிகோணம் கிரகங்களுக்கறியவும், மனைநூல், சீமந்தம், பிரதிஷ்டை பண்ண, விதை விதைக்க வாரம், திதி, நாள், நவாங்கிச விபரம், மண்டலம், சுக்கிரன் அஷ்டகவர்க்கம், கிராண தோசம், பிள்ளை பிதா தோசம், பலவகை யோகப் பலன், தசாபுத்திப் பலன், காலச்சக்கரம், கிரகங்களுக்குச் சாரபலன் விபரம், விபாகச்சக்கரம் நட்சத்திரத்திற்கு, அனுமந்தரமூலம் பயணத்திற்கு ஆகாத சூல நாட்கள், பரிவேடக்குறி, கிணறு வெட்ட, கரை கட்ட, பூமி வசியம், கிரகங்களுக்குக் கண்ட நட்சத்திரம் பார்க்கும் விபரம், சர்வாஷ்டக பிந்து பலன், வாரதியாச்சியம், அற்ற நாள் பலன், கிரகதோஷங்கள் பலவகை, இராஜ யோகம், பலவகை யோகப் பலன், **வையாபுரிப் பண்டாரம் எழுதிய குறிப்பு**, மாரக இயல்பு, வெற்றி அறியும் படி, கிரகங்களுக்கு ஆயுசு கணிக்கும் விபரம், கால ஓரை முதலான தலைப்புகளில் சோதிடச் செய்திகளும், பல்லி சொல்லுக்குப் பலன், தேங்காய் சகுனம், தேங்காய் உடைகுறை முதலான தலைப்புகளில் ஆரூடம் தொடர்பான செய்திகளும் கூறப்பெறுகின்றன.

## 882. தசாபுத்திப் பலன்கள்

**அ.** **184:384; ஆ.** *41* ஏடுகள்; **இ.** 23.5 x 3 செ.மீ.; **ஈ.** 4-5 வரிகள்; **உ.** மிக நன்று; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

சூரிய திசையில் சூரியன் புத்தி மாதம் மூன்று,
நாள் பதினெட்டு

அருக்கனில் அருக்கன் கண்ணோய் அந்தணர் கலக பீடை
கருத்திடும் மூத்தார் சாவும் கனசுரம் சிரசில் நோவாம்
வருத்தமாம் சித்திரை தன்னில் வலக்காலில் ஊனம்
உண்டாம்
நொடிக்குமுன் சுரோணி தத்தில் பெருகநீ ரிழிவு தானே
(1)

முடிவு

சுக்கிரன் திசையில் கேதுபுத்தி வருஷம் ஒன்று,
மாதம் ரெண்டு

இஷ்டமாம் வெள்ளி தன்னில் எழுந்துதான் கேது வந்தால்
துஷ்டமாம் மிருகத் தாலும் துயரமும் பிணியு முண்டாம்
அஷ்டமாம் மனையாள் தன்னை அனுபோக மிகவே
உண்டாம்
துஷ்டமாம் விஷத்தால் வீட்டில் தீண்டியே மீளுந் தானே
(81)

குறிப்புரை

**1-81 பாடல்கள்.** மனித வாழ்வின் இயக்கத்தை, பலன்களை அறிய உதவும் தசா புத்தியானது ஒருவருடைய வாழ்க் கையில் நன்மை தீமைகள் எப்பொழுது நடைபெறும் என்பதைக் கால அறுதியிட்டுத் தெரிந்து கொள்ள உதவுவதாகும். ஒவ்வொரு கோளுக்குரிய ஆண்டுகளே திசை அல்லது தசா என்றழைக்கப்படுகின்றன. ஒரு கோளின் தசாவுக்குள் (தசா ஆண்டுக் குள்) அக்கோளும் மற்ற கோள்களும் வரிசையாக வந்து பலன் தருவது 'புத்தி' எனப்படுகிறது. காட்டு: சூரியனுக் குரிய தசா ஆண்டு ஆறு. இந்த ஆறு ஆண்டுகளில் சூரியனும், அடுத்துள்ள எட்டுக் கோள்களும் அவரவர்களுக்குரிய கால அளவில் தத்தமக்குரிய பலன்களைச் (நன்மை, தீமை) செய்து முடிக்கும். அவ்வகையில் இச்சுவடியில் சூரியன், சந்திரன், செவ்வாய், இராகு, சனி, புதன், கேது, சுக்கிரன் ஆகிய எட்டுக் கோள்களின் தசாவுக்குரிய பலன்கள் கூறப்படு கின்றன. ஒரு கோளின் தசாப் பலன்களைக் கூறுவதற்கு ஒன்பது கோள்களின் புத்திகளைக் கூற வேண்டி யிருப்பதால், ஒவ்வொரு தசாவுக்கும் ஒன்பது பாடல்கள் கூறப்பெறுகின்றன. அவ்வகையில் எட்டு தசாக்களுக்கும் 81 பாடல்கள் கூறப்பெறுகின்றன. குரு தசாவுக்குரிய 9 பாடல்கள் இதில் விடுபட்டிருக்கின்றன. வெற்றேடுகள் முதலில் ஒன்றும் இறுதியில் ஐந்தும் உள்ளன.

## 883. தசாபுத்திப் பலன்கள்

**அ.** **324:551;** **ஆ.** *1-38 (14)* ஏடுகள்; **இ.** 22.5 x 3 செ.மீ.; **ஈ.** *4-5* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு கடினம், **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

முடிவு

ராஜா திசையில் சனிபுத்தி ஆண்டு
இரண்டு, மாதம் 6, நாள் 12.

பொருந்திய பொன்னில் காரி பொருளுடன் அனேக முண்டு
மருந்திய குதிரை யானை நேர்ந்திடு கன்று காலி
வருந்திய காலுங் கையும் வாதமும் தலைனோ யுண்டாம்
இருந்திடும் போக மாட்டா யில்லாளும் னோவு தானே (38)

குறிப்புரை

***1-38*** **(மொத்தம் 28) பாடல்கள்**. *184 : 384* என்ற எண்ணிலுள்ள நூல் போன்றதே. தொடக்கப்பாடல் இரண்டிலும் ஒன்றே. நன்மையா, தீமையா இரண்டும் கலந்ததா, எந்நிகழ்ச்சி எப்பொழுது நடக்கும், ஆயுள், கல்வி, வேலை என்ற முறையில் தசாபுத்திப் பலன்களைப் பற்றிக் கூறுமிதில் சூரியன், சந்திரன், செவ்வாய், இராகு ஆகிய நான்கு கோள்களின் தசாவுக்குரிய பலன்கள் கூறப்பட்டுள்ளன. ஒரு கோளின் தசாபுத்திக்கு ஒன்பது பாடல்கள் என்ற வகையில் நான்கு தசாவிற்கு *36* பாடல்கள் இடம் பெற்றிருக்க வேண்டும். ஆயின் இடையே ஏடுகள் இன்மையால் *26* பாடல்களே உள்ளன. ஐந்தாவது தசாவாக இதில் கூறப்படும் குருதசா வுக்கு, குரு புத்திக்குரிய (பாடல் *37*), சனிபுத்திக்குரிய (பாடல் *38*) இரண்டு பாடல்களே இருக்கின்றன. இங்ஙனம் *38* பாடல்களில் **28 பாடல்களே** இச்சுவடியில் உள்ளன. பெரும்பாலான சுவடிகளில் ஓர் ஏட்டிற்கு (இரு பக்கங்கள்) ஓர் எண் என்ற முறையிலேயே ஏடுகள் எண்களைப் பெறுகின்றன. ஆயின் இச்சுவடியில் ஏட்டின் இரு பக்கங்களுக்கும் எண் தரப்பட்டுள்ளது. பக்க எண்கள் 12–இலிருந்து 20 வரை கொண்ட ஐந்து ஏடுகள் இல்லை.

## 884. தசாபுத்திப் பலன்கள்

**அ.** 366:606; **ஆ.** *12-20(5)* ஏடுகள்; **இ.** 22.5 x 3 செ.மீ; **ஈ.** *4-5* வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சந்திரனில் செவ்வாய் புத்தி மாதம் ஒன்று

மதிதனில் செவ்வாய் ஆறில் மாதர்மார் மனம்போ லாகும்
பதியுடன் பொருளும் சோரம் பலவிதச் சுரமுந் தோணும்
விழியினில் வியாதி யாலே வேண்டுமே பித்த நோவு
அறையினில் சிலந்தி வந்து சித்திரைக் குள்ளே
தீரும். (11)

செவ்வாய் திசையில் இராகுபுத்தி
வருடம் ஒன்று, நாள் 18

செவ்வாயில் ராகு வீங்கும் நடையில்லை கும்ப நோவாம்
ஒவ்வாத விசத்தி னாலும் ஒருபுறம் சிரங்கு காலில்
இவ்வாறு மேகம் காணும் இருந்திடும் தனமும் நாசம்
கவ்வாது முதுபல சூதை கண்டுநீ அறிந்து கொள்ளே

குறிப்புரை

**செய்யுள் அமைப்பு**. சந்திரனில் இராகுபுத்தி, சந்திரனில் இராசா புத்தி, சந்திரனில் சனிபுத்தி, சந்திரனில் புதன்புத்தி, சந்திரனில் கேதுபுத்தி, சந்திரனில் சுக்கிரன்புத்தி, சந்திரனில் சூரியன்புத்தி செவ்வாயில் செவ்வாய் புத்தி, செவ்வாய் தசையில் ராகுபுத்தி ஆகிய தலைப்புகள் உள்ளன.

## 885. நட்சத்திரக் குறிப்பு

**அ.** 249:465; **ஆ.** *1-14* ஏடுகள்; **இ.** 25 x 3 செ.மீ.; **ஈ.** 4-5 வரிகள்; **உ.** நன்று; இரண்டு ஏடுகள் சற்று முறிந்துள்ளன, **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதில் இடம் பெற்றுள்ள செய்திகள் அச்சு நூல்கள் பலவற்றில் காணப்படுகின்றன.

தொடக்கம்

அசுவனியில் முதலாம் பாதம் சுரம் கண்டால் 17½ நாழி வரைக்கும் ஒன்பது நாள் வரைக்கும் சுரம் தீரும். இரண்டாம் பாதம் 34½ நாழிகைக்கு மேல் சுரம் கண்டால் உடனே கொல்லும். இல்லாவிட்டால் பத்தாநாள் மரணம், மூன்றாம் பாதம் 45 நாழிக்கு மேல் சுரம் வந்தால் 15 நாளையில் தீரும். நான்காம் பாதம் 45 நாழிக்கு மேல் சுரம் கண்டால் உடனே சாவான்.

முடிவு

ரேவதி

முதல் கால் 15 நாழிக்குள்ளே சுரம் கண்டால் மரணமாவான். இரண்டாம் பாதம் 15 நாழிக்கு மேல் 30 நாழிக்குள்ளே சுரம் கண்டால் 11 நாளில் தீரும். மூனாம் பாதம் 30 நாழிக்கு மேல் 45 நாழிக்குள்ளே சுரங் கண்டால் 18 நாளில் தீரும். நான்காம் பாதம் 45 நாழிகைக்கு மேல் 65 நாழிக்குள்ளே சுரங் கண்டால் 26 நாளில் தீரும்.

குறிப்புரை

அசுவனி முதல் இரேவதி முடிய உள்ள 27 நட்சத்திரங்கள் நோய் ஏற்படுத்தும் காலத்தையும், தீரும் காலத்தையும், நோய் தீராமல் மரணத்தை ஏற்படுத்தும் காலத்தையும் நூல் கூறுகின்றது. ஒவ்வொரு நட்சத்திரத்திலுள்ள நான்கு பாதங்களில் சுரம் ஏற்படும் காலம் எதுவோ அதற்கு ஏற்ப நோய் தீருமாயின் எத்தனை நாட்களில் தீரும் அல்லது மரணமாயின் அது எப்பொழுது நேரும் என்ற செய்திகள் கூறப்படுகின்றன. புலிப்பாணி வைத்தியம் 500 என்ற நூலில் இந்நூற் செய்தி இடம்பெற்றுள்ளது. ஆயின் ஒரு நட்சத்திரத்தின் ஒரு பாதந் தொடங்கி எத்தனை நாழிகையில் சுரம் வருகிறது என்ற நேரக்கணக்கு இதிலில்லை. புலிப்பாணி நூலிலுள்ள இச்செய்தி பல மருத்துவ நூல்களில் மேற் கோளாகக் காட்டப்பட்டுள்ளது. ஆயின் சுரம் வந்தால் எவ்வளவு நாளில் தீரும் என்ற நாட்கணக்கில் சிலவற்றில் வேறுபாடுகள் இருக்கின்றன. வார நாட்களுடன் எந்த எந்த நட்சத்திரம் இணைதல் கூடாது என்பதுவும் கூறப்படுகின்றது.

## 886. நட்சத்திரமாலை

**அ. 193:393; ஆ.** *1-91* ஏடுகள்; **இ.** 28.5 x 3 செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானது.

தொடக்கம்

செஞ்சிலாதிபதி துணை

சு-சே-சோ-லா-அசுவினி - மேஷராசியின் பலன்

செய்வினை திருந்தச் செய்யும் சேயிழை யார்க்கு நல்லன்
மையுரை மணியும் பொன்னும் மகிழ்ச்சியா யணைய வல்லன்
பொய்யுரை யொன்றுஞ் சொல்லான் புகழ்பெற வாழவல்லன்
அய்யமிட் டுண்ண வல்லன் அசுபதி நாளி னானே

முடிவு

செவ்வாய்

மூன்று ஆறு பதினொன்றில் இருந்தால் சிநேகித சகோதர அனுகூலம். இஷ்டகாரியப் பலிதம். திரேக சௌக்கியம், குடும்ப சுபலாப வரவு. ஏழு, எட்டு, பன்னிரண்டு சென் மத்திலிருந்தால் திரேக காங்கை, கோபக் குரோதம், குடும்ப நிஷ்டை தொடுவழக்கு மானபங்கமான வார்த்தை, கட்டி, காங்கை, காயம், கல்லடி, சிநேகித சகோதரக் கலகம் இவ்விதமாக நடக்கும்.

குறிப்புரை: கோச்சாரப்பாட்டு - நஷ்ஷேத்திரமாலை

**பாடலும் உரைநடையும் கலந்து** அமைந்த இதில் பாடல்களுக்கு எண்கள் தரப்படவில்லை. **155 பாடல்கள்** இடம் பெற்றுள்ளன. மேசம் முதல் மீனம் வரையிலான 12 இராசிகளுக்கும் ஒவ்வொரு பாடல் மூலம் பொதுப்பலனும், ஒவ்வொரு நட்சத்திரத்திற்கும் அந்த நட்சத்திரத்தில் பிறந்தவரின் பெயருக்கென 4 முதல் எழுத்து உச்சரிப்பு களும், 27 நட்சத்திரங்களுக்கும் முறையே ஒவ்வொரு பாடல் பொதுப் பண்புகளை உணர்த்தும் நோக்கிலும், ஒவ்வொரு நட்சத்திரத்திற்குமுரிய தெய்வம், பூதம், கோத்திரம், சாதி,

யோனி, பட்சி, விருட்சம், கணம், நட்சத்திரத்தின் உருவ அமைப்பு, இராசி, வாரம், சூனியம் ஆகியனவும், குறிப்பிட்ட நட்சத்திரத்தன்று ஒருவருக்கு நோய்கள், துன்பங்கள் ஏற்பட்டால் எப்பொழுது நீங்கும், என்ன பரிகாரம் செய்ய வேண்டும் என்றும், ஒரு நட்சத்திரத்தின் நான்கு கால்களுக்கும் நான்கு பாடல்கள் மூலம் பொதுப் பண்புகளும், நான்கு கால்களுக்கும் நான்கு காலச் சக்கரங்கள் கொடுக்கப்பட்டு அதற்கு வயதும் குறிப்பிடப்பட்டுள்ளன. இறுதி எட்டுப் பாடல்களில் சூரியன், குரு, சனி ஆகிய கோள்கள் நின்ற வீட்டிற்குரிய பலன்களும் அடுத்து, உரைநடையில் சந்திரன், செவ்வாய்க்குரிய பலன்களும் கூறப்பட்டுள்ளன. இறுதியில் ஒவ்வொரு இராசியின் அதிபதிகள், கோள்கள், உச்சம் அடையும் இராசிகள், நீச்சம் அடையும் இராசிகள் ஆகியன இராசிச் சக்கரம் வரைந்து காட்டப்பட்டுள்ளன. இதே பெயரில் அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் ஏழு சுவடிகள் உள்ளன. இச்சுவடி *1989* இல் சுவடிப் பதிப்பாய்வேடாக நிறுவனத்திற்கு அளிக்கப் பெற்றது. *1990* இல் நர்மதா பதிப்பகத்தார் ‘‘ஜோதிட நட்சத்திர மாலை’ என்ற பெயரில் இவ்வாய்வேட்டினை நூலாக வெளியிட்டுள்ளனர். முதலிலும் இறுதியிலும் ஒவ்வொரு சட்ட ஏடுகள் உள்ளன.

## 887. பிரவாசச்சுவடி

**அ.** **146: 322;** **ஆ.** *1-26* ஏடுகள்; **இ.** 28.5 x 2 செ.மீ.; **ஈ.** 5-7 வரிகள்; **உ.** நன்று **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

### முற்குறிப்பு

வத்தல குண்டு சோ.க.வா. இராமசாமிபிள்ளை பிரவாசச்சுவடி.

### தொடக்கம்

உகமது உதித்த போது ஓங்கிய வருஷ மாசம்
இகபர முள்ள மட்டும் இயம்புநட் சத்தி ரங்கள்
அகமது பக்கங் கூற அறுமுகன் றனக்கு மூத்தோன்
செகமெலாந் துதிக்குந் தொந்திச் சேவடி காப்புத் தானே

பிரபவா, விபவா, சுக்கிலா, பிரமோதூதா, ஆங்கிரசா, ஸ்ரீமுகா, பவா, யுவா, தாது.... குரோதனா, அட்சயா ஆக வருஷம் 60.

முடிவு

அருக்கன் 60, அருந்திங்கள் 90,
திருக்கன் செவ்வாய் 40, செய்ய புதன் 50
உருக்கும் வியாழன் 70, ஒளிசேர் வெள்ளி 80,
கறுத்த சனி 30 கணக்குப்படிதான் சொன்னாரே ஆக 420

குறிப்புரை

**பாட்டும் உரைநடையும் கலந்துள்ளன.** தமிழ் ஆண்டுகளின் பெயர்களும் மாதங்களின் பெயர்களும் தொடக்கத்தில் எழுதப் பெற்றுள்ளன. தொடர்ந்து இலக் னங்கள், இராசிகள், இராசிக்குரிய அதிபதிகள், பட்சிகள் இராசி உருச்சொல், இராசி நடை, அமரபட்சம், தசாபுத்திகள், நட்சத்திர வடிவு, திக்குப் பாலகர் வாகனம், திக்குப் பாலகர் திசை, தசாபுத்திகளின் அளவு, கிரக உருச்சொல், வாரசூனியம், இராசிவகை, இராசி வடிவு, கிரகப்பகை, நட்பு வீடு முதலான அடிப்படைச் செய்திகள் எளிய முறையில் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

## 888. பிரவாசச்சுவடி

**அ. 497:758; ஆ.** *1-20 ஏடுகள்;* **இ.** 28 x 3 *செ.மீ;* **ஈ.** *3-4 வரிகள்;* **உ** *நல்ல நிலை;* **ஊ.** *சுமார்;* **எ.** *முழுமை;* **ஏ.** *அச்சாகவில்லை.*

தொடக்கம்

அரியிரு பத்தா றேகால் அம்புலி மூன்றே முக்கால்
எரிவன்ன மிருபத் தோடு ரெண்டரை புதன்மூ வைந்து
குருபதி னெட்டே முக்கால் குளிர்வெள்ளி பதினொன் றேகால்
சரிய யேஷரை ராகு காலமென் றறிந்து கொள்ளே

முடிவு

மேஷமுதல் லக்கினம் விரும்பிய துருவம்
மிக்கமலிக் கிரகம் இருவரையும் எண்ணி

தாழ்விலா இருதுகையு மதாக்கி குழிமாரி
    தந்திடும் கிரகமண்டி லதாக்கி குழிமாரி
வீழ்கதிர் வாராமல் பிர்மாவுக் கீந்து
    மிக்கசேடன் மண்டலம் விரும்பிய துருவம்
ஆளியு லகங்க ளறியவே வீமர்
    அப்படி குரைத்ததுவே சேர்ப்படியே ஆகும்

குறிப்புரை

**பாடலும் உரைநடையும் கலந்துள்ளன.** 'வெள்ளைக் கலையுடுத்தி வெள்ளைப் பணி பூண்டு' என்று தொடங்கும் பாடல் காப்புப் பாடலாக இடம் பெற்றுள்ளது. மாதங்கள், திதிகள், யுகங்கள், யோகங்கள், வேளை அறிவது, வாரம், ஆட்சி, உச்சம், பகை, நீச்சம், குறிப்பு, கிரகங்களின் பார்வை, காலற்ற, சிரசற்ற, உடலற்ற நாட்கள் முதலான செய்திகள் உள்ளன.

## 889. ருதுநூல்

**அ.** 125:238; **ஆ.** 1-27 ஏடுகள்; **இ.** 22.5 x 3 செ.மீ; **ஈ.** 7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** மிகக் கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
திண்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
சென்மமும் மரணமும் சிதைந்து தேயுமே

மாசப்பலன் அறிவு

முந்தினதோர் சித்திரையில் திரண்டா ளானால்
    மோசமில்லா வறுமையினால் மூடிக் கொள்ளும்
பிந்தியதோர் வைகாசியில் திரண்டா ளானால்
    பிரியமுடன் கணவனையும் பேணிக் கொள்வாள்

அந்திசந்தி சவுக்கியமாய் இருப்பாள் மெத்த
    அவளிடத்தில் நிதிநிறைந்து அணுகிச் சேரும்
கொந்தளகம் குழலாளே ஆனி யானால்
    கூறக்கே ளம்போடுமிச் சம்கொடுப்பாள் பாரே (1)

முடிவு

யாத்திரை விலக்கு நட்சத்திரம்

ஆதிரை பரணி ஆயில்யம் முப்பூரம் கேட்டை
தீதுரும் விசாகம் சோதி சித்திரை மகம் ஈராறும்
வழியிடை பட்டார் மீளார் பாயிடை பட்டார் சாவார்
பாம்பின் வாய்த்தவளை போலாம்.

குறிப்புரை

**பாடலும் உரைநடையும் கலந்துள்ளன.** மகளிரின் ருதுகால மாதப் பலன் என்று தொடங்கி, முதல் நான்கு பாடல்களில் 12 மாதங்களிலும் பூப்பெய்தும் காலத் திற்குரிய பலன்களைச் சொல்லுகிறது. தொடர்ந்து வாரப் பலன், நட்சத்திரப் பலன், இலக்னப் பலன், கிரகப்பலன் ஆகியவை முப்பதாம் பாடல்வரை சொல்லப்படுகின்றன. சாமத்துக்குச் சொல்பலன், கிழமைக்குச் சொல்பலன், கரிநாள் பலன் ஆகியவை சுமார் 25 பாடல்களில் தனித்தனியே கூறப்படுகின்றன. அடுத்து இலக்னம் அறிதல், பிறை பார்க்கச் சாத்திரம், நாழிகை அறிதல், நட்சத்திரம் பார்த்து நாழி அறிதல் ஆகியவை உரைநடை யிலும் பாடல்களிலுமாகக் கலந்து கூறப்பட்டுள்ளன. பதினெட்டாவது ஏட்டிலே **கலிவெண்பா** என்ற தலைப்பில் ஒரு தொகுப்புப் பாடல் காணப்படுகிறது. தேங்காய் உடைத்துப் பலன் பார்த்தல், பல்லி சாத்திரம், அமிர்த, சித்த, மரண யோகங்கள் அறிதல் ஆகிய செய்திகள் தொடர்ந்து கூறப்பெற்றுள்ளன. இறுதி ஏட்டில் 'யாத்திரை விலக்குதற்குரிய நட்சத்திரங்கள்' கூறப்படுகின்றன.

## 890. ருதுநூல்

**அ. 526:825; ஆ.** 22-28 ஏடுகள்; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** 7-9 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம். **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

சித்திரை மாதம் புருஷனுக்கு ஆகாது; வையாசி மாதம் சுகமா யிருப்பாள்; ஆனி மாதம் யோகியாயிருப்பாள்; ஆடிமாதம் பல வதையிச்சிப்பாள்; ஆவணி மாதம் புத்திருண்டாம்;

புரட்டாசி மாதம் புத்திசாலியாயிருப்பாள்; அற்பிசி மாதம் விதவை யாவாள்; கார்த்திகை மாதம் பலரையும் தூஷிணிப்பாள்; மார்கழி மாதம் நல்ல பிள்ளைகளைப் பெறுவாள்; தை மாதம் புண்ணியவதியாயிருப்பாள்; மாசி மாதம் தர்ம முண்டாயிருப் பாள்; பங்குனி மாதம் அதிகப் பிள்ளைகளைப் பெறுவாள் என்றவாறு.

## முடிவு

பிடவையிலே தீட்டுப் பட்டாலுங் கொம்பு கொண்டாலும், திட்டமானாலும், எலிகடிச்சாலும் அந்த லச்சணம் அறியும் படி: வட்டமாயிருந்துதாகில் பொருள் கெடும்; சதிரமாயிருந் துதாகில் சத்துரு நாசமாம்; பிறை போலே யிருந்துதாகில் ஆயுசு குன்றும்; தெண்டு போலேயிருந்துதாகில் திட்டென மரணமாகும்; வண்டுபோலே யிருந்துதாகில் திரவியஞ் சேரும்; செண்டு போலே யிருந்தால் புத்திரருண்டா மென்றவாறு.

## குறிப்புரை: பெண் ருதுவானால் பார்க்கிறது

உரைநடை. பெண் பூப்படைந்த போது ஏற்படக்கூடிய பலன்களைக் கூறும் 'ருதுநூல்' வகையைச் சார்ந்தது. சித்திரை முதல் பங்குனி வரையுள்ள 12 மாதங்களிலும், ஞாயிறு முதல் சனி வரையுள்ள ஏழு நாட்களிலும், பிரதமை முதல் அமாவாசை, பௌர்ணமி வரையுள்ள 30 திதிகளிலும், அசுவினி முதல் இரேவதி வரையுள்ள 27 நட்சத்திரங்களிலும், மேடம் முதல் மீனம் முடிய உள்ள 12 இராசிகளிலும், விஷ்கம்பம் முதல் வைதிருதி முடியவுள்ள 27 யோகங் களிலும் பெண் பூப்படைந்த காலத்து ஏற்படக் கூடிய பலன்கள் அறியப்படுகின்றன. மேலும் பெண் பூப்படைந்த நேரத்திற்குப் போடப்படும் சாதகக் கட்டத்தின் ஏழாமிடத்தில் சூரியன் முதல் கேது வரையுள்ள ஒன்பது கோள்களைக் கொண்டும், 'பிடவை வயணம்' என்ற தலைப்பில் பெண் பூப்படைந்ததைக் கேட்க வந்தவர் கேட்கும் திசையும், அதற்கேற்ற பலனும், பூப்படைந்த பெண்ணைக் கன்னி, சுமங்கலி, விதவை முதலியோருள் முதலில் பார்த்தவரைக் கொண்டு பலனும், பூப்படைந்த போது ஆடையில் பட்ட இரத்தக் கறையின் வடிவத்தைக் கொண்டு பலனும் கூறப்படுகின்றன.

# 11. ஞானம்

## 891. அகத்தியர் கருக்கிடை சூத்திரம்

**அ.** 204:410; **ஆ.** *1-7* ஏடுகள்; **இ.** 25 x 3 செ.மீ.; **ஈ.** 4-6 வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

ஆதியென்ற பூரணமாய் ஞான சோதி
அகண்டபரா பரத்தினடி பணிந்து போற்றி
சோதியென்ற கணபதிதாள் போற்றி செய்யச்
சொற்பெரிய அறுமுகவன் பாதம் போற்றி
நீதியாய் நாதாக்கள் பாதம் போற்றி
நிறந்திட்டேன் சாத்திரங்கள் கோடி கோடி
பாதிபரம் நூல்களெல்லாம் பார்த்துத் தேர்ந்து
பாடினேன் கருக்கிடைதான் நூற்றுரெண்டுபத்தே (1)

முடிவு

ஒவ்வாது வாலையென்ற பூரணமே யென்று
உற்றதொரு சாத்திரருதைய மென்று சொல்வார்
ஒவ்வாது சொல்லிவிட்டேன் தினம்பணந்தா னப்பா
உரைத்துநீ மண்டலமே கொண்டா யானால்
ஒவ்வாது திரேகமது கற்பாந்திர காலம்
ஒளியாது அருணனைப் போலகாந்தி கோடி
ஒவ்வாது திசைதீட்சை குருவே யென்று
ஆகுமுற்பனமு ஒடுங்கினமு மாகும் சொன்னேன்
ஒவ்வாது எட்டுரெண்டு மிதுவே யாகும்
ஓகோகோ பூரணமாம் உரையப்பாரே (22)

*முற்றிற்று*

குறிப்புரை

நூற்று இரண்டு பத்து என்ற எண்ணிக்கையை இந்நூலின் முதல் பாட்டு சுட்டுகிறது. ஆனால் **22 பாட்டுகளுடன்** நூல் முற்றுப்பெறுகிறது. உலகமே கருவாகும்; இறைஉருவமே உருவம்; கண்கண்ட கோவிலெல்லாம் இறை இல்லை; செத்திறந்தார் கோடி; ஆண், பெண், கறுப்பு, சிகப்பு என்ற வேறுபாடில்லாத நிலையே பூரண நிலையாகும் என்பன போன்ற தத்துவங்களை விளக்குகிறது. முதலிலுள்ள சட்ட ஏட்டில் 'அகஸ்த்தியர் கருக்கிடைச் சூத்திரம், இராமதேவர் சூத்திரம், அகஸ்தியர் ஞானம், தியானிகளுடைய பகுதி இவை நாலும் அடங்கியிருக்கின்றன' என்ற குறிப்பு உள்ளது. ஆயின் இந்நூலை அடுத்து அகத்தியர் ஞானம் *16* முழுமையாக உள்ளது. பிற இரண்டு நூல்களுக்கு ஒன்றிரண்டு ஏடுகளே உள்ளன. சட்ட ஏட்டை அடுத்து இரண்டு வெற்றேடுகள் உள்ளன.

திருமூலர் வைத்தியம் கருக்கிடை *(1884)*, திருமூலர் வைத்தி யம் கருக்கிடை *600 (1864, 1868, 1869, 1884, 1968*, தன்வந்திரி கருக்கிடை நிகண்டு *300 (1880, 1925)*, நந்தீசர் கருக்கிடை *300 (1888, 1914)* என்ற நூல்கள் வெளிவந்துள்ளன.

## 892. அகத்தியர் சூத்திரம்

**அ. 199:402; ஆ.** *1-2* ஏடுகள்; **இ.** 26.5 x 2.5 செ.மீ.; **ஈ.** *5-6* வரிகள்; **உ.** சுமார் நிலை; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

ஆதியந்த மெய்நிறைந்த தீட்சை மார்க்கம்
அருள்பெற்ற புலத்தியனே சொல்லக் கேளு
சோதியந்தத் துள்ளிருக்கும் சுடரைப் போற்றிச்
சொல்லுகிறேன் அகாரமுடன் உகாரம் நோக்கி
வேதியனே கமலமதில் அப்பொருளே யாகும்
வேதாந்தம் முடிந்ததுதான் எட்டும் ரெண்டும்
சாதியென்ற தீட்சையது அறிந்து பாரு
சத்தியந்தா னுந்தனுக்கு உதவவரு வாரே (1)

முடிவு

என்றனவே பொருவதுவாய் ரவியிற் புக்கும்
எடுத்துரைக்கப் போகாது மென்ன சொல்வோம்
நன்றெனவே கைஐந்து பாட்டுக் குள்ளே
நான்முகத்தோர் சொல்லிவிட்டோம் சொல்லி
விட்டோம்
ஒன்றான பொருளதுவாம் உற்றுப் பாரு
ஓகோகோ என்னசொல்வேன் உகமை யன்றோ
இன்றேதான் புதுமையதுக்கிற் றெழுதக் காணார்
இயப்பட்ட தென்றுபொலி கழந்த வாறே (5)

*முற்றும்*

குறிப்புரை

எட்டும் இரண்டுமாகிய வேதாந்தநிலை கூறுகிறேன் எனத் தொடங்கி, தீட்சை பத்துக்குரியதாக ஓராண்டு செபித்தல் முதல் குரு நிஷ்டை ஈறான செயல்பாடுகளை ஐந்தே பாடல் களில் சுருக்கிச் சொல்லுகிறது. இச்சுவடிக் கட்டில் அமையும் அகத்தியர் சூத்திரம் பதினாறு, அகத்தியர் சூத்திரம் பத்து முதலான நூல்கள் ஞானமார்க்கத்துடன் மருத்துவத்தையும் இயம்புவதால் அந்நூற்கள் மருத்துவத்துடன் சேர்க்கப் பட்டுள்ளன.

## 893. அகத்தியர் ஞானம்

**அ. 531:859; ஆ.** *1-8* ஏடுகள்; **இ.** 38 x 3.5 செ.மீ.; **ஈ. 5-6** வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; சில ஏடுகளின் ஓரப்பகுதிகள் சற்று உடைந்துள்ளன; **ஊ.** நன்று; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

....சொல்லிருந்த விடமெங்கே முப்பா லெங்கே
துவாரப்பா லகரெங்கே முதல்பா லெங்கே
பல்லசங்கு நதிளங்கே வைகுந்த மெங்கே
நாரணனும் ஆலிலைமேல் துயின்ற தெங்கே

அல்லல்படும் அய்ம்பூத மொடுக்க மெங்கே
ஆறைந்து மிதழ்ரெண்டும் முளைத்த தெங்கே
சொல்லவல்லா ருண்டாகி லவரை நாமுந்
தொழுதுகுரு வெனப்பணிந்து வணங்க லாமே (1)

முடிவு

துங்கநிறம் பூ...கண் ணாத ருண்டு
துவார பாலகருட வாசல் சென்றால்
சங்கு தோற்றும் வைகுந்தந் தோற்றும்
சாகரத்தில் பள்ளிகொண்ட மாலுந் தோற்றும்
அங்கவரை தெரிசிக்கி லயனுந் தோற்றும்
அப்பரவு மப்பற்ப நதிதோற்று மப்பால்
மங்கைபிரான் கையிலாச வீடு கண்டால்
மானிலத்தில் பிறவியொழிந் திருப்பார் தாமே (10)

குறிப்புரை : அகஸ்தியர் ஞானம்.... நிலை

**1-10 பாடல்கள். *9* பாடல்கள் உரையுடன் உள்ளன.** *10* ஆம் பாடலுக்கு மட்டுமே உரையில்லை. மெய்ஞானத்தை முற்றுமறிவது எவர் ஒருவருக்கும் மிகக் கடினமானது என்பதும், மெய்ஞானத்தை அறிந்தவர்களால் மட்டுமே உலக வாழ்வின் அறியாமை என்னும் இருளை நீக்கி அருள் ஒளியைக் காண இயலும் என்பதும், உந்தியெனும் நிலை, அறுகோணம், ஓங்காரநிலை, எல்லை வாசலிலே கட்டி நின்ற இடம், அடி, முடி, கலை, இடகலை, பிங்கலை, சுழுமுனை, சற்குரு, தாரை, கமலம், ஆறுமுகம், அகாரம்-*12*, உகாரம்-*16*, பதி-*4*, செத்தவிடம் முதலான செய்திகளும் விளக்கம் பெறுகின்றன.

## 894. அகத்தியர் ஞானம் 16

**அ.**204 : 411 ; **ஆ.** *1-5* ஏடுகள்; **இ.** *25* x *3* செ.மீ.; **ஈ.** 4-6 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; இறுதி ஏடு சற்று முறிந்துள்ளது; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை ; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது (*1899*).

தொடக்கம்

பூரணமே தெய்வமென்று உரைத்தீ ரையா
    பூரணத்தை யின்னதென்று புகல வேணும்
காரணத்தைச் சொல்லுகிறேன் நினைவாய்க் கேளு
    கலையான பதினாறும் பூரணமே யாகும்
காரணமாய் உலகத்தோர் மதிம யங்கி
    கதிகெட்டுப் பூரணத்தை யிழந்தா ரையோ
வாரணத்தில் மனத்தைவைத்துப் பூரணத்தைப் பார்க்கில்
    வாசியென்ற சிவயோகம் வாழ்க்கை யாச்சே (1)

முடிவு

பிரித்துரைத்த சூத்திரமீ ரெட்டுக் குள்ளே
    பித்தர்களே நன்றாகத் தெரிந்து பார்க்கில்
விரித்துரைத்த நூலிடை மார்க்கந் தோன்றும்
    விள்ளாதே யிந்தநூ லிருக்கு தென்று
கருத்துடனே அறிந்துகொள்ளு கலைவா னாகே
    காரியத்தை நினைவாலே கருதிக் கொள்ளு
சுருதியென்ற சேதியெல்லாம் சுருக்கிச் சொன்னேன்
    சூத்திரம்போற் பதினாறில் தொகுத்தேன் முற்றே (16)

குறிப்புரை

*அகத்தியர் பூரணத்தின் சுருக்கமாக அமைந்து,* **பதினாறு விருத்தங்களால் இயன்றது.** இறுதியிலுள்ள ஒரு சில ஏடுகளில் *தியானிகளுடைய குறி,* எதிராஜர் வணக்கம், ஞானவான் என்பதற்கு விடை என்னும் தலைப்புகளில் சில வெண்பாக்களும் விருத்தப் பாக்களுமாக அமைந்துள்ளன.

## 895. அகத்தியர் தண்டகம்101

**அ. 207:414; ஆ.** *1-41* ஏடுகள்; **இ.** 13.5 x 2 செ.மீ; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** சுமாரானநிலை; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

ஆதியெனு மாமேரு தென்பு றத்தில்
    அருள்பெருகும் பிரமகுரு பாதம் போற்றி

நீதியெனு மனோன்மணியின் கிருபை யாலே
நினைவாலே நினைவறிந்து நினைவைக் கண்டு
சோதியெனுங் கமலமத் தமுதங் கொண்டு
தும்பிமுகத் தைங்கரனைத் தொழுது போற்றிச்
சாதியெனுஞ் ....... ....... ....... ....... ன
சமரசமாய்த் தண்டகத்தைச் சாற்றி னேனே. (1)

முடிவு

முத்திகொண்ட மோனமதாய்த் தண்ட கத்தை
முக்காலும் மவுனமதாய்ப் பார்க்க வேணும்
பத்திகொண் டதனாலே பரத்தின் வீடும்
பதிவாக அதனிலொரு தீபங் காணும்
புத்தியுட னத்தீப ஒளியி லேதான்
பூரணமாய் வாசிதனைப் பூட்டிப் பாரு
சித்தியுடன் தாசமதில் தீபஞ் சென்று
திடமாமே தேகமதில் முதலாம் முற்றே. (101)

முற்றும்

குறிப்புரை : அகத்திய[illegible]ருளிய தண்டகம் 101

1-101 பாடல்கள். அகாரத்தில் உகாரமிட்டு மகாரமதில் கொள்ளச் சிரசழகாம், மகாரஉயிர், சிரவணம், பஞ்சகரு, அஞ்சுபூதம் போன்ற செய்திகள் அகத்தியர் பூரணத்தைப் போன்றே விளக்கம் பெறுகின்றன. ஆனால் பெயர் அகத்தியர் தண்டகம் என்று கொடுக்கப்பட்டுள்ளது. தத்துவத்தை விளக்குகிறது. 325:552 இல் இந்நூற் பெயரே காணப்படினும் அதிலுள்ள பாடல்கள் மாந்திரீகத்தை எடுத்துச் சொல்வதாக அமைந்துள்ளன. அகத்தியர் தண்டகம் 101, மச்சேந்திர நூலில் ஞானக் கலிப்பா, மச்சமுனி மனோன்மணி மைப்பெருநூல், தியான உபதேச புவன கோசம், அகத்தியர் ஞானத்திறவுகோல், கருவூரார் பூசாவிதி, தட்சிணாமூர்த்தி அருளிச் செய்த தண்டகம் பட்சிணி 313 ஆகிய நூல்கள் உள்ளதாக முதல் ஏட்டில் குறிப்பு உள்ளது. ஆயின் இறுதி இரண்டு நூல்கள் இல்லை.

## 896.அகத்தியர் தண்டகம் நூறில் ஞானம்

**அ. தாள். 1:5; ஆ.** *31-32 பக்கங்கள்;* **இ.** *குறை;* **ஈ.** *அச்சானதாகத் தெரியவில்லை.*

தொடக்கம்

பாரப்பா மூலமென்றால் மூன்றே மூலம்
பக்குவத்தைச் சொல்லுகிறோம் நன்றாய்க் கேளு
ஆரப்பா அறிவார்கள் அகார மூலம்
அதின்கீழே உகாரமென்ற மூல மாச்சு
நேரப்பா ஆதியிலே மகார மூலம்
நின்றபதி தனையறிய யார்தான் காண்பார்
தேரப்பா சற்குருவைத் தொழுது போற்றி
சிந்தைமன தொன்றினால் காண லாமே (1)

குறிப்புரை: அகத்தீச மகாமுனிவர் அருளிச் செய்த
தண்டகம் நூறில் சொல்லிய ஞானம்.

*தண்டகம் என்ற நூலிலுள்ள நூறு பாடல்களிலிருந்து ஞானத்தைப் பெறுவதற்கு உரிய வழிமுறையைக் கூறும் பகுதி மட்டும்* **ஐந்து பாடல்களில்** *தரப்பட்டுள்ளது. இறுதியாகக் கூறப்பட்டுள்ள 5–ஆம் பாடல் அகத்தியர் தண்டகம் என்ற நூலில் 101–ஆம் பாடலாக அமையும் இறுதிப் பாடலேயாகும்.*

## 897. அகத்தியர் பரிபூரண சூத்திரம்

**அ. 485:736; ஆ.** *15-22 ஏடுகள்;* **இ.** 21 x 2.5 செ.மீ.; **ஈ.** *5 வரிகள்;* **உ.** *சுமார்;* **ஊ.** நன்று; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஈவதுதான் யாருக்குச் சிவயோ கிக்கு
யாகத்திலுள்ள மாண்பருக்குச் சார்ந்தா யானால்
நோய்மிகுந்து சாவாரே சொன்னேன் மைந்தா
நுண்மையா மனத்தில் வைத்து நுணுக்கங் கண்டு

தாய்பத்தைப் பூசித்துக் கற்பங் கொண்டு
சமாதிக்குள் ளிருந்துரைத்துத் தலைவ னாகி
நிமலைமேல் ஏறிவிடு லோகத் துள்ளே
நின்றாக்காற் கொல்லுமடா நிசம்சொன்னோமே (1)

முடிவு

என்னவே ஓம்ஓம் சிவஅங்கி சாய
வென்றுசேர்த் திடுவாய் எட்டாந் தீட்சை
பண்ணவே ஒன்பதாந் தீட்சை கேளு
பரிவான சிவாய ணமஅம் உம்ஓ
மென்றனவே ஓதிடவே பத்தாந் தீட்சை
உரைத்திடுவாய் பதினோராந் தீட்சை யோதச்
சொன்னேன்நான் முன்ன மாகத் தீட்சை
பூட்டினேன் பூரிண்டதே புகழ்ந்து பாரே (28)

குறிப்புரை

1-28 பாடல்கள். அக்கினிமண்டலம், மேலட்சரம், சூரிய மண்டலம், சிவதீட்சை பதினொன்று சந்திர மண்டலம் முதலான தலைப்புகள் உள்ளன. இதன் இறுதி ஏட்டில் வசியம், கணபதி அட்சரம், மாரண சக்கரம் முதலியன உள்ளன.

## 898. அகத்தியர் வாக்கிய காவியம்

**அ.** ***195:396;*** **ஆ.** 5 ஏடுகள்; **இ.** 22x3 செ.மீ.; **ஈ.** 6 வரிகள் **உ.** ஓரளவு நல்ல நிலை; சில ஏடுகள் செல்லரித்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

வாலைபதம் தனையறிந்து பூசை செய்ய
மார்க்கமுள்ள புலத்தியனே சொல்லக் கேளு
வாலையென்ற மங்கைரதி தங்க மாது
மந்திரகலை யுற்றசிவம் மவுன மாது
வாலைவய தானசிவ மாது தன்னை
மார்க்கமுடன் தன்னகம்போல் வளமை செய்து

வாலைதனக் கமுர்தரச பான மூட்டி
மங்கைதன் உபசார வளமை செய்யே (428)

முடிவு

போட்டுருக்கித் தானெடுத்துப் பார்க்கும் போது
பொற்கமல மாதுவய தெட்டே யாகும்
சேட்டடைய சிவயோக மித்தைக் கண்டால்
சிவதவத்துக் குறுதியெனச் செப்ப லாகும்
பூட்டுடைய திறவுகோல் கன்னக் கோல்தான்
புத்தியுடன் வாசியினால் அண்ட மேவி
ஆட்டடையா யதிர்நடனங் கண்டா யானால்
அப்பவல்லோ ஞானபத மாகுந் தானே (477)

குறிப்புரை: அகஸ்தியர் திருவாய் மலர்ந்தருளிய சிறந்த வாக்கிய காவியம் 100இல் எழுதியது.

*சில பாடல்களை மட்டும் எழுதி வைத்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது. இதிலுள்ள பாடல்கள் ஞானவழியைக் கூறுவன.*

## 899. அமிர்த வாசகமென்னும் ஞானயோக சாதன நாதாந்த மாலை

**அ. தாள்.1:15; ஆ.** *77-119* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** *அச்சானதாகத் தெரியவில்லை.*

தொடக்கம்

நின்னயமா ஞானநெறி நிஷ்டைக் கூர்ந்து
நேசித்து நின்மலமா நிலையிற் றோன்றி
முன்வினையின் கருவறுத்து முகிலைப் பெற்று
முனிஞானப் பிரகாசன் எனும்பேரும் பெற்று
சின்மயனாய் செகத்தின் கண்ணவ தரித்து
செகஜோவ சேஷ்டைகளைச் சீறிப் போற்ற
என்குருவே யான்விரும்பும் தத்ப தத்தை
இன்பமுடன் அருளுதமன வியம்பி னேனே

முடிவு

அந்தப் போதகமெல்லாந் தத்துவகுப்பை இப்படிப்பட்ட வெகுமா குருவுக்கள் பரசஞானத்திலே உழன்று தம்மைத் தாமறியாமல் தாமும் குருக்களென்றுந் தாமொழிய வேறில்லை என்றுஞ் சத்தமாய் கையிலே மயங்குவார்கள். பரம ஞானிகளாவது காரண குருவைக் காட்ட அறிய வேணும். காரண குருவை அறியமாட்டார்கள் என்றவாறு.

குறிப்புரை

**பாடலும் உரைநடையும் கலந்தது.** தொடக்கத்தில் இதனை இயற்றியவர் ஞானப்பிரகாச நரசிங்க மகாமுனி என்பதும், நூலின்காலம், வெளியிட்ட இடம், கிடைக்குமிடம் முதலானதும் சுட்டப்பெறுகின்றன. நூலின் இடையிடையே உதாரணப் பாடல்கள் இடம் பெறுகின்றன. நூல் முற்றுப் பெற்றபின் உதாரணமாகச் சொல்லப்பட்ட வேத வேதாந்த ஆகம புராணங்களில் வரும் நாதாந்தம் தொடர்பான செய்திகள் இடம் பெறுகின்றன. குறிப்பாகப் பகவத்கீதை, கைவல்லியம், கண்ணன் உத்தர கீதை, ஞான சவுமிய சாகரம், பரிபூரணம் முதலியவற்றில் கூறப்பட்டவையும், பொய்கை யாழ்வார், திருமங்கையாழ்வார், திருமூலர், மச்சமுனி, பதஞ்சலியார், சங்கராச்சாரியார், வியாக்கிரமர், கொங்கணர் முதலானோர் கூறியவையும் இடம்பெறு கின்றன.

## 900. ஆனந்தலகரி

**அ.** **127:240; ஆ.** 45 ஏடுகள்; **இ.** 35 x 2.5 செ.மீ.; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** சற்றுக் கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஆனந்தலகரி - தைரியத்துக்கு

சிவமெனும் பொருளுமாதி சத்தியொடு
சேரில் எத்தொழிலும் வல்லவா
மிவள்பிரிந் திடில்இயங் குதற்கு
மரிதரி தெனுமறை இறைக்குமால்

நவபெரும் புவனமெவ் வகைத்தொழில்
நடத்தி யாவரும் வழுத்துத்தாள்
அவனியி னகணோ தேவமிலார்
பணியு வாவதோ பரவலாவதோ (1)

முடிவு

சிவம்பெற்று வாழ்தல்

சேநிதியே யமுதே தேனேநற் குணகடலே
யாமளையே அன்பருளத் திருந்துமுறைக் கடங்காத
கோமளையே அம்மேநின் கோகநகத் தாள்வழுத்தும்
மாமறைபோலென் பாடல் வண்டமிழுங் கொள்வாயா
(102)

குறிப்புரை

**1-102 பாடல்கள்**. முதல் ஏட்டில், 'சௌந்தரியலகரி, ஈசுவரி, சர்வேஸ்வரி... சரணம் மாதாவே' என்று தொடங்கும் விநாயக வணக்கப் பாடலொன்று காணப்படுகிறது. தைரி யத்துக்கு, வழக்கு வெல்ல, தடைவிலக, புத்திரர் உண்டாக, வசீகரமோகனம், ஞானபோதகம், தீர்த்தவாசிகள் தலம் அறிவது, சிவசத்தி இன்பம் அறிதல், ஈசுவரியினுட திருவழகு, ஈசுவரி கிருபாகடாட்சம், நோன்பு பலன் உண்டாக, தெரிசனைத் தியானம், படைவிலக, ஸ்ரீவசீகரம், பிறந்த பிள்ளை அழுகுறதுக்கு, நஞ்சுக்கு, பாம்புக்கு, சுரத்துக்கு, ஞானம், தியானம், பிசாசுவிலக, கெற்பவிப்புருதிக்கு, சபையடக்கம், பிணிதீர்த்தல், பிள்ளைப்பிணிக்கு, கிரியைக்கு, ஸ்ரீஉச்சா டனம், வலிப்புக்கு, ருதுவாகாத பெண்ணுக்கு, வயத்துப் பிள்ளை சாகாமல், வசீகரம், வங்கக்கட்டு, மாரணம், மோகனம், புத்திரருண்டாக, தன்மனை வாழ்க்கை, சிறுத்த முலை பால் சுரக்க, வானம், குண்டு, அம்பு விலக்கவும், பகையை வெல்ல முதலான தலைப்புகள் உள்ளன. 575:937 என்ற எண்ணுள்ள நூல் இந்நூலினைப் போன்றதே.

## 901. ஆனந்தலகரி

**அ.** 578:936; **ஆ.** 28 ஏடுகள்; **இ.** 23 x 3.5 செ.மீ.; **ஈ.** 8-9 வரிகள்; **உ.** ஏடுகள் மிகவும் பழுதுபட்டுச் சிதையும் நிலையிலுள்ளன; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

வடமொழி யினும்பழைய விரிகடல் பிறந்தி றைவர்
மனையிடை யிருந்துசிலை மேலிட மொடுதவழ்ந்து
தனதிடுபெயர் சௌந்தரிய லகரிஎன நின்றுவளர
மற்றட லரசு முன்பினும் பலமிக
பிரபந்த மெனுமடு பகைதுறந்தேன் மணினா
நடமிடு பெருங்கவிதை மதகரியொடும்
புவியை நகரில்வலம் வந்ததிதுவே (6)

முடிவு

வேத்துண பொருளாதி சுந்தரிவீ ரடங்கலுமாய்
.... கோளுங் கவிராச பண்டிதன் வீரேயா
நாதரஞ்சகி தாள்பொருந்து .... பதுநூறுமே
போதினின்பர் போகமுஞ் சிவலோகமும் பெறுவார்களே
(104)

குறிப்புரை

1-104 பாடல்கள். அவையடக்கம் உட்பட முதல் 5 பாடல்களின் ஓரப் பகுதிகள் சிதைந்துள்ளன. 10 ஆவது ஏட்டில், 'ஆனந்தலகிரி முற்றிற்று. தேவியின் அழகின் பெருக்கைச் சொல்லுவதால் இந்நூலுக்குச் சௌந்தரியலகிரி என்ற பெயரும் உண்டு' என்ற குறிப்பு காணப்படுகின்றது. முதல் 10 ஏடுகளில் 1-39 பாடல்கள் உள்ளன. 11 ஆவது ஏட்டில் சௌந்தரியலகிரி என்ற தலைப்புடன் 40 ஆவது பாடல் தொடங்குகின்றது. முதல் 10 ஏடுகளில் தேவியோக நித்திரை கொள்ளுந் தானம், குண்டலினி சத்தி தன்னிடம் விட்டுச் செல்லுமாறு, தேவியிருக்குஞ் சக்கரம் வேண்டி னோர் தியானிக்கும் இயல்பு, சமாதியும் நிட்டையும் உடையோர் தெரிசிக்கும் இயல்பு, தேவிபாத பூசை மகிமை

சொல்லல், என்னை அறிதல் வேண்டுமெனல், தேவி வித்தை வந்தவாறு, தேவியினது மூலமந்திரம், சத்திவடிவும் சிவன் வடிவும் ஒன்றெனல், அனாகதத்திலே தெரிசிக்கு மியல்பு, சுவாதிட்டானத்திலே தெரிசிக்குமியல்பு, மூலா தாரத்திலே தெரிசிக்கும் இயல்பு முதலான தலைப்பு களிலும், அடுத்து, திருநகைப்புகழ்ச்சி, திருக்கழுத்தின் புகழ்ச்சி எனும் தலைப்புகளிலும் செய்திகள் உள்ளன. அடுத்துள்ள 10 ஏடுகளில் பூசைமுறை, மந்திரம், தீட்சை விதி, சவுந்தரியலகிரி 109-க்கும் பூசை செய்யும் முறை, சிதம்பரச் சக்கரம், நாற்புது முக்கோணம் எழுதும் முறை முதலான செய்திகளும், ஓர் ஏட்டில் திருக்களிற்றுப்படியார் என்ற தலைப்பும் உள்ளன.

## 902. ஔவைக்குறள்

**அ. 79:178; ஆ.** 49-65 ஏடுகள்; **இ.** 25 x 2.5 செ.மீ; **ஈ.** 7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

அவ்வையார், வீடுநெறிப்பால், (உடம்பின் பயனறிதல்)

ஆதியாய் நிற்கு மறிவு முதலெழுத்
தோதிய நூலின் பயன்
பரமாய சத்தியுளப் பஞ்சமா பூதங்
கரமாகத் தோன்றும் பிறப்பு
ஓசை பரிச முருவஞ் சுவைநாற்ற
மாசைப் படுத்து மாறு .

முடிவு

தோற்றுமது வீடாத் தொல்லை முதலொன்றாய்
யேற்றிவல மீச னுளன்
நிற்கும் பொருளும் நடப்பனவுந் தானாகி
யுற்றெங்கும் நிற்குஞ் சிவம்

### குறிப்புரை

இச்சுவடி நூல் இரண்டு இயல்களை உடையது. வீடுநெறிப் பால் என்னும் முதற்பாலுள், உடம்பின் பயனறிதல், உடம்பின் நிலையாமை, நாமதாரணை, வாயுதாரணை, அங்கிதாரணை, அமுர்தத்தாரணை, அரசனை, உள்ளுணர்தல், பத்திமை, அருள்பெறுதல், நினைப்புறுதல், தெளிந்துரைத்தல், கமலஞானம், அருளொன்றிநித்தல், உருபாத்தம், சிந்தைகாண்டல். வெளிகாண்டல், பிறப்பறுதல், சதாசிவம் என இருபது அதிகாரங்கள் உள்ளன. ஒவ்வொரு அதிகாரத்தினுள்ளும் பத்துப்பத்துக் குறட்பாக்கள் உள்ளன. இரண்டாம் இயலான தன்பால் வீடுநெறி என்னும் பாலின்கீழ் அங்கிலப்பஞ்சு, மெய்யகம், கண்ணாடி, சூனியகாலமறிதல், திருவருள்மாலை, சிவயோக நிலை, ஞானநிலை, ஞானமழியாமை, மெய்நெறி, சூரிய உதய தரிசனம் ஆகிய பத்து அதிகாரங்கள் உள்ளன. ஒவ்வொரு அதிகாரத்துள்ளும் பத்துப் பத்துக் குறட்பாக்கள் உள்ளன.

## 903. கியான உபதேச புவனகோசம் முதலியன

**அ.**207:417; **ஆ.** *1-5* ஏடுகள் இ.*13.5* x *2* செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

காயாம்புரி என்னும் பட்டணத்திலே சந்திரமென்னும் சூத்திரமென்னும் அதிசூத்திரமென்னும் முக்கோட்டையை வளைத்துக் கொண்டு, நவத்துவார வாசலும் வாசல் தோறும் அட்டமத மென்கிற யானைகளை ஓடவிட்டு உத்தண்டஞ் செய்த காரணத்தினாலும் இந்த முக்கோட்டையைக் கொள்ளுவோமென்ற பேருக்குக் கொள்ள வொண்ணாது; சாதிப்போமென்ற பேருக்குச் சாதிக்க வொண்ணாது; நானாவித உபாயத்தாலும் இந்த முக்கோட்டையைக் கொள்ளும் வகை எங்கினோ வென்னில்

முடிவு

விருத்தம்

உத்தம யோகி களுக்கும் அரும்பெருந் தவத்தோ ருக்கும்
வித்தக மறையோ ருக்கும் விரும்பிய பூசை செய்யச்
சுத்தாம் வேள்வி தன்னைச் சொல்லற நடத்தி னோர்க்கும்
முத்தியே அடைவா ரென்று மொழிந்தனர் முனிவர் தாமே

குறிப்புரை : ஸ்ரீ நந்திதேவர் திருமூல தேவருக்கு அருளிச்
செய்த ஞானபோதமாகிய கியான உபதேச
புவனேகோசம்

காம குரோத, லோப, மத, மாச்சரியம், ஆணவம் முதலானவை உள்ளோர் அழிவர் என்பதற்குச் சான்றளித்துக் கதையின் மூலம் உணர்த்துகிறது. தொடர்ந்து மேல்நோக்குள வாயு 5, அண்டவாயுவுக்கு மருந்து கீழ்மை, மேல்மைக்கு மந்திரம், பேயி ஓட்ட மந்திரம், நீரழிவுக்கு மருந்து, காக்கா வலிப்புக்கு நசியம் நிலாவரைச் சூரணம், சுடர் எண்ணெய்த் தயிலம், அகத்தியர் ஞானத் திறவுகோல், நசியம், மந்திரம் முதலான தலைப்புகளில் சில ஏடுகள் உள்ளன. இறுதியில் ஒரு சட்ட ஏடு உள்ளது.

## 904. கொங்கணர் பரமஞானத்தில் சொல்லியது

**அ. தாள்.1:8; ஆ.** *39-40* பக்கங்கள்; **இ.** குறை; **ஈ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

முருகேசப்பிள்ளை பாதார விந்தமே துணை

அறியவென்றால் வெகுபேர்க்குத் தத்துவமாங் குப்பை
அதையகற்றி உபனிடத்தை யனந்தம் பார்த்து
பிரியவென்றால் வேரான வஸ்துக் குள்ளே
பிரிந்ததென்ன விரிந்ததென்ன பிரதிபா தித்து
நெறியில்நின்ற ஆத்மாவைத் தான்தா னென்று
நேராசைச் சாங்கியத்தை அறிய வேணும்
தெரியவென்றால் சாங்கியத்தை அறிந்த பின்பு
தேகமென்ற சோதினையை அறிந்து பாரே (1)

முடிவு

மதிகெட்டா ரென்றசொல்லு பாருக் காச்சு
மகத்தான கேசரிக்குள் வாழ்ந்தோர்க் காச்சு
பதிகெட்டார் என்றசொல்லு யாருக் காச்சு
பராபரத்தை அம்பரமாய் பாய்ந்தோர்க் காச்சு
விதிகெட்டார் என்ற சொல்லு பாருக் காச்சு
வேதாந்த சிரோண்மணியாம் ஞானிக் காச்சு
கெதிகெட்டான் என்ற சொல்லு யாருக் காச்சு
கேள்வியற்ற மூடருக்குக் கிட்டுந் தானே

குறிப்புரை: கொங்கணர் அருளிச்செய்த பரமஞானத்தில் சொல்லியது

1-4 பாடல்கள். முதல் பாடலைத் தவிர பிற மூன்றிற்கும் பாடல் எண் தரப்படவில்லை. யோக நெறியில் நின்றால் உன்னை நீ உணர்வதோடு இறையையும் உணர்வாய் என்பது சுட்டப்பெறுகின்றது. சித்த மருத்துவக் குறிப்புகள் ஏதும் இச்சுவடியில் இல்லை.

## 905. சிவசுப்பிரமணியர் போத வாக்கியம்

**அ. தாள். 1:11; இ.** 56-60 பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

மோட்சத்தை இச்சித்தவன் அறியவேண்டியது. சரீரத் துன்பத்திற்கு இடை என்றும், கெற்பங் கொள்கையிலே படுந் துன்பமும், எவ்வனத்திலே படுகிற துன்பமும், பூமியில் பிறந்து வாலிபத்தில் படுகிற துன்பமும் இது முதலான துன்பங்கள் எல்லாம் நன்கு அறிந்து சரீர துன்பத்தைக் குறித்துப் பிணியடைந்து இனிமேல் சரீரமெடாமல் மோட்சத்தை அடைகிற வழியை அறிய வேண்டியது.

முடிவு

விக்கபாகய பிரவேசம் பண்ணி ஆகாசத்திலே உண்டான பொருளை எல்லாங் காண இது முதலான சித்துகளை அடைவன். இந்தச் சித்துகள் கூடிச் சஞ்சரித்து எப்போ சரீரத்தை

விட வேணுமோ அப்போ சரீரத்தை விட்டு, சுடர்சோதியா இருப்பேன் என்று சுப்பிரமணியர் கும்பமுனிக்கு அருளிச் செய்தார் என்றவாறு.

முற்றும்

குறிப்புரை: சிவசுப்பிரமணியர் அகஸ்த்தியருக்கு உபதேசம் பண்ணின போதவாக்கியம்.

**உரைநடை**. மனிதப்பிறவி எடுத்ததால் அடைந்த, அடைய விருக்கிற துன்பங்களும், யோகவழி நின்று சித்துகள் கைவரப் பெற்று இவ்வுடலை விட்டு நீங்கி சோதி வடிவினை அடையும் வழிமுறைகளும் கூறப்படுகின்றன.

## 906. சுப்பிரமணியர் நூறு

**அ. 156:336; ஆ.** *1-24* ஏடுகள்; **இ.** 22.5 x 3 செ.மீ; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; பல ஏடுகள் சிதைந்துள்ளன; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

சீரப்பா ஆகாசப் பெருமை சொல்வேன்
செகந்தனிலே செப்பார்கள் சித்த ரய்யா
ஆரப்பா என்போல்றிந்து சொல்வா ரில்லை
ஆதியந்தம் இரண்டுமொன்றாய் அறியச் சொன்னேன்
பேரப்பா கங்குல்பகல் திடமே யாச்சு
பேராக வந்ததுவே நகார மாச்சு
சேரப்பா யிதுவல்லோ ரெண்டு மாச்சு
செப்பாமல் சித்தரெல்லாம் மறைத்திட் டாரே (1)

முடிவு

வீயெழுத்தின் விபரமதை யறிய மாட்டார்
அவனிதனில் என்னூற்குச் சரியான நூலுமில்லை
பரையென்ற வாசியினால் யீராறு கடந்து
பரமதிலே கடந்தவர்க்குப் பயனும் விள்ளும்
வெறிகொண்ட மோடனுக்குத் தெரியா தப்பா
விரைந்தோடிக் கடிநாய் போ லவேகாமஞ் செய்வான்

குறியென்ற ஞானமதுநூற் றொன்றி னுள்ளே
கூறுசொன்ன விபரமெல்லாங் கூறி னேனே (101)

முற்றும்

பிற்குறிப்பு

பிரபவ வருஷம் தை மாதம் *16* ஆந்தேதி நூறு எழுதினது. சோளவந்தான் கறுப்பன்பிள்ளை கையெழுத்து.

**குறிப்புரை: சுப்பிரமணியர் ஞானம் 100**

ஆகாசப்பெருமை, வெட்டவெளி, அட்டாங்கம், சிவ யோகப் பெருமை, சீவவதை பூசை, காலன்வீடு, வாலைவீடு முதலானவற்றை விளக்குகிறது. சுப்பிரமணியர் ஞானம் *200 (1895, 1915, 1935)*, சுப்பிரமணியர் *500 (1930)* என்ற நூல்கள் அச்சாகியுள்ளன.

## 907. ஞானக்கும்மி

**அ. 519:803; ஆ.** *1-6* வரிகள்; **இ.** 15.5 x 4 செ.மீ; **ஈ.** *12-13* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாக வில்லை.

தொடக்கம்

சாதி பலபல வேறாகின்ற சாத்திரங் கேளடி ஞானப்
பெண்ணே
தேக மான கருக்குழியில் சிவசீவன் இருந்து விளையாட
யோக மென்ற தமிழ்ப்பாட நிதமுகந்து கோடி ஞானப்
பெண்ணே
யேகப் பெருவழிப் பட்டணத்தே அதிலேதோ சித்தனொரு
வனுண்டாம்

முடிவு

அண்ட சராசர பிண்ட மெல்லா மறுவுக் கணுவாகி நின்றானே
தண்டமிழ் கும்மியுரைப் பொருளுஞ் சிவசாமியைப்
போற்றிக் கொண்டர் முகடிவாழி

ஞானப் பொருள் வாழி வவ்விய வஸ்த்தும் வித்தும் வாழி
ஆழிசூழ் புவிதான் வாழி வாலை அம்பிகைதா சன்மிக வாழி

ஞானக்கும்மி முகிழ்ந்தது.

குறிப்புரை

இறைத் தத்துவப் பாடல்களைக் கொண்டமைகிறது. தன்னுடைய உடலையும், உள்ளத்தையும் இறுதியில் இயற்கை முழுவதையும் தன்வயப்படுத்துவதற்கான வழிமுறைகளைக் கூறுகிறது.

## 908. (ஞானநூல்)

**அ.** 295:520; **ஆ.** *7-53 (21)* ஏடுகள்; **இ.** 18 x 3 செ.மீ.; **ஈ.** *6-8* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

கனலிலே வாயுவதில் புக்கித் தானால்
கனந்துறைந்து அமுர்தமது கனிந்து பாயும்
புனலான அமுர்தமுண்டால் காயம்பில மிதாகும்
போச்சுதடா நரைதிரையும் புதுமை யாச்சு
அனலிலே வெந்ததொரு பண்டந் தானும்
அரைக்குமோ நீருக்கு அதுபோ லப்பா
நினவிலே யித்தியானம் மூட்டு மூட்டு
நிச்சியமாய்ச் சமாதிக்குள் நிலைக்குந் தானே (15)

முடிவு

காணுநீ நவனியாக முறைதப் பாமல்
கனகயமுறை யாய்ச்சொன்னே னானாலும் சாந்தி
பூணுநீ கும்பத்தில் சக்க ரத்தில்
பொன்னான விக்கிரத்தில் மேரு தன்னில்
தோணுநீ பூசைபண்ண நியாயஞ் சொன்னேன்
சுருதிபெற முத்திரைகள் சொல்வேன் கேளு
நாணுநீ நவமுத் திரைஒன் பதுக்கு
நன்றாகப் புலத்தியனே சொல்லக் கேளு (168)

குறிப்புரை

15-170 பாடல்கள். இடையிடையே பாடல்கள் பல விடுபட்டுள்ளன. சமாதிநிலை, தியானமுறை, ஒன்பதுவகை முத்திரைகள், பூசைவிதிகள் முதலான செய்திகள் இடம் பெறுகின்றன. நூற்பெயரினை அறிய இயலவில்லை.

## 909. தட்சிணாமூர்த்தி ஞானம் 6

**அ. 303:528; ஆ.** *35-36* ஏடுகள்; **இ.** 25 x 2.5 செ.மீ.; **ஈ.** 5 வரிகள்; **உ.** ஓரளவு நன்று; **ஊ.** சற்றுக் கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

சொல்லுகிறேன் சூட்சத்தின் மகிமை கேளு
சுருதிவெளிக் கெட்டாத சூட்சம் பாரு
வெல்லுதற் குவையோடு சொல்லுதற்குப் பிள்ளாய்
வேதாந்தச் சித்தாந்தம் பறையறைக் குள்ளே
அல்லுபக லத்தமகா மேருநுனி உச்சி
ஆதித்தன் சந்திரனு முதித்தபர வெளிக்குள்
நில்லுமயிற் பாலமூன்று நெருப்பாத் துக்குள்
நேராக அசுரர்நடுக் கொம்பு தானே (1)

முடிவு

நிலைத்திட்ட சுழிமுனையைக் காட்டி நின்றால்
நேராகத் துவாரத் தில்பளிச் சென்றுப்
பொலிலைக் குறட்டா லெடுத்தூத்தும் தங்கம்
போலக் கம்பி யெழும்பு மப்பா
பளிச்சென்றே பிரகாசிக் கும்துளைக் குழியால்
நிலைக்குவந்து அமுர்தமுண்ணு சோதியாம்பரா
பரத்தின்
நிலையே தென்றால் அலைத்துவிட்ட ஆதி
... ... ... ... ....... ....... ....... ......... (6)

குறிப்புரை

1-5 பாடல்கள் முழுமையாக உள்ளன. ஆறாவது பாடலில் ஞானத்தின்வழி அமுர்தத்தைப் பெறும் வழி கூறப்

பெறுகின்றது.

## 910. தட்சிணாமூர்த்தி தர்க்க பூரணம் 200

**அ.**195 : 395; **ஆ.** *1-57* ஏடுகள்; **இ.** *22 x 3* செ.மீ.; **ஈ.** *6* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

மேருவி லுதித்த பூரண மாகும்
வெளிப்படும் சோதி யதனாற்
உருபோல் தங்கள் முகனென் றுந்த
கணபதி யூடசி யிடத்தே
யுருவினில் தோன்றி மரபினுட பூரணம்
உதிக்கின்ற சோதிமா மணியே
திருவினி லுதித்த மெஞ்ஞான வழியென
தெளிந்தவர் மதியெனக் காப்பு (1)

முடிவு

நோக்குமப்பா புலத்தியனே இருநூறு பார்த்தால்
நூல்போட்ட வழிபோலே துலக்க மாகும்
ஆக்குமப்பா உன்றனுக்காய்ப் பூர ணத்தை
மறுவியே சொல்லிவிட்டேன் தேறிக் கொள்வாய்
போக்குவது உயிரெழுத்தை ஆக்கினையில் சொன்னேன்
பாவாக்கு கருவறிந்து அடக்கு நீயும்
தாக்குவது ஒன்றப்பா வன்னி நீயும்
'சதாநித்தஞ் சிவயோகங் கூடி வாழி (201)

*தட்சிணாமூர்த்தீசர் அருளிச் செய்த தர்க்க பூரணம்*
*இருநூறு முற்றிற்று.*

குறிப்புரை

1-201 பாடல்கள். மனம், மனமாறாட்டம், மனம் ஒன்றும் நிலை, குருமுப்பு, விமலம், எரிப்பு, ஞானம், யோகம், யோக ஞானம், தீட்சை, தீட்சையருள் போன்ற பலவகைத் தத்துவச் செய்திகளைத் தருக்க முறையில் முறைப்படுத்திக் கூறுகிறது.

## 911. தத்துவ உபதேச ஜெனன சக்கரம்

**அ.** 186 : 386; **ஆ.**32 ஏடுகள்; **இ.** 27 x 2.5 செ.மீ.; **ஈ.** 7-8 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** கடினம்; **எ.**முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

இந்த ஜெனனம் எடுக்கிறமுறை எப்படியோ வெனில் பராபரமாகிய பரமேஸ்வரன் தாரதலம் படைக்கத்தான் நினைத்தருளில் பராபரத்திலே பரந்தோன்றி, பரத்திலே சிவன் தோன்றி, சிவத்திலே சத்தி தோன்றி, சத்தியிலே நாதந் தோன்றி, நாதத்திலே விந்து தோன்றி, விந்துவிலே பசுபட்சி தாவர சங்கந் தோன்றி, பசுபட்சி தாவர சங்கத்திலே சதாசிவந் தோன்றி.... மச்சையிலே சுக்கிலந் தோன்றி, சுக்கிலத்திலே சுரோணிதம் தோன்றி சுரோணிதத்திலே எடுக்கப்பட்ட திரேகமாகும்.

### முடிவு

மோகமென்ற எருப்போட்டு முளையில்லாத விரை விரைத்து, அங்கமெனும் வாய்க்காலைக் கட்டி மதமென்கிற மதவுந் திறந்து, சாந்தமென்கிற தண்ணீரைப் பாயவிட்டு, மெஞ்ஞானமென்கிற தானியம் விளைந்து நிற்பது. அந்த ஆகாசத்தின் வண்ணந் தவளத்தின் ஒளியா மின்னலிட பிரகாசத்தின் ஒளியாய் இருக்கும். அந்தமென்கின்ற ரூபத்தை வழங்கும். அப்போது ஆனந்த மிகவுண்டாம். நிராமயத்திலே நாட்டமாயிருந்தது மெய்யாம். முற்றும். கணபதி துணை.

### குறிப்புரை: திருநந்தி தேவர் திருமூல தேவர்க்கருளிச் செய்த தத்துவ உபதேச ஜெனன சக்கரம்

ஆண் பெண் தோற்றத்திற்குக் கரு உற்பத்திக்கு அடிப் படையாகிய சுக்கிலமும் சுரோணிதமும் எப்படித் தோற்றம் பெறுகிறது என்பதும், கரு உண்டாகும்போது ஓடும் பிராணவாயுவைக் கொண்டு குழந்தையின் உருவ அமைப்பு, ஆயுள் முதலியன எங்ஙனம் அமையும் என்பதும், மனிதன் அனைத்தையும் அறிந்து அவற்றிலிருந்து விடுபட்டு ஆனந்த மயத்தை வீடுபேற்றினை எப்படி அடைவது என்பதும்

கூறப்பெறுகின்றன. மேலும் பூதம்-5, அவற்றின் கூறுகள், தோத்திராதி - 5, சத்தம் - 5, வாக்கு - 5, மண்டலம் - 3, அவத்தை - 5, ஆதாரம் - 6, வாசல் - 9, மண்டலம் - 3 என்றவாறு இவற்றின் வகைகள் விளக்கப்பட்டு, அவற்றின் தன்மைகளைக் கூறும் தோத்திரம், கன்ம இந்திரியங்கள் - 5, ஞான இந்திரியங்கள் - 5, அந்தக்கரணம் - 4, ஆதாரம் - 6 என்பன போன்ற செய்திகளும் தொகுத்துக் கூறப்படுகின்றன.

## 912. தத்துவ உபதேச ஜெனன சக்கரம்

**அ. தாள். 1 : 13; ஆ.** *63 - 69* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகாதது.

குறிப்புரை: திருநந்தி தேவர் திருமூலதேவர்க் கருளிச் செய்த தத்துவ உபதேச ஜெனன சக்கரம்

இந்நூல் *186:386* என்ற எண்ணுடைய நூலினைப் போன்றதே.

## 913. தர்க்கஞான காவியம்

**அ. 391:635; ஆ.** *1-54* ஏடுகள்; **இ.** 25 x 5 செ.மீ.; **ஈ.** *10-12* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

ஆதிபர மான பதிகருணை கூர்ந்து
அடிமுடியும் நடுவான அருளே காப்பு
பாதிமதி சடைக்கணிந்த பரனே காப்பு
பரஞ்சுடர்க்குப் பாதியுடல் பகுத்த சோதி
நீதிமறை சாத்திரங்கள் முன்பின் னான
நெருடலெல்லாந் தீர்த்துவொரு மாலை பூண்டு
சாதிபல வுயிர்களுக்குத் தருவாய் நின்ற
தந்தைதாய் காப்புகண பதிகாப் பாமே (1)

முடிவு

அதிரவே ஐவர்களுந் திடுக்கிட் டாட
அரகரா சின்மயத்தை நீறு பூசை
அதிரவே மகாலோகஞ் சத்த தேவர்
அருகிலிரு பிறமுமவர் கட்டியங் கூற

அதிரவே செகமயக்கித் திலத மிட்டாள்
அஷ்டசத்தி அஷ்ட்டதுரகி அஷ்ட்ட னாகம்
அதிரவே கம்பமணிச் சிலம்பு கொஞ்ச
அன்னம்போல கலுக்கெனவே வந்தால்காணே (318)

குறிப்புரை

1-319 எண்சீர் விருத்தப் பாடல்கள். 319–ஆவது பாடல் முடிவு பெறவில்லை. கணேச பூசை, ஆறுமுகவர் பூசை, சிவவாலை பூசை, வாசியோக விபரம், மார்க்கண்டன் கதை, புசுண்டர் கதை, சிவயோகம், வாலைக்கொலுவு, வாலை மந்திரம், பூசைகள் எவ்வகையில் செய்யப்பட வேண்டும், குருவைத் தேடிக் கொள்வது எங்ஙனம் முதலான ஞானம் தொடர்பான செய்திகள் விளக்கம் பெறுகின்றன.

## 914. நந்தி திருமூலருக்கு அருளிய பூத்தாது

**அ. தாள். 1:14; ஆ.** 69-77 பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

பூதம் - 5, பொறி - 5, புலன் - 5, கன்ம இந்திரியம் - 5, ஞான இந்திரியம் - 5, கரணம் - 4, அறிவு - 1, திசைநாடி - 10, திசைவாயு - 10, சயம் - 5, கோசம் - 5, ஆதாரம் - 6, மண்டலம் - 3, மலம் - 3, தோஷம் - 3, எச்சனை - 3, குணம் - 3, இராசம் - 8, வீணை - 2, அவத்தை - 5 ஆகத்தத்துவம் - 96-க்கும் பதப்பொருள் நிலவும்.

முடிவு

மூலமதி நிரம்பகத் திருசுவர் முடாக்குநான்
முகன்குண்டலி நாவியுன்
மாலுருத்திரன் நெஞ்சில் கரத்தினில் மண்ணுமீசன்
சதாசிவன் நெத்தியில்
கோலநாத நாமவிந்து நாதமாங் கூறுதன்னு பாடலில்பரா
சத்தியாம்
மேலவாசல் ஒளிவெள்ள மளவிடா மானந்த
நடன மதாமே

ஆறுதாரக் கட்டளை முற்றுப் பெற்றது.

திருச்சிற்றம்பலம்

குறிப்புரை: திருநந்திதேவர் திருமூல தேவருக்கு அருளிச் செய்த பூத்தாது

**உரைநடை**. பூதம், பொறி, புலன், கன்ம இந்திரியம், கரணம், தசநாடி, தசவாயு, ஆதாரம் முதலான 96 தத்துவங்கள் விளக் கம் பெறுகின்றன. இவற்றிற்குரிய மூலமந்திரங்கள் கலி விருத்தத்திலும், அறுசீர்விருத்தத்திலும் இடம் பெறுகின்றன.

## 915. நந்தி திருமூலருக்கு உபதேசித்த தத்துவம்

**அ. 141:311; ஆ.** *128-156* ஏடுகள்; **இ.** 24 x 3 செ.மீ; **ஈ.** *10-11* வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** படிக்கக்கூடிய எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

வள்ளுவநாயனார் சாட்சியாகச் சொன்ன தத்துவமினி யிந்தச் சரீரம் எண்சாண் நீளம், நாற்சாண் பருமமுந் தன்விரலால் தொண்ணூத்தாறு விரற்பிரமாண மிப்படிக் கொத்த சரீரத்திற் தத்துவந் தொண்ணூத்தாறுண்டு. அவையாவன: வாசல்-*9*, புலன்-*10*, ஆதாரம்-*6*, மண்டலம்-*3*, நாடி-*10*, வாயு-*10*, தாது-*7*, ராகம்-*8*, கோசம்-*5*, கரணம்-*4*, அவத்தை-*5*, குணம்-*3*, மலம்-*3*, வியாதி - *3* ஆகத் தத்துவந் தொண்ணூத் தாறு. இந்தத் தத்துவந் தொண்ணூத்தாறுக்கும் விபரம் இனி. வாசலாவன செவி-*2*, கண்-*2*, நாசி-*2*, வாய்-*1*, குய்யம்-*1*, குதம்-*1* ஆக வாசல்-*9*.

### முடிவு

சூதம் புகட்டி யிப்படி யுணர்த்தி யருளிய முறமையுட்பட்டுத் தேடாதவன் ஞானியல்ல. யிந்த முறைமையுட்படித் தேடின பெரியோர்களுக்குப் பராபரத்தி லுத்திரங்களும் வெளியா யிருக்குமென்றவாறு. இந்த வாக்கியம் மயீசுரன் கயிலாச சிங்காசனத்திலெழுந்தருளி யிருந்து பார்பதிக்குந் திருநந்தீசுர தேவருக்கு மருளிச் செய்தவாறு. யிந்த முறைமை யறியாதவன் குருபுத்திரனல்ல

வென்று திருக்குரு நந்தீசுரர் ஆதிவள்ளுவ நாயினார் சாட்சியாகத் திருமூலருக்கு வருளிச் செய்தவாறு. அண்டத்திற் கண்டபொருள் பிண்டத்திற்காண வேணும்; பிண்டத்திற் கண்ட பொருளண்டத்திற்காண வேணும். ஆத்ம தெரிசனம் முற்றும். குருபாதமே கெதி.

**குறிப்புரை: நந்தீசுரர் திருமூலருக்கு உபதேசித்த தத்துவம்**

*96* தத்துவங்களையும், அண்டத்திற்கும், பிண்டத்திற்கும் உள்ள ஒற்றுமைகளையும், ஞானவழியை அடைவதற்குத் தெரிந்து கொள்ளவேண்டிய முறைமைகளையும் கூறும் இந்நூல் *139*–ஆவது ஏட்டில் முடிவுறுகிறது. அடுத்துத் 'தத்துவம்' என்ற தலைப்பில் *128-139*–ஆம் ஏட்டு எண்களில் உள்ள அதே செய்தி மீண்டும் *140-156*ஆம் ஏடுகளில் இடம் பெற்றுள்ளது.

## 916. நந்தி திருமூலருக்கு உபதேசித்த தத்துவம்

**அ. தாள். 1:12; ஆ.** *61-62*; **இ.** முழுமை; **ஈ.** அச்சானதாகத் தெரியவில்லை.

**தொடக்கம்**

பராபரம் - அன்னம், பரம் - ரசம், சீவம் - உதிரம், சத்தி - மாங்கிஷம், நாதம் - மேதை, விந்து - சத்தி, சதாசிவம் - மச்சை, மயேஷ்பரம் - சுக்கிலம், ருத்திரன் - சுரோணிதம், விஷ்ணு - ஊர்வசி, பிரம்மா - ஆயிசு, ஆகாசம் - வெளி, வாயுவு - வுணந்து, தேய்வு - கட்டு, அப்பு - நனைந்து, பிரிதிவு - வளந்து.

முடிவு

நாலு வேதம் என்ற ரதங்களும், அசுத்தம் சுத்தம் என்ற தேவிகளும், இருவினை என்ற தோழியும் இவர்கள் கூடி கர்மாபுரிக் கோட்டையைச் சுத்திக் கொண்டு இருப்பார்கள். இந்தக் கோட்டையைக் கொள்ளும்வகை இருதயமென்ற வில்லுக்குக் கருபுரியென்ற ஞானியைப் பூட்டி, அரி யென்னும் அம்பைத் தொடுத்துக் குருவென்னும் இலக்கை நோக்கி நிற்கவும்.

குருபாதமே துணை

குறிப்புரை: திருநந்தி திருமூலருக்கு உபதேசித்த தத்துவங்கள்

உரைநடை: நம் உடலையும் உயிரையும் சுற்றியுள்ள பந்தங்கள் இவை இவையெனவும் அவற்றை ஞான வழியில் நின்று எவ்வாறு வெல்லலாம் என்பதும் கூறப்பெறுகின்றது. *141:311* என்ற நூலினைப் போன்றதே.

## 917. நந்தி புவனகோசம்

**அ. தாள். 1:4; ஆ.** *29-31* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

காயாபுரி என்னும் பட்டணத்திலே அந்திரமென்னும், சூத்திரமென்னும், அதிசூத்திரமென்னும் முக்கோட்டையை வளைத்துக் கொண்டு நவ துவார வாசலும், அந்த வாசல் தோறும் அஸ்பட மதமென்கிற யானைகளை ஓடவிட்டு உத்தண்டம் செய்த காரணத்தினாலும் இந்த முக்கோட் டையைக் கொள்ளுவோமென்ற பேருக்குக் கொள்ள வொண்ணாது, சாதிப்போமென்ற பேருக்குச் சாதிக்க வொண் ணாது, நானாவித உபாயத்தாலும் இந்த முக்கோட்டையைக் கொள்ளும்வகை எங்கினோவெனில் ஊழிக்கு ஊழி தோன்றியவாறும்.

முடிவு

காலாங்கி நீற்புக்கல் கலந்திட நாகதம்
மாலாங்கி ஈசன் பிரமன் சதாசிவன்
மேலாஞ்சி கொண்டு வினவவல் லானுக்குக்
காலனு மில்லை கருத்துள் ளேதானே

முற்றிற்று.

குறிப்புரை: ஸ்ரீநந்திதேவர் திருமூலர்க்கு அருளிச்செய்த ஞானபோதமாகிய தியான உபதேச புவனகோசம்

**உரைநடை**. இறுதிப் பகுதியில் திருமந்திர நடையைப் பின்பற்றி எழுதப்பட்ட பாடல்கள் மூன்று இடம்பெறு கின்றன. மனிதனுக்கும் அண்டத்திற்குமுள்ள பிணைப்புத் தத்துவம் கூறப்பெறுகின்றது.

## 918. நந்தீசர் முதலானவர் சொன்னது

**அ.** 211:421; **ஆ.** 40 ஏடுகள்; **இ.** 21 x 3 செ.மீ.; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

நந்தீசர் முன்னூறில் சொன்ன கபால சுற்றி

பதுங்கினேன் அவர்பதத்தை என்மேல் கொண்டு
பதஞ்சலியாய் நிறஞ்சன்பாய்ப் பாதந் தூக்கி
ஒதுங்கினேன் அவர்தயவு என்மேல் கொண்டு
ஓடிவந்து நந்திவா வென்று சொன்னார்
இறங்கினார் வருமுன்னர் மண்டி போட்டு
இருந்தனடா எனக்கொருவர் எதிரி யில்லை
சதங்கியே வளையினுள்ளே சாரைப் பாம்பைச்
சாதகமாய் நாள்பழக்கம் தான்செய் வாயே (10)

முடிவு

பஞ்சகணதீட்சை ஞான சவுமியத்தில் சொன்னது

ஆமப்பா முதல் தீட்சை யகார மாகும்
அப்பனே உதாரமது இரண்டாந் தீட்சை
காமப்பா மகாரமது மூன்றாந் தீட்சை
கருணைவளர் சிகாரமது நான்காந் தீட்சை
தாமப்பா வகாரமது ஐந்தாந் தீட்சை
தன்மையுடன் தானறிந்து ஒன்றாய்ச் சேர்க்க
ஓமப்பா பஞ்சகண தீட்சை யாச்சு
உண்மையென்ற தீட்சையிலே யுகந்து நில்லே

குறிப்புரை

நந்தீசர் சொன்ன முந்நூறில் வாசி நிர்ணயம், பூரண காவியம் 340 இல் திரையறுக்க, பரிபூரணம் 1200 இல் சொன்ன சற்குருவின் தியானம், போதரி சுவாமிகள் நூல், கொங்கண சுவாமிகள் கடைக்காண்டம் 500 இல், அகாரம், உகாரம், பெருமை புசுண்டர் வாக்கு, அகத்தியனார் அருளிச் செய்த தீட்கைஷ ஐந்து, சட்டைமுனி சுவாமிகள் பின் ஞானம் 100 இல், பொதிகை நாயனார் கலைக்கியானத்தில், பொதிகை

நாயனார் சவுமிய சாகரத்தில் திரையறிய, மந்திர யோகம், ராசாங்க யோகம், மச்சமுனி நாயனாரருளிச் செய்த தீட்சைவிதி *800* இல் திருமந்திரம் (அகாரம், உகாரத்தின் பெருமை), பரிபூரணம் *1200* இல் சொன்னதில், வாலை தீட்சை பரிபூரணத்தில், புவனை தீட்சை, திரிபுரையின் தீட்சை, பரிபூரணத்தில் சொன்ன சிவசத்தி தீட்சை, பரிபூரணம் *1200* இல் சொன்ன அகார உகாரப் பெருமை, தெட்சிணாமூர்த்தி சுவாமிகள் நூலில் சந்திரன், சூரியன், ஆதாரபூசை, பொதிகை நாயனார் அருளிச் செய்த கலைக்கியானம் *1000* இல் அகாரம், உகாரம் (இத்தலைப்பு மட்டும் ஒன்று முதல் 4 வரை ஏட்டெண்களைப் பெற்றுள் ளது), பொதிகை நாயனாரருளிச் செய்த கலைக் கியானத்தில் நவக்கிரக சாபம், பிரமசாபம், விஷ்ணுசாபம், பஞ்சகண தீட்சை ஞான சவுமிய சாகரத்தில், வசியத்துக்கு, உச்சாடனம், கும்பமுனி *1200*இல் சொன்னது-சிரசிலுள்ள வியாதிக்குத் தயிலம், மாரணம் ஆகிய தலைப்புகள் உள்ளன. பல நூல்களி லுள்ள குறிப்பிட்ட பகுதிகள் மட்டும் தலைப்புடனும், பாடல் எண்ணுடனும் எடுத்துத் தொகுக்கப்பட்டுள்ளன. ஏடுகளுக்கு எண்கள் இல்லை.

## 919. நந்தீசுவரர் சடாதரர் வழக்கம்

**அ. 323:549; ஆ.** *31-45* ஏடுகள்; **இ.** 23 x 3 செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

குருவென வந்து குணமாய் வணங்கித்
திருநீறு சாற்றிச் செவியருள்....
... ...வுடன் வருமெனக் கையினிரா
ஓருவுடன் கொண்டா னுடல்பொரு ளாவியே (1)

முடிவு

கண்டேனென் காட்சி காரணங் கண்டிட
விண்டேனென் சித்தர்க்கு வெளியாய்த் தொழிலெல்லாம்
பண்டேகுளி கைப்பருவ மெல்லாஞ் சொன்னேன்
கொண்டேமுன் னாயிரங் குறித்தவஞ் ஞூறே. (126)

குறிப்புரை

**பாடலும் உரைநடையும் கலந்தது. அந்தாதி நடையில் அமைந்துள்ளது. 1-126 பாடல்கள்.** குருமரபு, குருதத்துவம், ஞானமார்க்கம் சடாதரர் சுத்தி, சுவாதிட்டானம் மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்கினை முதலானவை இடம் பெறுகின்றன.

## 920. நாடிசோதனை

**அ. 333:563; ஆ.** *1-3* ஏடுகள்; **இ.** 25.5 x 2.5 செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; முதல் ஏடு பாதியாக முறிந்துள்ளது; **ஊ.** படிக்கக்கூடிய எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

.... சதாக்கியத்தைச் சத்தியிலுஞ் சத்தியைச் சிவத்திலுஞ் சிவத்தை அசுத்தமாய் இருக்கிற சுத்தமாய் கையிலே யொடுக்கவுஞ் சூக்கும தேகசுத்தி, சத்தமும் பரிசமுஞ் சதுமுகனிடத்திலும் - சம்விஷ்டுணு விடத்திலுங் கெந்தமும் ரூபமும் ருத்திரனிடத்திலும் புத்தியுமாங்காரமும் மயேசு ரனிடத்திலும் மனோவிந்துவைச் சதாசிவனிடத்திலுமாக....

முடிவு

இப்படித் தியானித்துப் பூரகக்கும்பஞ் செய்து ஓம் ஐயுஞ் சளந்தீ கலாய உம்படென்று ரெண்டு தரமுச்சரித்து ரெண்டு குணத்தையும் போக்கி வாயுவைத் தேயுவுக் காகாரமாகப் பாவிக்கவும். ஆகாசத்தைச் சோதிக்க அவ்வுமென்கிற பீசத்தையும் சோனமந்திரத்தையும் அதிதேவதை சதா சிவமுஞ் சாந்தியா தீத கலையுஞ் சூனியவிந்து அடையாளம்.

குறிப்புரை

உரைநடை. மந்திரமோதி அதிதேவதையைப் பூசைசெய்து, பூரகக் கும்பஞ் செய்து, தியானிக்கும் முறைகள் வாயு, தேயு, அப்பு போன்றவற்றைச் சோதிக்கும் செய்திகள் கூறப் பெறுகின்றன.

## 921. நீலகண்டம் பன்னிரெண்டத்தியாயம்

**அ.** ***377:618;*** **ஆ.** *1-51* ஏடுகள்; **இ.** *27* x *4.5* செ.மீ.; **ஈ.** *9-10* வரிகள்; **உ.** கூந்தல் பனை; நன்று; **ஊ.** அழகான, ஓரளவு கடினமான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சாக வில்லை.

### தொடக்கம்

வேக மானெறி சேரும் வினைகளுந்
தாக போகம் விடாத தளர்ச்சியும்
சோக வாரியி னால்வரு துன்பமும்
போக வானை முகத்தனைப் போற்றுவாம்

வேதம் பசுவதன பாலமெய் ஆகமம் அவற்றுள்
ஓதும் தெருப்பாட்டே உள்ளுறுநெய்-நீதியால்
நெய்யிற் சுவையாகும் நீலவெண்ணை நெய்கண்டான்
சைவத்தால் ஆய்ந்த தமிழ்

### முடிவு

நூறு உருவுக்கு ஓர் ஓமம். ஆயிரம் உருவுக்கு ஒரு பிராமணப் போசனம். பச்சைப் பண்டம் நிவேத்தியம். கருமம் ஆறுக்கும் வகை உரு பன்னீராயிரம். தம்பனம் ஆயிரத்தி இருநூறு. ஓமம் நூற்றிருபது. பிராமணப் போசனம் பன்னிரண்டு. குருபாதமே கதி.

### குறிப்புரை

ஆக்ரசனம், தம்பனம், மோகனம் முதலான ஆறுவகைக் கருமங்களையும் அவற்றிற்கான ஜெபமுறைகளையும், பன்னிரண்டு தியானங்களையும் முறையாகக் கூறிச் செல்கிறது. ஒவ்வொரு தியானத்திற்கும் முறையே தியானம், பூதசாதி, கற்பலட்சணம், யோகம், அட்டகர்மம், யாகம், சாந்தியோமம், சுவாமியை ஆராதனை பண்ணு மார்க்கம், புங்க நியாசங்கர நியாசம் முதலானவற்றை முறையாகக் கூறிச் செல்கிறது. மந்திர முறைகளை, தியான முறைகளை மேற்கொண்டு நோய் நீங்குதல், விசம் அகலுதல், எண்ணிய செயல் ஈடேறுதல் முதலானவற்றைச் செய்தல் இயலும்.

என்பதை விளக்குகிறது. அன்பத்தோர் அட்சரம், வாசிசூட்சம், சடாட்சர மாலை ஆறெழுத்து விபரம், சுப்பிரமணியர் சரவணபவ, அகஸ்தியர் சுப்பிரமணியர் பேரில் தோத்திரஞ் செய்த ஆசிரிய விருத்தப் பாடல் பத்து, சண்முகன் தியானம், விபூதி போடத் தியானம், பரிபூரணம், ஞான காவியம்-காப்பு, சுப்பிரமணியருளிச் செய்த அகத்தியமாமுனிக்கு உபதேசம் பண்ணினது, சின்மயா நந்தம் பரிபூரணம் நானூற்றில் சுருக்கம் *116* - தொடுகுறி நூல், சதாசிவன், திருவாய் மொழி முதலான தலைப்புகள் உள்ளன. ஞானம் தொடர்பான சில நூல்களின் தொகுப்பாக இச்சுவடி அமைகின்றது. தொடக்கத்தில் 7 வெற்றேடுகளும், இறுதியில் 6 வெற்றேடுகளும் உள்ளன.

## 922. பட்டினத்தார் கூத்தாடல்

**அ.** ***526:849;*** **ஆ.** *1-2* ஏடுகள்; **இ.** *21* x *3.5* செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** இரண்டாம் ஏட்டின் இடது பக்க ஓரப்பகுதி சிதைந்துள்ளது; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சந்தேக மில்லாத தங்கம் - இதைச்
சார்ந்து கொண்டால் வெகுபொங்கம்
பாதத்தி னாலொரு கப்பல்செய் தேனே
பாழிலே தள்ளி உடைத்துப்போட்டேனே
நேர மணிவிளக்கேத்திக் கொண்டேனே
நித்திரை யாக முழித்துக்கொண்டேனே

முடிவு

விளக்கு மாறென்னும் பேரும்பெத் தேனே
வேதாந்தக் குப்பையை விளக்கிவிட்டேனே
கிழக்கு வெளுக்க முழித்துக்கொண் டேனே
கிருபைக் கடலைக் கடந்துவிட் டேனே (சந்தே.5)

குறிப்புரை

**1-10 பாடல்கள்.** *11* ஆம் பாடலில் இரண்டு அடிகளே உள்ளன. ஆறாம் பாடல் முதல் சிறு சிதைவு இடப்பக்கம்

இருப்பதால் 5ஆம் பாடல் இறுதிப் பாடலாகத் தரப்பட்டுள்ளது. உயிர்களுக்கு வேதாந்த ஞான மார்க்கத்தைப் பட்டினத்தார் கூறுவதாக அமையும் இந்நூல் அனைத்துப் பற்றையும் விளக்கி, இறைப் பாதங்களைப் பற்றி அவனது கிருபையை அடைய வேண்டும் என்பதை உணர்த்துகிறது.

## 923. பட்டினத்தார் பாடல்

**அ.** 519:802; **ஆ.** *1-3* ஏடுகள்; **இ.** 15.3 x 4 செ.மீ.; **ஈ.** *10-11* வரிகள்; **உ.** நன்று; முதல் ஏட்டின் முதல் வரியில் சிறு சிதைவு; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

திருவேட மாகுந் தெருவில் பயந்தென்னைத் தேடிவந்து
பரிவாகப் பிச்சைப் பகரு மென்னுரை பதம்பணிந்து
கருவாக மாதம் கடிகரைக்கே சென்று கருத்துமென்றார்
உருவாகருக் கொள்ளவன்றோ சிவனிங் கனேவந்
துதித்ததுவே (1)

முடிவு

நான்அந்தக் கோன்பர மானந்தக் கோனுரே
ஆகுஞ்சு கால்ரெண்டு ஆய னொன்று
அடைதொழு வாசல் ஒன்ப துண்டு
கூடு விட்டு உயிரேகும் போது
குருபத்திக் கோனாரைக் காண லாமே

குறிப்புரை

***1-8* பாடல்கள்** எண்களுடன் உள்ளன. அதன்பின்னுள்ள ஒருசில பாடல்களுக்கு எண்கள் இல்லை. சித்தர் தத்துவத்தை அடியொற்றி ஆழமான தத்துவக் கருத்துகளை உள்ளடக்கி மனித மனம் எப்படி இயங்க வேண்டும் என்பதைக் கூறுவதாக அமைகின்றது.

## 924. பல பாடல்கள்

**அ.** 519:801; **ஆ.** *1-2* ஏடுகள்; **இ.** *15.5* X *4* செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** மிகக் கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

கைவிரல் ஐந்து தன்னைக் கயி ....
நையணி முழங்கை தொட்டு நெடுவிரல் அளவ தாகும்
மையணி யனைய கண்ணாய் மன்னரி லொருவ னாகும்
அவ்வரை யொன்று தாழில் அரசருக் கமைச்ச னாவான்
நடுவிரல் நடுவரை நண்ணில் வாழ்வதாம்
அடியிரை அளவ தாகில் அருங்கவி உடைய னாவன்

### முடிவு

மலடி மகன் மூளிக்காதினில் கிடந்த வளைந்தபணியை
கையில்லான் வளைந்து பறித்தோட
பலவகையும் தெரியாத அந்தகன் கண்டு
பாங்குடன் செகுட ரூமைக் குரைக்க
அவனுந் தானாம் நலமுடைய
யிருகான மயிலதுக் குரைக்க
நாடிஅவன் ஓடிப்போய் பறித்ததுவும் மெய்யானால்
உலகுதனில் நடந்ததெல்லாம் மெய்யெனவே ஆகும்
உரைக்கடங்காப் பரதப் பொருளை யெடுத்துரைப்பார்
வீணர்

### குறிப்புரை

சாமுத்திரிகா இலட்சணத்தில் கூறப்படுவது போல் கைகளின் அளவைக் கொண்டு அவனது வாழ்க்கை எப்படி இருக்கும் என்பது கூறப்படுகின்றது. 'திருமூலமந்திரம் என்ற தலைப்பில்' இருபாடல்கள் உள்ளன. உலக வாழ்க்கை மாயை, இறையை உய்த்துணர்வது அரிது என்பன போன்ற தத்துவக் கருத்துகளும் சொல்லப்பட்டுள்ளன. நூல் முடிந்தபின் பின்வரும் குறிப்பு உள்ளது.

சித்திரைக்குப் பூச முதல் சீர்ஆவ ணிக்கு அனுஷம்முதல்
அத்தனுக்கு உத்திரட் டாதிமுதல் யெதுஉச்ச மானாலும்
ரெண்டே காலில் பெருக்கு மாசம் அஞ்சாக மாறும்.

## 925. பிரமதர்க்க நிச்சயம்

**அ. 232:446; ஆ.** *76-81* ஏடுகள்; **இ.** 23.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; ஆங்காங்கே சில துளைகள்; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரிய வில்லை.

தொடக்கம்

குரைகழற் தண்டைத் தூடகு காக்கு முன்னேவராய்
வரமுளத் தெண்ணுவர்க் கருளும் மாழுகக்
கரமுட னைங்கரக் கணபதி தாளுனங்
கருதிடு மடியர்தங் கழல்கள் போற்றுவாம்
அரிபிரமறு முன்மடிமுடி காண்க வன்றெரி
பேரொளித் தேசத் தாகு மவ்வொரு
பெருஞ்சோ தியை யுளத்தில் வைத்துயர்
திரிபுர வுமை சுழற்சிறதை செய்துவாம் (1)

முடிவு

உருவாய் வன்மைய மாதி பஞ்சகோசமொன்
  றென்றாய் நீங்கியதை யுணரறிவுதானாய்
இருவாதனை நீங்கி சகலசெல்வமு மிராப்
  பகலிலாத நிட்டையினி லிராதி ருந்தே
பொருவிலா நிர்திசை யானந்த மேவும்
  புண்ணிய ரெச்சமைய சாதிகளி லேனு
நிருபாதிகப் பிரம வாருதியின் முழுகு
  நிலமையரே.... திரிகள் சொன்னசு லோகம் (22)

குறிப்புரை

காப்புப் பாடல் தவிர்த்து **22 தத்துவப் பாடல்களை யுடைய** இந்நூல் ஞானமார்க்கத்தை அடைவதற்கான வழிமுறை களைக் கூறுகிறது.

## 926. பிரமரிசி பாடல் 16 முதலியன

**அ. 156:337; ஆ.** *1-21* ஏடுகள்; **இ.** 22 x 3 செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** சுமாரான நிலை; இடையிடையே ஏடுகள் இல்லை; **ஊ.** தெளிவான அழகிய எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

ஆனந்த நிராமய மான சோதி
அகண்டபரா பரத்தினுட பாதம் போற்றி
தானந்த மாய்விளங்கு முமையாள் பாதம்
தன்னுயிரைத் தானென்று அறிய வேண்டி
வானந்தப் பொழிகயுகிர் அமுர்த முண்டு
வல்லபையுங் கணபதியும் வணங்கிப் போற்றி
கோனந்த மாய்வளரும் புசுண்டர் பாதம்
கும்பிட்டுப் பதினாறைக் கூறு வேனே (1)

முடிவு

பாரப்பா இம்மெ:ன்று மவுனம் பாரு
பலகால மணுநேரம் விட்டி டாமல்
ஆரப்பா பூரணத்தில் சொக்கி னாக்கால்
ஆகாச மென்றபர பிரம்மம் காட்டும்
நேரப்பா இந்நூலி னுள்ளே தானும்
நிலவரமாய் மூலமெல்லாம் சொல்லி விட்டோம்
சேரப்பா பதினாறு முகிந்த போது
திடமான பூரணமாம் கதிதான் முற்றே (16)

குறிப்புரை

1-16 பாடல்கள். தியானம், ஞானம் பற்றிக் கூறுகின்றது. இதனையடுத்து அகத்தியர் அருளிச் செய்த ஒரு பாடல் (ஏடு.*6*) இடம் பெறுகின்றது. தட்சிணாமூர்த்தி தோத்திரம் எனும் நூலில் (ஏடு.*7*) மூன்று பாடல்கள் முழுமையாகவும், நான்காம் பாடல் குறையாகவும் உள்ளன. **இராம தேவர் பாடல்** எனும் நூலில் (ஏடு.*11-13*) முதல் எட்டுப் பாடல்கள் முழுமையாகவும், *9*ஆவது பாடல் குறையாகவும் உள்ளன. *13* ஆவது ஏடு முறிந்துள்ளது; **தட்சிணாமூர்த்தி சுருக்கம்**

ஐந்து எனும் நூலில் (ஏடு.15) நான்கு பாடல்கள் முழுமையாகவும், ஐந்தாவது பாடல் குறையாகவும் உள்ளன. ஏட்டின் இறுதி ஓரப்பகுதி முறிந்துள்ளது; **தட்சிணாமூர்த்தி எட்டு** எனும் நூலில் (ஏடு. 16-17) எட்டுப் பாடல்கள் உள்ளன. 16 ஆவது ஏடு பாதியாக முறிந்துள்ளது. **கருவூரார் பூசாவிதி முப்பது** என்ற நூலின் ஏட்டின் இடதுபக்க ஓரப்பகுதி முறிந்துள்ளதால் ஏட்டு எண்ணை அறிய இயலவில்லை; மூன்று பாடல்கள் முழுமையாகவும், நான்காவது பாடல் குறையாகவும் உள்ளன.

## 927. போகர் புவன கேசரம் 210

**அ.** 486:738; **ஆ.** 1-55 ஏடுகள்; **இ.** 23 X 2.5 செ.மீ.; **ஈ.** 7,8 வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

பேர்பெருகும் புவனகே சரத்தைப் பாட
பூவுலகில் மாணாக்கர் புகழ்ந்து வாழுஞ்
சீர்பெருகு மண்டரண்ட தத்துவமும் பிரித்து
சின்மயத்தி னருளாலே செப்ப வேண்டி (1)

திருமூல தேவருக்கு நந்தி சொல்ல
திகம்பரமா மூலகுரு யெந்தைக்குச் சொல்ல
தருங்காலங் காலாங்கி எனக்குச் சொல்ல
சம்பிரம மாகவுந்தான் தாழ்ந்து கேளு
குருமூலங் கடிகைக்கு நொடியே சொல்வேன்
காணமுன்னூத் தறுபதெனக் கற்றும் வேதம்
பருமூலங் கடிகையே ழரைதான் சென்றால்
படுசாம மொன்றாகும் பாரு பாரே (3)

முடிவு

ஒன்றாகக் காண்பதுவே காட்சி யாகும்
உத்தமனே மற்றதெல்லாம் பரம ஞானம்
நன்றாக நவகண்டப் பிண்டந் தன்னை
நயமாகக் குளிகையிட்டு யேறிப் பாரு

குன்றாகு மகாமேரு மனைத்து மொன்றாய்
கூண்டிருந்து பருசாலே குறுக்கேது மில்லை
மன்றாகுங் கோசரங்கள் தத்துவங்கள் மத்த
துடையோர் பொருட்டாலே வாழி மூன்றே (210)

போகநாதர் புவனகேசரம் முத்தும்

குறிப்புரை: போகநாதர் திருவாய் மலர்ந்தருளிய புவனகேசரம்-210

யோகத்தின் ஆறு ஆதாரத் தானங்கள், இடகலை, பிங்கலை, சுழிமுனை, பிரணாயாமம், மும்மல நீக்கம், மோட்சம், இறையருள், மக்கள் மகிழ்வு, பொலிவு, முத்தி, மந்திரம், சக்கரம், பூசை மகத்துவம், தீர்த்தம், சதாசிவம், சஞ்சீவி, சிவயோகம், அண்ட பிண்டம், வாயுபத்து, பஞ்ச யிந்திரியம் முதலான செய்திகள் விரிவாக இடம்பெறு கின்றன.

## 928. பௌரணைப் பூசை சோடசப் பதிகம்

**அ. *576 : 934*; ஆ.** *1-5* ஏடுகள்; **இ.** *22* x *3.5* செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; இறுதி ஏட்டில் சில துளைகள் உள்ளன; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

அமாவாசி தானான ரூபத் தாயே
அகண்டபரி பூரணியே அமல சத்தி
நம்மாலே பாட்றியேன் எனது நாவி
லமர்ந்தருள் செய்வாய் நாயே னுக்குத்
தம்மாலே சோடச சாஸ்திர மாள்
தயவுசெய்து நின்பத்தில் தரிப்பாய் தாயே
சும்மாநீ இருக்காமல் கண்பா ரம்மா
சோதியே மனோன்மணியே சுழுனை வாழ்வே (1)

முடிவு

திரியோதசி யாயிருந்த மையம்
சேர்ந்தவர ஆதாரந் தன்னி லேறி
குறிப்பறிந்து ஆக்கினையைக் கடந்து மேவி
குருபதத்தில் குருவாக வழக்கு மன்னை

அறிவை அறிவா லைகிரி ஐந்தும்
அறிவொடுக்கம் ய... உரைப்பார் யான்பக்கதில்
துறவியே மனமிருக்கத் துணையே அம்மா
சோதியே மனோன்மணியே சுழுனை வாழ்வே (14)

குறிப்புரை

**1-15 எண்சீர் விருத்தப் பாக்கள்**. *15–ஆம் பாடல் குறைப்பாடல். அமாவாசி, பிரதமை, துதிகை, திருதிகை, சதுர்த்தி, பஞ்சமி, சஷ்டி, சப்தமி, அட்டமி, நவமி, தசமி, ஏகாதசி, துவாதசி, திரயோதசி, சதுர்த்தசி ஆகிய திதிகளின் பூசைச் சிறப்பும், அத்திதிகளில் அம்மனது அருட்சிறப்பும் விளக்கம் பெறுகின்றன.*

## 929. மச்சேந்திரர் நூலில் ஞானக் கலிப்பா

**அ. 207:415; ஆ.** *1-10 ஏடுகள்;* **இ.** 13.5 x 2 செ.மீ.; **ஈ.** *7-8 வரிகள்;* **உ.** *நன்று;* **ஊ.** *கடினம்;* **எ.** *முழுமை;* **ஏ.** *அச்சாகவில்லை.*

தொடக்கம்

தெட்டுக் கொண்டசடத் துக்குள்ளா ரென்று
நின்ற வன்னி ரவிசோமனென் றல்லோ
கட்டுக் கொண்டிட வாயுவைப்பூ ரித்துக்
கலங்கி நின்றுத விப்பாருல கத்தோர்
பட்டுப் பட்டுத் திரிந்தாலும் மேம்படா
பார்க்கப் பார்க்க மனமானமாய் கையார்
தெட்டுப் பண்ணி மயக்குந்தி ரோதகை
செகத்துக் காலயஞ் சிந்தையிற் கண்டிடே (1)

முடிவு

இல்லை இல்லை யிறப்பும்பிறப் புந்தான்
எதனா லிப்படி யாச்சுதுயென் றாக்கால்
அல்ல யென்றதி ரோதாயமா யத்தை
யகத்தி னின்று அதீதமவு னத்தின்
எல்லை கண்டு யிருந்திடங் கேசரி
எளிய வார்த்தைதான் யேத்தங்கடி னங்காண்

தில்லை யேயென்ற பதிதாண்டி நின்றது
சென்ற பேர்க்குய ரப்பாத்துநின் றாரே (20)

இரண்டாம் காண்டம் முற்றிற்று

குறிப்புரை

1-20 பாடல்கள். முத்திவாசலை அடைப்பனவற்றை விலக்குதல் வேண்டு மென்பதையும், பெண்மயம் என்னும் பொருளை விலக்கி மோட்ச ஞானம் பெறுதல் வேண்டும் என்பதையும், அதற்கான வழிகள் யாவை என்பதையும் விளக்குகிறது. மச்சேந்திரர் நூலிலிருந்து தொகுத்து எடுக்கப் பெற்றது. நூல் முடிந்தபின் நாதசெயநீரின் செய்முறை கூறப்பெறுகிறது.

## 930. மாணிக்கவாசகர் சதுர்கோணமாலை

**அ. தாள். 7:1; ஆ.** *36-39* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

உத்தவம் பெருந்துறை நாடெனும் தேசம்
உள்புகுந்து சங்குநதி தீர்த்த மாடி
நித்தவரை நாடணுகி வைகுந்த மேவி
நெடியோனே படிவணங்கி நெனவி னாலே
கீர்த்தனையும் அந்திசந்தி வச்சி மூன்று
காலமும் நீறுபூசித்துக் கவலை தீர
பெத்தனையே நெஞ்சகமே யிந்தப் பேரு
பெற்றவர்க்குப் பிறவி உண்டென லாமோ (1)

முடிவு

தேடறிய திருமேனி அயனும் மாலும்
தேடி யறியப்பழம் பொருளே நீயும்
தேடிய காலாடிய பொற்சிவந்த பாதம்
தெரிசித்துச் சதுர்கோண மாலை பத்தும்
பாடிவிட நெஞ்சகமே இந்தப் பத்தும்
படிப்பவர்கள் பழவினைகள் எல்லாம் ஒழிந்து
பாடியிட ஜெயவாக்குப் பெருவ ரின்னூல்
பயனருகில் மெஞ்ஞானத் தலைவர் ஆமே (11)

முற்றும்

குறிப்புரை: மாணிக்கவாசகர் அருளிச்செய்த சதுர்கோணமாலை

**1-11 பாடல்கள்**. இறையை வணங்கிப் பிறவியிலிருந்து விடுபட்டு முத்தி அடையும் வழியினையும் வேதாந்தக் கருத்துகளையும் கூறுவதாக முதல் பத்துப் பாடல்கள் அமைய, இறுதிப் பாடல் நூற்பயனைக் கூறுகின்றது.

## 931. மாணிக்கவாசகர் ஞானம்

**அ.** 334:556; **ஆ.** *91-94* ஏடுகள்; **இ.** 37 x 2.5 செ.மீ.; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

சுழியாகிய முனைகண்டபின் னுத்தாருற வத்தாயி
சூதம்பல பொய்பேசிய தொழிலும்பிற கட்டாயி
வழியாகிய துறைகண்டபின் அனுஷ்டானமு மற்றாய்
வளமும்பல நூல்கத்தபின் நினவுமறந் திட்டாய்
விழியாகிய மலர்கண்டபின் உயிர்தனை யத்தாய்
மெய்நீரரிடம் திருமந்திரம் விட்டாய்சிவ முத்தாய்
அழியாப்பதி கூடியபின் அனுஷ்டானமு மத்தாய்
யாரோமுவ ரினையத்தனே அலைவுத்தேனே
மனமே (1)

முடிவு

உருவானது விந்துசெயல் அருவானது நாதம்
உடலுக்குயிர் உயிரானது மங்குள்ள முதலுக்
குருவானது முனைமீதினில் அணுவாகிய வெளியில்
குடியாகிய பதிகண்டபின் னருளாதவ ஊரான்
ஒருவாசகன் அரிவாசகன் புவிமீதினில் மகிழ்ந்தே
உரைசெய்தனர் தமிழ்த்தாழிசை நெறியின்படி
நின்றோர்
கருவாசலை அணுகாமலே பிரிவார்நெறி பெறுவார்
கடவுள்செய லறியாதவர்க்கு வாசலில் பதிவார் (11)

மாணிக்கவாசகர் ஞானம் முற்றும்.

குறிப்புரை: மாணிக்க வாசகரருளிச் செய்த ஞானம்-தாழிசை

***1-11 பாடல்கள்***. இந்நூல் அடுத்துவரும் *1:6* என்ற எண்ணுடைய தாள்சுவடி நூலினைப் போன்றதே. ஆயினும் ஒரே நூல் இரண்டு இடங்களில் இடம்பெறும்போது எவ்வளவு மாற்றங்களைப் பெறுகின்றது என்பதற்குச் சான்றாக இந்நூல் இங்கு எடுத்துக் காட்டப் பெறுகின்றது. தாள் சுவடியில் இதிலுள்ள *10* ஆம் பாடல் இல்லை. இரண்டு நூல்களிலும் பாட வேறுபாடுகள் மிகுதியாக உள்ளன. பாடல்களின் எண்களிலும் மாறுபாடுகள் கீழ்கண்டவாறு உள்ளன.

| சுவடி நூல் | தாள் சுவடி | சுவடி நூல் | தாள் சுவடி |
|---|---|---|---|
| *1* | *1* | *2* | *3* |
| *3* | *4* | *4* | *9* |
| *5* | *6* | *6* | *7* |
| *7* | *3* | *8* | *8* |
| *9* | *2* | *10* | *3* |

பாடல்கள் முறைமாறி இடம் பெற்றிருப்பினும் பொருளை அறிந்து கொள்வதில் இடையூறு இல்லாததால் பொருள் தொடர்ச்சி என்றில்லாமல் ஞானத்தை அறிவுறுத்தும் வகையில் நூல் அமைகிறது என்பது தெரிகிறது.

## 932. மாணிக்கவாசகர் ஞானம்

**அ. தாள். 1:6; ஆ.** *33-35* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

சுழியாகிய முனைகண்டபின் உற்றார் உறவற்றாய்
சூதும்பல பொய்பேசிய தொழிலும்பிறர்க் கிட்டாய்
வழியாகிய துறைகண்டபின் அனுஷ்டானமு மற்றாய்
வழங்கும்பல நூல்சாத்திரம் நினைவும்பிறழ்ந் திட்டாய்
விழியாகிய மலர்கண்டபின் உபரட்சணை யற்றாய்
பொய்நீரிடு திருநீரிடு திருமந்தரம் விட்டாய் சிவ பூசை

அழியாப்பதி குடியேறியபின் அச்சரமும் அற்றாய்
அகலாப்பவ ரினைப் பெற்றனை அறிவொற்றிரு
மனமே (1)

முடிவு

உருவானது விந்தின்செயல் பொருளானது நாதம்
உடலுக்குள் அயராரினி ஒருநான்குள் முதலும்
உருவாகிய முலைமீதினில் நாவாகிய வெளியில்
குடியாகிய முதல்கண்டரை திருவாதவூ றாளி
ஒருவாசகன் அரிவாசகன் புவிமீதினில் மகிழ்ந்தே
உரைசெய்தனன் தமிழ்த்தாழிசை நெறியின்அடி
நின்றோர்க்கு
கருவாசலின் அணுகாமலே பிறவாநெறி பெருவார்
கடவுள்செய லறியாதவர் கருவாசலில் புகுவார்
மனமே (10)

*மாணிக்கவாசகர் சுவாமிகள் அருளிச்செய்த ஞானத் தாழிசை முற்றிற்று.*

குறிப்புரை: மாணிக்கவாசகர் ஞானத்தாழிசை

யோகத்தின் வழி ஞானத்தை அடையும் வழிமுறைகளான, குரு பத்தி, முத்தி முதலானவை **பத்துப் பாடல்களில்** கூறப்பெறுகின்றன.

## 393. மூலாதாரத் திருமந்திரம்

**அ. தாள். 1:10; ஆ.** 51-55 பக்கங்கள்; **இ.** குறை; **ஈ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

அவ்வு உவ்வு மவ்வு சிவயநம
மாமலர் நாலையும் வட்டத்தின் மேலிடும்
மாமலர் நாலிலும் வவ்வாதி உவ்விடு
மாமலர் நாவிலே வட்டத்தி னுள்ளே
ஓமென வினாயகன் உலாவி நின்றாரே (1)

முடிவு

சோதிபஞ்ச தீசாஷ்ச்சரியரு யெழுத்து வண்டம் மூன்று. பதினெட்டுக் கரமாக நினைக்கவும். ஆதாரம் அக்கினி மண்டலம். பரம் அகாரம் சி-பரபை அவன் ஆண் மூலம், இடகலை. நிராதாரம் - ஆதித்தன் மண்டலம். நாதம் உகாரம் - வ - சந்தி அவள் பெண் இருதயம் பிங்கலை - மிதானம் - சந்திரமண்டலம், விந்து மகாரம் பத்து மகிமை அதி அலி புருவம் சுழுமுனை.

குறிப்புரை: திருநந்தி தேவர் திருமூலதேவருக்கு உபதேசம் பண்ணின மூலாதாரத் திருமந்திரம்

**1-24 பாடல்கள்**. இதனைத் தொடர்ந்து உரைநடையில் ஒருசிறு பகுதி அமைகின்றது. நூலில் அண்டத்திற்கும், பிண்டத் திற்கும் உள்ள தொடர்பு இறைத் தத்துவத்தோடு விளக்கம் பெறுகிறது.

## 934. ரோமரிசி சூத்திரம் 16

**அ. 516:797; ஆ.** *1-3* ஏடுகள்; **இ.** 30 x 3.5 செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** மிகக் கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

மூலாதா ரப்பொருளே மூர்த்தி காப்பு
முப்பாலும் பாலான முதலே காப்பு
மேலாதா ரத்தில்வளர் ஆயிபாதம் வேண்டி
கொண்டநா னூறும்வெளி யாய்ச்சொன்னேன்
இயலாமல் புதைத்தாரே அந்த நூலை
ரெண்டான அன்பதுக்குளி சைந்து சொன்னேன்
பாழான நூலினிலே சிங்கிவித்தை பாடினேன்
வயித்தியமும் வாதந் தானே (1)

முடிவு

மணிபூரம் வீரமல்லோ சார காரம்
மன்னவனும் தேவியுமாய் மகிழ்ந்த வீடு

கெணியா ரோசர மறிந்தபெரியோ ரையா
கிணேசனுட பட்டணத்தில் கேடிமே லையா
பணியாரமோ உனக்குச் சிலுசி லுப்போ
பசிமறந்தால் பலனவர்க்கும் பலித்தி டாதோ
வணிகரல்லோ திருசுழினை கண்டாப் போல
மக்களே பதினாறு வன்னி முற்றே (16)

குறிப்புரை: ரோமரிஷி சூஸ்த்திரம் பதினாறு

1-16 பாடல்கள். தர்மத்தைக் கடைப்பிடித்த ஞானிகளுக்குச் சாத்திரமும், சூத்திரமும் தானாகவே வந்தடையும் என்பதும், பூரணம், தீட்சை, சுழுமுனை, வாசியோக மார்க்கம், பிராணாயாமம், முப்பு, காயசித்தி முதலானதும் நூலில் கூறப்படுகின்றன.

## 935. வயிரவன் தியானம் முதலியன

**அ.** **323:550;** **ஆ.** *1-5* ஏடுகள்; **இ.** 23 x 3 செ.மீ.; **ஈ.** 7 வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

உலகெங்கு முனதருள் கிரணமிடு வடிவழு மூர்க்கங் கனகபணமும்
உமிழ்மணியு முடைமணி கிணின்கிணி யெனவோசையு
முயர்கருணை பொழிவதனமும்
இலகுசூ லப்படையு மரைதம் கெப்பரையு யெட்டியெறி லெம்பாசமும்
இரக்குங் கபாலமுஞ் சேர்க்குங் கரங்களு மிமையாத
நயனங்களும்
நிலவைவிடு யிளநகையும் வடவையனல் முனையென நெறித்தகுஞ்
சிச்சடையும்
வெண்ணீற்றி னொளியுங் கரியக்கஞ் சுகமுமணிகண்ட நீலமும்
நிருவாணமு
கலகலென வருமுபைய விருதுபரி புரமுமொளிர் கழலினையு
மனத்தில் மறவேன்
காசியெனு மொருவார னாசிநக ரானந்த காலவயி ரவநாதனே (1)

முடிவு

பகவிஷ்வினுடன் யான்முழுகு தீர்த்தமெல் லாமுனது
பண்புதரு கங்கையென்பேன்
பகரவரு முத்தலத் தெத்தலகு முத்தனின்
பத்தர்பணி காசியென்பேன்
குருலிங்க சங்கமத் தும்பூசை நின்பதங்
கும்பிடுத லென்றுரைப்பேன் (10)

குறிப்புரை

**1-9 பாடல்கள் முழுமையாக உள்ளன.** *10* ஆவது பாடல் குறையாக உள்ளது. காசி வடுகநாதக் கடவுளைக் கும்பிடு வதும், பூசை செய்வதும், எத்தகைய பேரின்பத்தைத் தரக்கூடும் என்பதை உணர்த்துமுகத்தான் அக் கடவுளை வாழ்த்துவதாகப் பாடல்கள் அமைந்துள்ளன. இதனை யடுத்துள்ள ஆறாவது ஏட்டில் **வயிரவ தோத்திரம்** தொடங்கு கிறது. ஓர் ஏடு மட்டுமே உள்ளது.

## 936. வயிராக தீபம்

**அ. 147:325; ஆ.** *41-104* ஏடுகள்; **இ.** 33 x 3 செ.மீ.; **ஈ.** 7 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

துன்னியா ணவப்பாம் போ... வெனுமோர்
சுடர்கெழு பூரண மதியை
முன்னமே தீண்டிற் றொளிவெளிப் படலான்
மோசன காலமெய் தியதாற்
நன்னிடத் தீசன் முதற்புவி முடிவெண்
டருநுரை யாதிவந் தொடுங்கப்
பின்னைய பினையாந் திரைகள்வீ சிடுமோர்
பிரமவே லையினிற் படிவாம் (1)

முடிவு

ஒருவனுக் கிருனற் றுரியசிற் சொரூப
முள்ளவா விளங்கினற் றுன்பப்
பருவர லுருவப் பற்றுமற் றதுநேர்
படுமள விறைபுரி தருமைங்
கருமமெவ் விடத்துங் கண்டுதற் செயலைக்
கைவிடுத் தச்சமா தியவுண்
பருவுறா தகற்றித் தவஞ்செய் வழக்கால்
வாழியெங் குரவநீ டூழி (100)

குறிப்புரை

**1-100 பாடல்கள் விரிவான உரை.** 'ஐந்து கரத்தனை யானை முகத்தனை' எனும் காப்புப் பாடலை உடையது. எப் பொருள், அருந்திய காலத்து, அரையன், கற்பழமாக துணையில், கயல்விழி, தோன்றி நின்றழிய, இளமையிற் பிணியற, பிறபிறப்புடையார், திருந்து, ஞானி, அஞ்ஞானம், யோகம், அரம்பை, படை, தந்தை, தனக்கு, தம்மிட, பெண், அறிவு, எங்குள, சிறந்த கற்புடை மாதர், இத்தரை, ஒருவனுக்கு முதலான உட்தலைப்புகள் அமைந்து அவை பாடல்களின் தொடக்கச் சொற்களாவும் அமைகின்றன.

## 937. வான்மீகர் சூத்திரம் 16

**அ. 516:794; ஆ.** *1-3* ஏடுகள்; **இ.** 30 x 3.5 செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சற்றுக் கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. வான்மீகர் சூத்திர ஞானம் *16 (1898)* என்ற நூல் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

இருள்வெளியாய் நின்றசிவன் பாதம் போற்றி
எழுத்தினுட விபரத்தை விரித்துச் சொல்வேன்
அருவுருவா நின்றதுவே எழுத்த தாகும்
ஆதியந்தம் அண்டபிண்ட மதுவே யாகும்
திருவுருவாய் ரவிமதியாய் நின்ற ரூபம்
சிவசத்தி திருமாலின் ரூப மாகும்
வருமுருவே சிவசத்தி வடிவ தாகும்
வந்ததிலும் போனதிலும் மனத்தை வைய்யே (1)

முடிவு

தானவனாய் இருக்கவென்றால் வாசி வேணும்
　　தனக்குள் தாநின்ற யிடமும் வேணும்
வானவனாய் நின்றவர்க்கு யெல்லாஞ் சித்தி
　　வானுக்குள் மதியிருக்க மதிபோல் காணும்
தேனவனாய் சிற்றருக்குத் திகட்டா மூலி
　　சிரசப்பா உடலுக்குப் பதியே யாகும்
கோணவனா யிருக்கவென்று குறுக்கிச் சொன்னேன்
　　குவலை யத்தில் பதினாறு குருதான் முற்றே (17)

சற்குரு பாதந் துணை

குறிப்புரை: வால்மீகர் பதினாறு சூஸ்த்திரம்

**1-17 பாடல்கள்**. எழுத்தின் விபரம், பூரகம், சரிதை மார்க்கம், கிரிகை மார்க்கம், யோக மார்க்கம், ஞானமார்க்கம், சிவபூசை தீட்சை முதலானவை உள்ளன. சரியை என்கிற தொண்டு, கிரியை என்கிற வழிபாடு, யோகம் என்கிற பயிற்சி; ஞானம் என்கிற மன ஒடுக்கம் முதலியன விளக்கம் பெறுகின்றன.

# 12. பூசைமுறை

## 938. அகத்தியர் பூசாவிதி

**அ.** 364:603; **ஆ.** *1-45* ஏடுகள்; **இ.** 26.5 x 3 செ.மீ; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** ஓரளவு சிதைவு: **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஆதார மாறும் அகண்ட குருபாதம்
வேதா கமத்தின் விதிமார்க்கம் - நாதமுறும்
விந்துவே மூலம் விளங்குபூசா விதியார்
தந்திமுகத் தோன்கருணை தான்

காரணமாஞ் சிவயோகி சித்தர் பூசை
களங்கமறச் சொல்லுகிறேன் நன்றாய்க் கேளு
பூரணமாம் ஞானமல்லோ மௌன வாழ்க்கை
புகழான அஷ்டாங்க நடன மாடும்
சீரணமாய்ப் போகாமல் பூசை மார்க்கம்
செப்புகிறேன் மனந்தெளிந்த சித்தர்க் கய்யா
வாரணமா முகத்தோனை முதலே பூசை
மற்றதொரு பூசையெல்லாம் பிறகு தானே (1)

முடிவு

ஒன்றான மனதருமைச் சீஷ னுக்கு
உரைசொல்லி(ப்) பூசாவிதி உரைக்கச் சொல்லு
விண்ணாட்டங் கண்ணாடி மேவச் சொல்லு
மேலான மௌனத்தைப் பத்தச் சொல்லு
சுண்ணாம்பும் மஞ்சளும்போல் குறியைக் காட்டி
சுழுமுனையிலே நாட்டமுறத் தொட்டுக் காட்டிக்
கண்ணாடிக் குள்குருவின் பதத்தைப் போற்றி
கருணைபெறும் பூசைவிதி கருவாம் முத்தே (200)

பிற்குறிப்பு

விசய வருஷம் ஆனி மாதம் 24-ஆம் தேதி சுக்கிர வாரம் சபாபதி பூசாவிதி எழுதி நிறைவேறினது. முற்றும்.

குறிப்புரை

**1-200 எண்சீர் விருத்தப்பாக்கள்** (காப்புப் பாடல் தவிர்த்து). சக்கரபூசாவிதி, தம்பனம், மாரணம், அஷ்டசித்தி, உச்சாடனம், வசியம், அணைப்பு, பேதனம், கணபதி மந்திரம், பூசை, பிரம்மதேவன் மந்திர பூசை, விஷ்ணுதேவர் மந்திரம், சத்திபூசை, 4 வகை சிவதீட்சை, சத்தி தீட்சை, சண்முக தியானம், மவுனம், அஷ்டமாசித்தி, ஆறு ஆதாரம், சிவயோகம், பூரணம், அமுர்தம், வாசி, குண்டலினி, பஞ்சாக்கரம், மஹேஸ்வர தேவர் பூசை, சதாசிவத்தின் பூசை, சூரியபூசை, சந்திரன் பூசை, குருமூர்த்தி பூசை, சீஷர் பக்குவம், முத்திரை வகை, அங்கன்னியாசம், சத்தி பூசை முத்திரை, ஆன்மசுத்தி, பூசை செய்யும் முறைகள், ஓமகுண்டம், சீஷனுக்குக் குரு மவுனம் சொல்ல, பாஷாண வாலை இரசபற்பம், இராசலிங்க பூசை, சண்டாள சீஷன் வகை, சரியை கிரியைக்குச் சொர்க்கம் முதலானவை.

ச. 19.a; ச. 288.D; ச. 352.b என்ற எண்களையுடைய நூல்கள் இது போன்றவையே. ச. 352.b யில் காப்புச் செய்யுளையும், சேர்த்து 200 பாடல்கள்.

## 939. சிவபூசை அட்டவணை வைத்தியம்

**அ. 333:562; ஆ.** *1-6* ஏடுகள்; **இ.** 25.5 x 2.5 செ.மீ; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** படிக்கக்கூடிய எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

தானஞ் செய்து அனுஷ்டானம் முடித்துப் பூசைமண்டபத்திற்கு வருகிறபோது அத்திரமானக் கூட்டுக்குள்ளே வருகிறதாகப் பாவித்துக் கொண்டுவந்து, பூசை மண்டபத்தைச் சுத்தவித்தை மயமாகப் பாவித்துக் கொண்டு, பூசை உபகரணங்களைக் கொண்டுவந்து வைத்துத்

திருமஞ்சனப் பானையை அத்திரத்தால் வெள்ளையிட்டுக் கவசத்தால் அலம்பி, சுத்தி செய்து, கவசத்தால் வாய்கட்டிப் பிரமாங்கத்தால் வடித்துத் திருமஞ்சன மெடுத்துப் பூசைத் தானத்தை அத்திரத்தால்.... கவசத்தால் மெழுகிக் கோடிட்டு, இருதயத்தால் பத்துத் திக்கும் பத்திரங் கிள்ளி வைத்து வட்டகைச் செம்பு அத்திரத்தால் வெள்ளையிட்டுக் கவசத்தால் அலம்பி வைத்துச் சந்தன புஷ்பம் பூசைக்கு வேண்டும் (ஏடு. *1*).

முடிவு

ஆத்மனே நமாவென்று சந்திரர் முத்திரையினாலே எடுத்து, துவாத சாந்தத்திலே இருக்கிற சிவனிடத்திலே போக்கி அகமருஷணங்களைத் திரும்பவந்து போசிக்கும் பொருட்டு யோசிக்கவும். வலதுகால்(ப்) பெருவிரலிலே இருக்கிற காலாக்கினியை அத்திரத்தாலே எழுப்பிச் சரீரங்களிலே இருக்கிற தோசங்களெல்லாந் தெகிச்சு அமுர்தத்தினாலே உள்ளும் புறமும் நனைந்ததாகப் பாவித்து இருதயத்தின் சர்வகாலப் பிரணவத்தினாலே.... (ஏடு. *5*, *6*).

குறிப்புரை

**உரைநடை.** பூசை செய்யும் முறையைக் கூறி, அதனால் உடலிலுள்ள நோய்கள் நீங்கி உள்ளம் புத்துணர்ச்சி பெறும் வழிமுறைகளைக் கூறுகிறது. ஆறாவது ஏட்டிலுள்ள குறிப்பு முற்றுப் பெறவில்லை.

## 940. ஞானபூசைத் திருவிருத்தம்

**அ.** 167:356; **ஆ.** *118-121* ஏடுகள்; **இ.** 24 x 4 செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; அழகு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

பணித்தஅரு ளுடன்சந்தி பண்ணி னோர்கள்
பயில்காலந் தருசந்தி பகர்வன கங்குற்
புணர்த்திமலா கமவுடலாற் போகந் துய்த்துப்
பூதவுடற் போகத்திற் போத நாதன்

உணர்த்தியபோ துணர்ந்தவை உயிரிற் சந்தி
தொண்டனாலா லுடற்சுத்தி ஓங்கு வித்துக்
கணக்குறுநீ தடக்கையிலைஞ் செழுத்தாற்
குழைத்துக் கலந்தொருமை திரிமுண்டங் காட்டித்
திட்டே (1)

முடிவு

எழுந்தவர் பணிந்திருந்து நியாத மெய்தி
எழிற்குரவன் இறைவனரு ளெய்த ஏத்தி
மொழிந்தவர்கோ யிலையணுகப் பண்ணு வித்து
முன்னுதவு பாத்தியாசமன வற்கிய முறையே
பொழிந்தவர்தூய பீடத்துத் தணலெ டுத்து
மிறைஞ்சிப்போக்கு பவர்க்குஞான பூசையிது புனிதற்
கழுந்துபாகுர் வாதரும்உச் சிட்டதுகா தற்காம்
அவலமாவிய மென்றறைந் தனவர் கம்மே (18)

முற்றும்

குறிப்புரை

***1-18 எண்சீர் விருத்தப்பாடல்கள்.*** சிவாச்சாரிய மூர்த்தியார் எழுந்தருளி, மலம் முதலான கன்மங்களிலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ளும் தத்துவங்களை ஞானதீட்சையின் வழி பரிபூரணமாக அருளியதாகப் பாடல்கள் அமைகின்றன. ஞானபூசை மேற்கொள்ளுவதற் குரிய செயல்களும் காலமும் தொடர்ந்து கூறப்படுகின்றன. அந்திசந்திக் காலங்களில் பூசை மேற்கொள்ளும் முறை, ஆகமவுடலால் போகம் துய்த்தல், பூதவுடல் போகத்தில் நாதனை உணருதல், பணிந்திருந்து பூசை செய்யும் முறை, மலர்தூவி பூசை செய்யும் முறை முதலியன விளக்கம் பெறுகின்றன.

## 941. ஞானபூசைத் திருவிருத்தவுரை

**அ.** 138:277; **ஆ.** *26-38* ஏடுகள்; **இ.** 38 x 3.5 செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **எ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

பணித்தவருளுடன் சந்தி பண்ணினோர்கள் என்பது-இரு வினையொப்பு மலபரிபாகமுஞ் சத்தினிபாதமு முண்டானவ் வதரத்திலே தனக்குப் பிராணனாய் நின்று பகரித்த சிவாசாரிய மூர்த்தியர் எழுந்தருளி வந்து ஞான தீட்சையைச் சேமதத்து வாக்களைச் சோதித்து மலமாமாதி கன்மங்களி னின்றும் விடுவித்துப் பிருதுவி முதனாகு மீறான தத்துவங்களையும் பஞ்சமலங்களையுந் தெரிசிப் பித்து நீக்கியவை...

முடிவு

.... ஞானபூசையிது புனிதர்க்கு என்பது-இம்முறை கத்தாவுக்கு ஞானபூசை என்றும், அழுந்து பாகுர்வாதரும் என்பது - இன்ப சொரூபத்திலே அழுந்தின மேலான ஆசாரியார்கள் தரப்பட்ட உச்சிட்டது என்றும், காதற்காம் என்பது - பிரசாதம் பொசிக்கவாமென்றும், அவலமாவிய மென்னும் என்பது - தெக்கணா மூர்த்தம முது செய்தது நின்மாவிய மவ்வ வென்றும், அறைந்தன வரகம்மை ஆகமங்கள் சொல்லு மென்றவாறு. பதினெட்டு ஞானபூசைத் திருவிருத்தம் முற்றும்.

பிற்குறிப்பு

ஏகாம்பரத்தின் கையெழுத்து.

குறிப்புரை

**உரைநடை**. *167:356* என்ற எண்ணுடைய நூல் இது போன்றதே. ஆயின் அதில் **1-18 விருத்தப் பாடல்கள்** மட்டும் இடம் பெற்றுள்ளன. இதில் பாடல்கள் இடம் பெறாமல் அவற்றிற்குரிய உரைகள் மட்டுமே தரப்பட்டுள்ளன.

## 942. தேவி பூசாவிதி

**அ. 522:816; ஆ.** *56-58* ஏடுகள்; **இ.** 13 x 4.5 செ.மீ.; **ஈ.** *15-16* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** மிகக்கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

பாசச்சொடுக்கு மெதி ரேற்றுமா ரணங்கள்
பாங்கான தம்பனங்கள் கோகரண வித்தை
இச்சையால் கருவிபானஞ் செயவும் வித்தை
இயல்பான திலதங்கள் மந்தி ரங்கள்
உச்சிதமாய் மணிமந்தி ரங்கள்அவு சதங்கள்
ஒளிவிளங்கு மெட்டெழுத்து மாறெ ழுத்தும்
அச்சமில்லா தஞ்செழுத்து மூன்றெ ழுத்தும்
ஆணியாம் விபரமிதை அறிவிப் போமே (1)

முடிவு

நன்றான நவகோண நடுவீட் டுள்ளே கோனா
நயம்பிறவே சூலமதை நன்றாய்ப் போடு
குன்றாத வாள்விழிக்குஞ் சிகாரத் தோடுங்
குணமான வகாரமதைக் கூட்டிச் சேத்து
நின்றாடும் வாலையுட வலப்பா கத்தே
நேர்படவே விந்துவைத்தான் நேராய்ச் சேர்த்துக்
கன்றாத கன்னியிடப் பாகத் தேதான்
கணக்காக நுகாரமதைக் கருதிச் போடே (8)

குறிப்புரை

***1-8* எண்சீர்விருத்தப் பாடல்கள்.** பூசைசெய்முறைகள், தியான முறைகள் கூறப்பட்டு, இறுதியில் ஆறு சக்கரங் களும், படங்களும் உள்ளன. தேவி பூசையின்றி எதுவும் சித்தியாது என்பது உணர்த்தப் பெறுகின்றது.

## 943. பாத்தியபூசை அட்டவணை

**அ. 33:57; ஆ.** *1-17* ஏடுகள்; **இ.** 26 x 3 செ.மீ.; **ஈ. 5-6** வரிகள்; **உ.** ஏடுகள் ஓரளவு நல்ல நிலையிலிருப்பினும் அனைத்து ஏட்டின் இறுதியும் ஒன்றிரண்டு எழுத்துகள் காணமுடியாதவாறு முறிந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

## தொடக்கம்

இடம் பண்ணுகிறது கல்லானாற் கெழுவி, பூமியானால் மெழுகி, நெல்லிக்காய் அளவு திருமெழுக்...த்து மணிக்கட்டு மட்டும் ஆசாரங்கூட்டி அத்திராய் நமவென்று தெளித்து, இருபதையாய் நமவென்று தடவி, கவசாய நமவென்று கிழக்கு முதற்கொண்டு கிழித்து.... நமவென்று கிழக்கு முதல் எட்டுத் திக்கிலும் கீழ்மேலிரண்டு திக்கிலும் பத்தி....ளி வைத்து, வட்டகைசெம்பு வெள்ளையிட்டு வைத்து, அபிடேகக் கலசத்திற்...ட்டு வைத்துத் திருமஞ்சனப் பாத்திரத்தைச் சுத்தி செய்து நாற்சுத்தி செய்து....

## முடிவு

யிருதயத்திலொடுக்கி, அர்ச்சிய பாத்திரங்களிலே யிருக்கிற மந்திரங்களை யெழுதி, கார்முத்திரையாற் பிடித்து, யிருதயக் கமலத்தில் வைத்து, நினமாலியச்சுத்தி.... கழுவியாசமித்து விபூதி தரித்துச் சகளீகரணம் பண்ணிப் பூசா பல... பொருட்டு அகாரமிருபத்தொரு செபிக்கவும். பாத்தியபூசை முற்றும்.

## குறிப்புரை

பூசைக்குரிய இடம் தேர்ந்தெடுத்தலும் தூய்மை செய்தலும் என்றவாறு தொடங்கி, பத்துத் திசையிலும் செய்ய வேண்டிய தூய்மை முறைகள், அபிசேகக் கலசங்கள், திருமஞ்சனப் பாத்திரங்கள் முதலியன தயாரித்தலும், அவற்றைத் தயாரிக்கும்போது மேற்கொள்ளவேண்டிய மந்திர முறைகளும் முறையாகக் கூறப்பட்டுள்ளன. பூதசுத்தி முறைகள் ஐந்து பூதங்களுக்கும் தனித்தனியே கூறப்படு கின்றன. அவற்றிற்குரிய மந்திரங்களும் காணப்படுகின்றன. அவற்றின் துணைகொண்டு லிங்க அர்ச்சனை, சிவா அர்ச்சனை, ஆலாகண முத்திரை, ஓமகுண்டம், ஓமமுறை ஆகியவற்றிற்கான பூசைப் பொருட்கள், மந்திர முறைகள் ஆகியவை விளக்கப்படுகின்றன. மந்திரங்கள் செபிக்க வேண்டிய உருமுறைகளும் ஆங்காங்கு எடுத்துக் காட்டப் படுகின்றன.

## 944. பிரதோஷ பூசையட்டவணை

**அ.** 254:470; **ஆ.** *1-40* ஏடுகள்; **இ.** 22.5 x 3 செ.மீ; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** மிகநன்று; இறுதியிலுள்ள ஒருசில ஏடுகளின் ஓரங்கள் மிகச் சிறிய அளவில் உடைந்துள்ளன; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

குறிப்புரை

சுப்பிரமணியர் சொட்சமந்திரம், சரசுவதி பூசையட்டவணை, பத்திரவகை, ஆயுதபூசை மந்திரம், துர்க்கை தியானம், மகாலட்சுமி தியானம், சரசுவதி தியானம், வாகனபூசை, விநாயக நியாசம், விநாயகபூசை அட்டவணை, பஞ்ச கெவ்விய அட்டவணை, சுப்பிரமணிய சுவாமி பூசை அட்டவணை, கேதாரகௌரி விரதம், கேதார பூசை அட்டவணை முதலான தலைப்புகளில் தெய்வத்தின் அனுக்கிரகத்தை அடைய, பூசை செய்யவேண்டிய முறைகள் கூறப்பட்டுள்ளன. முதலிலும் இறுதியிலும் ஒவ்வொரு வெற்றேடுகள் உள்ளன.

## 945. பூசைக்கலித்துறை

**அ.** 75:150; **ஆ.** *1-5* ஏடுகள்; **இ.** 16.5x 4 செ.மீ.; **ஈ.** *10-14* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

காசன மின்னிய கண்டனு ரைத்த கனகாமத்தின்
பூசை யடுக்குக் கலித்துறை பாடல் புலனருளும்
வீசு புகழ்கொண்ட ஐங்கரன் முக்கண் மிளிர்மருப்புத்
தேசுடை மேனிச் சிவப்பிர காசச் சிறுகளிறே (1)

தந்திர சைவசமய நெறிகளுஞ் சற்றுந் தப்பார்
சுந்தர மானசமயக் குரவர் துதிக ணம்பில்
மந்திர மாசனை இரண்டுக் குரியராவர் வாசைவரே
இந்துநல் வேணி சிவாகமந் தானும் இயம்பிடுமே (2)

முடிவு

இவ்வா யுவைமண் ணினுக்கிரை யாக்கிடும் சுத்தியான
ஒவ்வாத வானத்தில் சுத்திசொல் வாம்வட்ட முற்றநிறம்
செவ்வே படிநன்குணம் பூராணம் திருவக் கரமும்
அவ்வாதி சாந்தி யதீத கலைமந்திர மன்றியே (25)

குறிப்புரை

**1-25 கலித்துறைப் பாடல்கள்.** சிவபூசையாற்றிடும் தானம், ஆசாரம், திருமஞ்சனமுறை, சுத்தி முறை, மலர்வகை, திருமந் திரம் போன்ற பல செய்திகளைத் தொகுத்துச் சொல்வதாய் இந்நூல் அமைந்துள்ளது. இறுதியில் 4 வெற்றேடுகள் உள்ளன.

## 946. பூஜாவிதி

**அ.** **269:491;** **ஆ.** *1-221* ஏடுகள்; **இ.** 25.5 x 3 செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சைவ சமய நெறி - பாயிரம்

நல்லார்தொ ழும்வெண்ணைநல் லூர்ச்சிவாலை யத்துட்
பொல்லார்தா னையாஞ்சூடும் போது
உலகமும் பல்லுயிரு மொன்றிநிறைந் தோங்கி
இலகுஞ் சிவனெம் மிறை (1)

முடிவு

கருமமுற் றியவுடன் பிறந்தால் உயிர்கழிய
மருவுபட் சிணிசூதகம் இவன்மனைக் கில்லையால்
அருவைதன் னுடன்பிறந்தவன் அயலுயி ரழியில்
உரியசூத கந்தான்மட் டினிஒழிந் தோடும் (18)

அஷ்டசித்தி முற்றும். மேற்படி சூதகா
சவுச விதி 39 முற்றும்.

## குறிப்புரை

இந்நூலில் பின்வரும் செய்திகள் உள்ளன.

| எண்கள் | நூல் தலைப்புகள் | பாடல்கள் | ஏடுகள் |
|---|---|---|---|
| 1. | பாயிரம் | 1-29 | 1-2 |
| 2. | குருலட்சணம் | 1-57 | 3-6 |
| 3. | குரு அனுக்கிரக லட்சணம் | 1-24 | 7-8 |
| 4. | சிவலிங்க லட்சணம் | 1-45 | 9-12 |
| 5. | விபூதி கர்ம லட்சண விதி | 1-16 | 13-14அ |
| 6. | அனுகர்ப்பம் | 1-4 | 14அ |
| 7. | உபகர்ப்பம் | 1-3 | 14ஆ |
| 8. | விபூதி கோவிட லட்சணம் | 1-3 | 15அ. |
| 9. | விபூதி அணியும் லட்சணம் | 1-18 | 15ஆ-16 |
| 10. | சந்தானம் | 1-4 | 17 |
| 11. | ருத்திராட்ச லட்சணம் | 1-13 | 18-19.அ |
| | (19ஆ. வெற்றிடம்) | | |
| 12. | விரல் லட்சணம் | — | 20அ. |
| | (20ஆ வெற்றிடம்) | | |
| 13. | முத்திரை லட்சணம் | 1-32 | 21-23 |
| 14. | சீரான வழிப்படும் ஆசாரம் | 1-12 | 24 |
| 15. | தீட்சைக்கு நாள் | 1, 2, 5-8 | 25-27 |
| 16. | சீரான தீட்சைக்கினிய லட்சணம் | 1-7 | 28 |
| 17. | சமைய தீட்சையுள்ளார் செய்யும் லட்சணம் | 1-20 | 29-30 |
| | (30ஆ. வெற்றிடம்) | | |
| 18. | நிருவாண தீட்சையுள்ளோர் செய்யும் லட்சணம் | 1-13 | 31 |
| 19. | பொது லட்சணம் | 1-26 | 32-33 |
| 20. | நித்திய கர்மவிதி | 1-6 | 34அ |
| 21. | மிருத்திகை லட்சண விதி | 1-4 | 34ஆ |
| 22. | சவுசவிதி | 1-31 | 35-37 |
| | (37 ஆ. வெற்றிடம்) | | |

| | | | |
|---|---|---|---|
| 23. | கிரகஷ்த்தனறிந்த சுத்திவிதி | 1-3 | 38அ |
| 24. | தந்தசுத்தி விதி | 1-15 | 38ஆ-39 |
| 25. | தானம் பண்ணும் லட்சணம் | 1-42 | 40-42 |
| 26. | தான கோத்திரம் | — | 43அ |
| 27. | நீர்சுத்தி | 1-2 | 43ஆ |
| 28. | ஆசன லட்சணம் | 1-4 | 44 |
| | (*45-53 ஏடுகள் இல்லை) | | |
| 29. | உதையகாலம் சரசுபதிதியானம் | 1-10 | 54-54ஆ |
| 30. | மத்தியானம் லட்சுமிதியானம் | 1-4 | 54ஆ-55அ |
| 31. | சாயலெட்சைக்கு முத்திரி தியானம் | 1-4 | 55ஆ-56ஆ |
| | (ஏனைய பாடல்களுக்கு எண் இல்லை) | | |
| 32. | சதாசிவத் தியானம் | 1-2 | 56ஆ-57அ |
| 33. | தர்பன மந்திரம் | 1-9; பின் உரைநடை பின்எண்ணின்றி ஓரிரு பாடல்கள் | 57-60 |
| 34. | செபம் பண்ணுகிற இடத்துப் பலன் | 1 | 61அ |
| 35. | செபமாலை பூசை | 1-19 | 61ஆ-62 |
| 36. | செபம் பண்ணு லட்சணம் | 1-15 | 63-65 |
| 37. | பூசா காலங்களில் விலக்கல் | 1-15 | 66-66 (2 ஏடுகள்) |
| | (*66 என்ற எண் இரண்டு ஏடுகளில் எழுதப்பட்டுள்ளது) | | |
| 38. | சூரியபூசை அட்டவணை | — | 67-75 |
| 39. | திரிதீட்சை உடையவர் சிவபூசை அட்டவணை | — | 76அ |
| 40. | சாமானியர்க்கும் | — | 76ஆ-78அ |
| 41. | பூதசுத்தி | — | 78ஆ-87ஆ |
| 42. | அந்தரியாகம் | — | 87ஆ-90 |
| 43. | ஆசமனாரகியம் | — | 90-90ஆ |
| 44. | விசேடஅரகியம் | — | 90ஆ-92ஆ |
| 45. | பாத்தியம் | — | 92ஆ-95ஆ |

| | | | |
|---|---|---|---|
| 46. | சங்கபூசை | — | 95ஆ-96 |
| 47. | சலாசல லிங்கமாகில் | — | 97அ |
| 48. | பொட்டக்ககோவில் திறக்க | — | 97ஆ-98 |
| 49. | லிங்கசுத்தி | — | 99 |
| 50. | அனுடபுட்பம் | — | 100-101அ |
| 51. | வினோதம் | 1-4 | 101ஆ-102அ |
| 52. | அவிரோக முறை விடுதல் | — | 102ஆ-108அ |
| 53. | சத்தகுருபூசை | ” | 108ஆ-109அ |
| 54. | ஆதார சத்தி | 1-6+ மந்திரச்செய்தி உரைநடை | 110-114அ |
| 55. | அஷ்டடத்திருங்கு சரகலாநியாசம் | உரைநடை | 114ஆ-116அ |
| 56. | ஆலாகனம் | — | 116ஆ-122அ. |
| 57. | திருவடி விளக்கம் | — | 122ஆ-123அ |
| 58. | பாவினை அவிசேகம் | — | 123ஆ |
| 59. | சந்தனஞ் சாற்ற | — | 124 |
| 60. | அபானஞ் சாற்ற | — | 125அ |
| 61. | இண்டை சாற்ற | — | 125ஆ |
| 62. | பிரதம அபானம், அர்ச்சனை | — | 126-127 |
| 63. | சதுத்தாபானம் | — | 128-129 |
| 64. | கணபதி அர்ச்சனை | — | 130அ |
| 65. | சுப்பிரமணிய சுவாமி அர்ச்சனை | — | 130ஆ-131 |
| 66. | தூபதீபம் | — | 132 |
| 67. | சேவித்துச் சாற்ற | — | 133 |
| 68. | குருபூசை | — | 134அ |
| 69. | ஆகமபூசை | — | 134ஆ |
| 70. | அஷ்டோத்திர சதம் | — | 135அ-137அ |
| 71. | தோத்திரம் தேவாரம் | — | 137ஆ-138 |
| | (139 அ. கணபதி, கணபதி என மட்டும் எழுதப்பட்டுவெற்றிடமாக உள்ளது) | | |
| 72. | நமஸ்காரம் | — | 139ஆ-140அ |

| | | | |
|---|---|---|---|
| 100. | சிவகாயத்ரி, மித்துருசெயம், தேவிதியானம், மித்துரு செபம் | — | 188 |
| 101. | சடாட்சரம் | — | 189 |
| 102,. | சற்குரு மந்திரம் செபம் பண்ண | — | 190 |
| | (*191-195 ஏடுகள் இல்லை) | | |
| 103. | பஞ்சகௌவியம் | — | 196-200 |
| | (*199, 201 ஏடுகள் இல்லை) | | |
| 104. | பாத்தியாக மரைக்கி அவிசேக சொட்ச உபசார பலன் | 1-11 | 202-204 |
| | (*204ஆ வெற்றிடம்) | | |
| 105. | வில்வந் துளசி மகிமை | — | 205 |
| 106. | புட்பவிதி | 1-26 | 206-210அ |
| 107. | புட்ப வகை | 1-9 | 210அ-212அ |
| | (212ஆ வெற்றிடம்) | | |
| 108. | சூதகா கவிச விதி | 1-35 | 213-219அ |
| 109. | ஷடசித்தி | 1-8 | |
| | (219ஆ-221அ) | | |
| 110. | சுலோகம் | — | 221அ-221ஆ |
| 111. | வாதுளாகமத்தில் உயர்ந்தவர் மாறாத லிங்க பூசாபடலம் | 1-4 | — |
| 112. | அரகிய திரவியம் | — | 84 |

## 947. பூஜாவிதி தீட்சாவிதி முதலியன

**அ.**105:209; **ஆ.** *1-81* ஏடுகள்; **இ.** 22.5 x 3 செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; பிற்பகுதியில் பல ஏடுகள் சிதைந்துள்ளன; **ஊ.** அழகான எழுத்து; **எ.** முழுமை அச்சாகாதது.

தொடக்கம்

பரமாசாரியர் விதி

தூலபஞ் செழுத்து மிலிங்கமும் குகையோன் முகமெம் உமையுரு வாகி
மேலா தாமிறை காரணமா றாத்தியன் மிரும்கா காரணம் வீரன்
சீலமாம் ஞான உபாய சாதனையைத் தரித்த வீரட்டேசர் சென்னெறியின்
மேலவா துண்மை யிதனை மொழிந்த வேலவன் இணையடி தொழுவாம்

## முடிவு

தகனமாவது புதைத்தலாவது தகாத காரியம் செய்தால் அந்த நகர்.... அக்கினிப்பட்டு நாய்நரிகள் பிசாசங்கள் வாசமாகும். நாடுகளில் மழை பெய்யாமல் வருமை யடைந்து அந்த நாட்டு அரசர் அரசு இழந்துவிடும். முறைப்படி செய்பவராகில் நாடு தழைத்து அரசு செழித்து மாசமும் மாரி சொரிந்து சோடச தானங்களும் செழித்து விளங்கும். ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரோடி மூங்கில்போல் சுற்றமுசியாமல்.....

## குறிப்புரை

'அத்திமுகனடி நித்தம் நினைபவர், கூரறியசுரர் முனிகளும் பெரிதெனும்' எனத் தொடங்கும் இரண்டு காப்புப் பாடல்கள் முதலில் அமைகின்றன. அடுத்துப் பரமாச்சாரியார் விதி எனும் தலைப்பில் ஒரு பாடலும், அடுத்த 2 ஏடுகளில் அப்பர், சம்பந்தர், மாணிக்கவாசகர், சுந்தரர் ஆகியோர் இறந்த மாதம், நட்சத்திரம் ஆகியனவும் சுட்டப் பெறு கின்றன. பரமாசாரியர் விதி, தீட்சாவிதி, திரவியம், நாள் நிரணயம், வினாயக சுவாமி துதி, தீட்சாவிதி மண்டபம், வினாயகர் பூசை, அஷ்டவிதி, தசதிக்கு பாலகர், தபனகலச ஆவாகனம், சிவகலசம், ஆவாசனாதி, சத்திகலசம், அஷ்டவிதி, ஆவாகனாபதி, பஞ்சாசாரியர் பாகனாதி முறை, பஞ்சாசாரியார் வாகனாதி, பஞ்சகலச ஆவாகனாதி, அவதாரிகை அட்டவணை விதி, புண்ணியர் வசனம், பஞ்சகவ்ய ஆவாகனாதி, சங்கல்பம் செய்யுகிற விதி, சடாசாரி ஆவாகனாதி, சடாசாரி அருவாகனாதி, அஷ்டதோத்திரம், சடநாம மந்திரம், சடகவயம் ஆவாகளாதி, சடகவயம விதி வருமாறு, சுப்பிரமணிய சுவாமிகள் பேரில் அஷ்டோத்திரம், சிவகாயத்திரி, சங்கல்பம் செய்குற விதி, தீட்சா விதி வருமாறு, பதமந்திரம், ஆவாகனம், ஓமாதிகள், ஆவாகனாதிகள் முதலான தலைப்புகள் உள்ளன.



# 13. மந்திரம்

## 948. அகத்தியர் தண்டகம்

**அ. 325:552; ஆ.** *1-7* ஏடுகள்; **இ.** 29 x 3 செ.மீ; **ஈ. 7-8** வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

அந்தணர் பாதம் போற்றி அறிவுடன் வாழ்வோர்க் கெல்லாஞ்
சாந்தமா பூமி மீதில் சாத்திய தண்ட கந்தான்
எந்த னாற்பிள்ளை யெல்லாம்யிது வறிந்துள்ளே கொண்டு
பின்ற மிப்பிறர் விள்ளாதே பெரியவ ராகுந் தானே (1)

முடிவு

வகைக்கு மனிதர் திகைக்குங் கருவை
கவைக்க முப்பைப் பகைக்கு நஞ்சுரட்டியே (62)

உருட்டுங் கரும்பூனை திருட்டுக்கல் லொன்றுமதை
வருட்டு மனுடர்க்கு யிருட்டு முருவதே (63)

குறிப்புரை

**ஒன்று முதல் 63 பாடல்கள்.** மாந்திரீகத்தை எடுத்துச் சொல்வதாக அமைந்துள்ளது. துரிசில்திலதவித்தை, கருக்கூட்டு, கருமவித்தை, அஞ்சன வகைகள், பலவகை மாந்திரீகம், அட்ட கர்மங்கள், தொண்ணூத்தாறு வகை வசீகரங்கள் முதலானவற்றைச் சொல்லி, அவற்றிற்கான பூசைகளை, எந்திரங்களைக் கூறுகின்றது. மனது ஒருநிலைப்பட சக்தி வாய்ந்த புனித ஒலிகள் பயன்படும் என்று சித்தர்கள் நம்பினர். எனவே அட்டகர்மங்களைச் செய்ய மனது ஒருநிலைப்படுதல் அவசியம் என்பதை உணர்ந்த அவர்கள் மந்திரங்களைப் பயன்படுத்திச் செழிப்பை வேண்டித் தூய மந்திரங்களைப் பலவிதச் சடங்குகளோடு செய்யத்

தொடங்கினர். பின்னர் மந்திரங்கள் நன்மைக்கு மட்டுமன்றி அழிவிற்கும் பயன்படத் தொடங்கின.

## 949. அஷ்டோத்திர சதநாமம் அஷ்ட புட்பமந்திரம்

**அ. 76:159; ஆ.** *80-87* ஏடுகள்; **இ.** 17 x 2.5 செ.மீ.; **ஈ.** *8-10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாக வில்லை.

**தொடக்கம்**

ஓம் சறுவாய நமஃ
ஓம் ஈசானாய நம:
ஓம் பசுபதியே நம:
ஓம் வீமாய நம
ஓம் மகாதேவாய நம
ஓம் உருத்திராய நம
ஓம் நீலகண்டாய நம
ஓம் சிவாய நம-*1*
மயேசுவராய நம-*2*
சம்புவே நம-*3*
..னாகினே நம-*4*
சசிசேகாரிய நம-*5*
வாமதேவாய நம-*6*
ரூபாடசாய நம-*7*
காந்தினே நம-*8*
நீலலோகிதாய நம-*9*
சற்காரிய நம-*10*
சூலபாணிய நம-*11*
கட்டுவாங்கினே நம-*12*
விஷ்ணுவல்லபாய நம-*13*
சிபிவிஷ்ட்டாய நம-*14*
அம்பிகா நாதாய நம-*15*
ஸ்ரீகண்டாய நம-*16*
பத்தவர்சலாய நம-*17*

முடிவு

அவ்வியதாய நம-103
சகத்திரபதே நம-104
அபவர்கப் பிரதாய நம-105
அனந்தாய நம-106
தார்க்காய நம-107
பரமேசப்ராய நம-108

அஷ்டோத்திர திருநாமம் முற்றும்.

குறிப்புரை

சிவனுக்குரிய 108 மந்திரங்கள் கூறப்பட்டுள்ளன. இறைவனை வழிபடும்போது சிவபெருமானுக்கு மலர் தூவிச் சொல்லப்படும் அர்ச்சனை மந்திரங்கள் இதில் கூறப்பட் டுள்ளன. சிவபெருமானுக்குள்ள பெயர்கள் பல இதில் தொகுக்கப்பட்டுள்ளன. ஆங்காங்கே விஷ்ணுவின் பெயர் களும் சில இடம் பெறுகின்றன. இம் மந்திரங்கள் வேத மந்திரங்களாகவும், தெய்வீக மந்திரங்களாகவும் அமை கின்றன. தற்காப்பு என்ற உணர்வு அனைத்து உயிர் களுக்கும் பொதுவான ஒன்றே. அச்சத்தின் மேலீட்டால் தனக்குள்ள தற்காப்பு உணர்விற்கு மேலும் உரம் சேர்க்கும் வண்ணம் இறைவன் துணையாக நிற்க வேண்டுமென்ற அமைப்பில் இந்நூலின் கண்ணும், இதுபோன்ற பிற நூல்களிலும் சொற்கள் மந்திரங்கள் போன்று செயல் படுகின்றன.

## 950. கணபதி அகவல் முதலியன

**அ.** 263:483; **ஆ.** 62 ஏடுகள்; **இ.** 23 x 3 செ.மீ.; **ஈ.** 5-11 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

கணேசாய நம...
கணபதி யென்றிட ...
கணபதி யென்றிட கல்லும் கைத்தொழும்

கணபதி யென்றிட கரும மாதலால்
கணபதி யென்றிட கரும மில்லையே
திகடச் சக்கரத் தாமரை நாயகன்
சகடச் சக்கர தாமரை நாயகன்
அகடச் சக்கர விண்மணி யாவுரை
விகடச் சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம் (ஏடு.1).

## முடிவு

### மூலமந்திரம்

ஓம் கணபதி பவ
ஐய்யும் கணபதி பவபவ
அங், கம், கங், கம், எங்கும் கணபதி பவபவ
லோக ரட்சதி கன்னிகாதேவி வந்து ஸ்வாகா (ஏடு.7).

## குறிப்புரை

கணபதி மந்திரங்கள் தெய்வீக மந்திரங்களாய் உள்ளன. முதல் ஏழு ஏடுகளில் கணபதி மந்திரம் முடிவதாகத் தெரிகிறது. இதில் கணபதிக்குரிய பெயர்களும் சிறப்புகளும் வெளிப்படுகின்றன. இடையில் ஆறாவது ஏட்டில் 'தன்வந்திரி நாடிக் குறிப்பு' என்ற தலைப்பு காணப்படுகிறது. தொடர்ந்து காட்சி மேஜர்புரம், அஷ்டகோத்தி மந்திரம், ஸ்ரீராமர் சோடசமந்திரம், அபிஷேகவிதி, அஷ்ட சோதி மந்திரம், தத்துவராய சுவாமிகள் அருளிச் செய்த துவாதச நாம சங்கீர்த்தனம், அஷ்டாஷ்ட லீலையென்னும் தேவிபராக்கிரமம், 2ஆவது வச்சிர பஞ்சர சத்தி கவசம், வராகி வாலை சக்கரம், தேங்காய் சுத்து, கும்பம் சுத்த மந்திரம், அனல் பார்க்க, வசீகரம், வயிரவன் மூலமந்திரம், சிங்கியன் தியானம், பஞ்ச பட்சி சாத்திரம், வைரவன் மூலம், வராகி ஆகிருசனம், வைரவன் சித்தி, அட்ட வைரவன், உச்சாடனம், பேய் விலக, மந்திர சித்தி, மிருக மாரணம், பேய் மாரணம், கள்ளர் தம்பனம், தேவதை மாரணம், வெள்ளளைப்பு, சகலகழிப்பு, அளைப்புச் சக்கரம், புவனேஸ்வரி அகவல், வயிரவன் சக்கரம், முதலான தலைப்புகளில் மந்திரங்களும் அவற்றுக்கான சக்கரங்களும் காணப்படுகின்றன. இதிலுள்ள பாடல் எண்கள் உரோமன்

எழுத்துகளால் எழுதப்பட்டுள்ளதால் மிகவும் பிற்பட்ட காலத்தில் படியெடுக்கப்பட்ட அல்லது எழுதப்பட்ட சுவடி என்பது தெரிகிறது. இந்நூல் துதிநூல் போன்று தோன்றி னாலும் மந்திரச் செய்திகளே முழுமையாக இடம் பெற்றுள் ளன. பக்தி நூல்களில் மந்திரங்கள் மிகுதியும் இடம் பெற்றிருத்தலைக் காண முடிகின்றது. சில நூல்களினின்று எடுத்தெழுதப்பட்ட தொகுப்புச் செய்திகளைக் கொண் டமைகிறது.

## 951. சடாட்சர மந்திரம்

**அ.** 509:780; **ஆ.** 76 ஆவது ஏடு; **இ.** 40 x 3 செ.மீ.; **ஈ.** 4, 6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

சகல சனவசீ கரமாஞ் சகாரத் தாலே
சனமுத லாய்க்கூட்டி வைக்கும் ரகாரத் தாலே
செகமெல்லா அழவைக்கும் அகாரத் தாலே
சிகமுழு துந்தப் பிக்கும் ணகாரத் தாலே
பகைபசி நோய்அகத்தி வைக்கும் பகாரத் தாலே
பகைத்த வரைக்கொன்று விடும் வகாரத் தாலே

முடிவு

அச்சரம்-மாரல்

சரவணபவ
நமசிவய
சரவணபவ
சிங்வங்அங்உங்

குறிப்புரை : சடாட்சரத்தின் மாரல் பாட்டு மந்திரம் - சரவணபவ

76-ஆவது ஏட்டின் முன்பகுதியில் இடம் பெற்றுள்ள இந்நூலில் சரவணபவ எனும் பகுதியும், ஆறு எழுத்து மந்திரமான சடாட்சரத்தின் இயல்பும், இவற்றுக்கான அச் சரமும், சகார, ரகார, அகார, நகார, பகார, வகார மந்திரங்

களின் பயன்பாடுகளும், மந்திரப் பயிற்சியினால் பல்வேறு ஆற்றல்களைப் பெறும் முறைகளும் கூறப்பெறுகின்றன.

## 952. சல்லிய நூல்

**அ.** **182:381;** **ஆ.** *1-40* ஏடுகள்; **இ.** 25 x 3 செ.மீ.; **ஈ.** *6-8* வரிகள்; **உ.** சுமாரான நிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

பாம்பு கடித்தால் சிறகடிக்கிறது (சிவாய)

முந்தி எழுந்திருந்து முடியேன் தோத்துக்
கண்திறந்த நாயகமே கவசகுண் டலமிரண்டும்
கத்திரிச்சு விழவே என்னை
ஆண்டாரே விஷம் தீண்டிச்சு என்று சீமை
ஐம்பத்தாறு மண்டலமும் ஆள
உடவே நிக்குமது செண்பகமரம் பூக்கும்
ரெண்டேபூ காவலாளும் கிங்கிலியரும்
எறங்கு - எறங்கு. ஒன்னையும் என்னையும்
பிறப்பிச்ச பிரம்மா ஆணைஇறங்கு, இறங்கு
சிவா. அறியவும்.

முடிவு

நரசிம்ம உச்சாட்டம்

ஓம்நமோ பகவதி அரிஓம் நரசிங்கரூபா நமோ
நாராயணா அரிஅரி யிரணியநமா அரிஅரியிரணிய
சொரூபா அரிஅரி யிரணிய பயங்கரா அரிஅரி
சிம்மரூபா தட்சப் பிரதட்சா.... மூலையுங் கட்டு
அணியணியாப் பூதங்கட்டு தணியாத அக்கினி கட்டு...
ஏறும் விஷத்தைக் கட்டு... கொல்ல வந்த கூற்றுவனைக்
கட்டு... எரிஎரி நரசிம்மா உம்படு சுவாகா. உரு. *108.*

குறிப்புரை

இச்சுவடி தேள்விஷம், சிலந்திக்கடி, தாள்பூச்சிக்கடி, திருஷ்டி ஆகியவற்றை நீக்குவதற்குரிய மந்திரங்களும், வேப்பிலை அடிக்கும் மந்திரங்களும் அடங்கிய வகையைச் சார்ந்தது.

மேலும் வயிரவர் தியானம், கணபதி உச்சாட்டம், நரசிம்ம உச்சாட்டம் போன்றவற்றிற்கான மந்திரங்களும், பஞ்சாக்கர சக்கரம், திசைக்கட்டு, சடகோணம், பில்லி சூனியம் முதலிய வற்றிற்கான சக்கரங்களும் அடங்கியுள்ளன.

## 953. சல்லிய நூல்

**அ.** 185:385; **ஆ.** *1-27* ஏடுகள்; **இ.** 15 x 3 செ.மீ.; **ஈ.** *6-8* வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை. அச்சாகாதது

தொடக்கம்

ஆதியந்த மில்லாத குருவின் வித்தை
அறிந்தபின்பு குருவினுட தொழிலுள் வித்தை
வித்தையென்றா லறிவதுதான் விதமே கேளு
அறிந்தபின்பு சித்தருமோ அப்பனோ காணார்
ஆதிசிவன் அறிவதல்லால் வேறு மில்லை
அரகரா யிதுமகிமை அறைகி றேனே

முடிவு

மேனிச்சாறும் வேளைச் சாறும்
விரும்பிய பசளைச் சாறும்
வானியீ வீலி யென்று
வந்திடு விடங்கோ ணாமல்
மயக்கமாகக் கன்னி உருகுவாளே
தாதுமே உரைக்கக் கற்பம்
.... .... .... ....
தப்பாது நறுக்கு முற்றே (32)

குறிப்புரை

வசியங்கள், மாரணங்கள் முதலியவற்றிற்கான மந்திரங் களும், உரிய சக்கரங்களும் அடங்கிய நூலிது. செய்ய முடியாத செயல்களை மாயமந்திரத்தின் உதவியால் எங் ஙனம் செய்வது என்பதும், அச்செயல்களினால் ஏற்படும் நன்மைகளும், மந்திரத்தைக் குருவின் வழி அறியும்போது ஆதி சிவனை அறிவதுதான் மந்திரம் என்ற மகிமையினை

உணர முடியும் என்பதும் உணர்த்தப் பெறுகின்றன. மாடன மந்திரம் என்ற உட்டலைப்பு உள்ளது. இந்நூலை அடுத்து ராவுகாலம் என்ற தலைப்பில் ஓர் ஏடும், மருத்துவச் செய்திகளடங்கிய 2 ஏடுகளும் ஏட்டெண் இன்றி உள்ளன. இம் முதல் ஏட்டில் இராகுகாலம் வாரநாட்களில் எந்தெந்த நேரங்களில் இருக்கின்றன என்பது கூறப்படுகின்றது. இறுதியில் ஏழு வெற்றேடுகள் உள்ளன.

## 954. சல்லிய நூல் முதலியன

**அ. 205:412; ஆ.** ஏடுகள்; **இ.** 18.5 x 2.5 செ.மீ; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; சில ஏடுகள் சிதைந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாக வில்லை.

தொடக்கம்

.... கால்களுக்கு முன்னே தெற்குமுகமாய் நின்று மூல
மந்திரம் 108 உரு செபித்து முளையை அடிக்க முன்
பின்னடைக்கும் திரம்பாலும் தீருமென்றவாறு (13)

செகத்திலே மந்திரங்கள் செபிப்பதங் கொருநூ றாகும்
மகத்தினில் மணலி காடன் அதிலஞ்சு காய்ம னாயுன்
மிகப்படச் செலுத்திப் பின்னை வெள்ளாவியின் அடியில் வைக்க
வகுத்ததோர் வியாதி யெல்லாம் வகுத்தனன் வளமை யாலே

முடிவு

ஏங்கி யரியும் கால்காளி எகலா தேவி ரீரா
ஆங்குறோஞ் சவ்வு மவ்வும் அல்லம்மா ராரா
ஆயிடா கினிஉம்சத்தி ஆரியே ஆரியாரி ராரா
மாயிமா காளிதல்லி மல்லம்மா ராரா
சாகினி லாங்கி லங்கி சாலக்கா ராரா

சல்லிய நூல் எழுதி நிறைந்தது. முற்றும்

குறிப்புரை

பல்வகையான செயல்களுக்குரிய மந்திரங்களும் உச்சாடன முறைகளும், பாடல்களுக்கு ஆங்காங்கு உரை விளக்கமும்

காணப் பெறுகின்றன. இறுதியில் முடிவு பெற்றதே ஆயினும் முதலில் 12 ஏடுகள் இல்லையாதலின் குறையான நூலாகக் கருதப் பெறுகிறது. நூல் முடிந்தபின் 'அஞ்சனம்', 'தீவிட்டி' என்ற தலைப்புகளில் மூன்று ஏடுகள் உள்ளன.

## 955. சல்லிய நூல்

**அ.** 210:420; **ஆ.** 1-42 ஏடுகள்; **இ.** 15 x 35 செ.மீ.; **ஈ.** 9-10 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை, அச்சாகாதது.

தொடக்கம்

கருமொழி தப்பா வண்ணங் கூறிய தன்ம வானாய்
எரியுயிர்க் கோபந் தீர்த்து எவ்வுயிர்க் கிரங்கு வானாய்
விரியுறு பகையு மன்றி மிகமிகப் பகர்வோ னாகில்
திருவரு ளாலே சல்லியஞ் சித்திக்கும் உண்மை தானே (1)

முடிவு

நின்றிடுஞ் சீயா வென்ன நேரிட்ட மிருகம் எல்லாம்
சென்றிடுங் கிலியா வென்னச் சினத்திடும் மிருகம் எல்லாம்
வன்றிடும் ஐயா வென்ன ஒதுங்கியே விலகிப் போகும்
அன்றிய ஐயா வென்னை ஆடிடும் மிருகந் தானே (65)

குறிப்புரை

**1-65 பாடல்கள் உரையுடன் உள்ளன.** ஊரைவிட்டு ஓடிப்போக, பயித்தியம் பிடிக்க, நாவடங்க, கல்லெறிய, தோசங்களுக்கு துவாலை எடுக்க, பிரிவு, உச்சாடனம், உடுக்குத் தெரிக்க, மறைவு, கரும்பூனை வடிவு, சூனியம், பில்லிதீர, சத்துரு மாரணம், அனுமன், தாக்கனுமன், சாத்தானின் கோவில், முன்னடி, பிளவைக்கு, மோகனம் வரவழைக்க, நத்தைச் சூரி, தலைசுத்தி ஆட்ட, மீன் ஓடிப்போக, சிவம் வெதும்ப, சிவம் குளிர,நன்றாய் விளைய, வயல் விளையாமல் போக, புழுவிலக, மெத்தப் பூக்க, மரங்காய்க்க, தோப்பு, அரவம் நிற்க, அரவம் ஒடுங்க, விசந் தீண்டியவன் பிழைக்க, வேங்கை, வரிப்புலி, காட்டுப் பன்றி, எருது இவை யெல்லாம் ஓடிப்போக முதலான

தலைப்புகள் உள்ளன. பில்லி விளக்கவுரையும் சூனியம், ஏவல் என்ற வகைகளில் இம்மந்திரங்களின் செயற்பாடு களும் சல்லியம என்ற மந்திரசித்து ஒருவருக்குக் கிட்ட அவன் பண்பாளனாய் இருத்தல் வேண்டுமென்பதும் கூறப்படு கின்றன.

## 956. சல்லியநூல்

**அ.** 408; 652; **ஆ.** *36* ஏடுகள்; **இ.** 25.5 x 3 செ.மீ; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; ஏடுகள் முறைமாறியுள் ளன; **ஊ.** சுமார்; சில ஏடுகளில் வேறுவகை கையெழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

முடிவு

> ரெத்தக் காட்டேரி பல்யேவலும் பரந்த போக அரினாம
> மகா கணபதி
> உன்னை நினைத்த நாழிக்கி உன் சூலத்தே வாங்கு சீக்கிரம் குத...
> கலக்குவா கணபதி எரிஎரி சுடுசுடு மாரணம் மாரணம் உச்சாட்ட
> உச்சாட்ட சர்வமும் நிற்பதூ யெரியெரி சிங்சிங் பார்பார்
> ஓம் கணபதி

ஐயுங் கிலியுஞ் சவ்வும் கிலியும் சரவணம் எரிஎரி... மாக எரிஓம் நமசிவாயா. ஓம் கணபதி உம்பட்டு சுவாஹா.

குறிப்புரை

*182:381* என்ற எண்ணிலமைந்த நூலின் செய்திகளோடு இந்நூற்செய்தி சில இடங்களில் ஒன்றுபட்டு அமைகின்றது. 'பாம்பு கடித்தால் சிறகடிக்கிறது' என்ற தலைப்பிலமைந்த செய்தி இரு நூலிற்கும் தொடக்கமாக அமைகின்றது. சிலந்திக்குச் சிறகடிக்கிறது, சத்தி மந்திரம், பில்லி சூனியம், பேய் பிசாசுக்கு எந்திரம், திஷ்டிக்கு, வயிரவர் தியானம், சூனிய குணம் வருமாறு, தாள்பூச்சி அடிக்குறதுக்குக் கட்ட, சட கோணம் வருமாறு, வெட்டையைக் கட்ட மந்திரம், சிலந்தியளுக்கு வேப்பிலை அடிக்கிற மந்திரம், கணபதி உச்சாடனம், திசைகட்டு, நரசிம்ம உச்சாட்டம், நரசிம்ம சக்கரம்,சுப்பிரமணியர் மந்திரம், சுரத்துக்கு ஓதிக்கொடுக்க, அனுமார் உச்சாடனம் முதலிய உட்தலைப்புகள் உள்ளன.

பாம்புக் கடிக்கு, பூச்சிக் கடிக்கு, பல்வகையான நோய்களுக்கு இன்னும் பிறவற்றிற்கு மந்திரங்களினால் தீர்வுகள் கூறப்படுகின்றன. சொல்லப்படும் மந்திரங்களுள், சில மந்திரங்களை எழுதிக் கையில் கட்டும் முறைகளும் கூறப் பெறுகின்றன. எந்திரங்கள், சக்கரங்கள் வரையப் பட்டுள்ளன.

## 957. சல்லிய நூல் திரட்டு

**அ. 530:858; ஆ.** *38-95* ஏடுகள்; **இ.** 19.5 x 2.5 செ.மீ.; **ஈ.** *5-6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

பூனையை வைய்த்துக் கக்கத்திலிடிக்கிக் கொண்டு, கண்ணாடியைப் பார்க்க முகம் தெரியாது. அந்தப் பூனையைப் பூமியிலே புதைத்து அதன் வாயில் கதலி வாழைக் கண்ணை நட்டு செருசாயிருக்கிற பக்குவத்தில் காய்வெட்டி, அந்தக் காயும் அத்திப் பழத்து விரையும், வெட்டை வாகைப் பிசினுமாவது வடித்து விட்டரைத்து உண்டை செய்து தேவி பூசை செய்து, ஓர் உண்டை கொள்ளப் பிறருக்குப் பூனை போலவே காணும் (*34*).

### முடிவு

குருவரு ளாலே சல்லியன் கூறிய தொழில்க ளெல்லாங்
குருவரு ளாலே கண்டு குறிப்புடன் அறிய வேணும்
குருவருள் தானே தெய்வம் குருவருள் தானெ முத்தி
குருவரு பதங்கள் தானே கொண்டனன் சென்னிமீதே (101)

சக்கதேவி துணையுண்டாகதாகவும்,
சல்லிய நூலெழுதி முடிந்தது. முற்றும்.

### குறிப்புரை

*34* ஆவது பாடல் குறைப் பாடலாக உள்ளது. **34-ஆவது பாடல் உரை தொடங்கி 101 பாடல்கள் வரை முழுமையாக உள்ளன. 68 பாடல்கள் வரை மட்டுமே பாடல்களுக்கு உரையுள்ளன.** நூல் முடிந்த பின் நூலின் இறுதி ஏட்டில் (*88*) இதுக்கு எந்திர மந்திரம் என்ற தலைப்பில் அட்சரம்

வரையப்பட்டு மந்திரம் கூறப்பட்டுள்ளது. கெருடன் முட்டை, சின்னி, சக்கிலியன், தாக்கனுமான், சுடலை ஒடு, திருகுறத்துக்கள்ளி, பட்டணம், பிள்ளைக்குத் தண்ணீர் ஓத, நத்தைச் சூரி, சல்லியம், மூக்கு கண் போம், சக்காதேவி முதலான தலைப்புகள் உள்ளன. அடுத்து 89-95ஆம் ஏடுகளில் இல்லாத கவி, குடம், நீர்க்குறியிலடிக்க, அஞ்சனம், தீவட்டி முதலான தலைப்புகளில் சல்லியநூல் தொடர்பான செய்திகள் இடம் பெற்றுள்ளன. மூன்று ஏடுகளில் ஒரு பக்கத்தில் மட்டும் எழுதப்பட்டுள்ளது. இறுதியில் ஒரு வெற்றேடு உள்ளது.

## 958. திருமூலர் மகிமை முதலியன

**அ. 196:398; ஆ.** *1-6* ஏடுகள்; **இ.** 19.5 x 2.5 செ.மீ.; **ஈ.** 5 வரிகள்; **உ.** நன்று; சில ஏடுகள் சிதைந்துள்ளன; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

நமசிவாய, சிவாயநம, யநமசிவ, வயநமசி....
ஓம் ஆம் ஊம் சிவ சிவாய வசி சிங் வங் அங் உங்...

முடிவு

அனாகதத்துக்கு - க-க-க-கெ-ங
ச-ச-செ-ச-ஞ
ட-ட-ஆக 12.
விசுத்திக்கு - அ-ஆ-இ-ஈ-உ, ஊ
எ-ஏ-யிறோ-யீறோ-
யில்லோ-யீல்லோ
ஒ-ஓ-அம்-அ-ஆக-16

ஆக்கினைஸ்தானம்-ஊ-யிஷ்ர ஆக 2. ஆக 50 - பிரணவம் பீசம்-1, ஆக. 51....

குறிப்புரை: வயித்திய புருசோத்தம செட்டி திருமூலர் மகிமை-பண்க்ஷர நிலை-அஷ்ட்டாங்கம் குறிப்பு

அஷ்டாங்கப் பஞ்சாட்சரம், இலக்கம் அடைக்கிற விதம் பற்றிய சக்கரங்கள், பஞ்சாட்சர நிலை 81 அட்சரங்கள் அடைக்கும் சக்கரம், கட்டளை அட்சர மந்திரக் குறி, மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், பிசாட்சக் குறிப்பு முதலானவற்றுக்கான மந்திரங்களும் அவற்றிற்கான சக்கரங்களும் எழுதப்பெற்றுள்ளன. தம்பனம், மோகனம், உச்சாடனம், வசியம் முதலான அட்ட கர்மங்களுக்குரிய மந்திரங்களும், இதில் சொல்லப் படுகின்றன. இறுதியில் 'அகத்திய முனிவாக்கியம் வேதசூட் சம் எட்டு' என்ற தலைப்பில் ஓர் ஏடு மட்டும் உள்ளது. முதலிலும், இறுதியிலும் ஒவ்வொரு சட்ட ஏடுகள் உள்ளன.

## 959. தோடம் - கழிப்பு

**அ.** **314:540;** **ஆ.** *39-85* ஏடுகள்; *52, 72* என்ற இரு ஏடுகள் இல்லை; **இ.** 32 x 3 செ.மீ.; **ஈ.** **5-6** வரிகள்; **உ.** ஒருசில ஏடுகள் தவிர மற்றவை நல்ல நிலையிலுள்ளன; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

பாலன் பிறந்த முதலாய்ப் பரிவாந் திங்கள் வருமழகும்
வாலப் பேயுங் கழிப்புகளும் வருந்தித் திறந்து வகப்படியே
சால முனிவன் மனமகிழ்ந்து தப்பா துரைத்தா ரெல்லோர்க்கும்
மாலம்பொருந்தும் விழிமடவீ ரடவா லறிந்து சிகிச்சை செய்யே (1)

முடிவு

சுடல் சாம்பல் எருவில் சுட்டது மூடும் முப்பில் எடுத்துக் கொள்ள வேண்டும். திருநீறு இடு மந்திரவும் அட்சரவும் அடி பிரமன், நடுவிஷ்ணு, முடியீசுவரன் காவலாக் கொண்டேன். அடியும், நடுவும், முடியும் ஈசுவரக் காவலாக் கொண்டேன். சர்வ தோசங்களும், சர்வ பூத பிரதேசப் பிசாசுகளும் என்கையில் வெந்நீறு கண்டு பிய்ந்து போகப் பயிரவி வேறு எமத்தூளி, தூளி, பிரமாத் தூளி, தூளி, யீசுவரன் தூளி, மகாதூசி, தூசி, மருதா தூளி, தூளி. (ஏடு. 85)

குறிப்புரை : தோஷம் - கழிப்பு

39-71 வரையுள்ள ஏடுகளில், கழிப்பு, தோடம் இவை நீங்குவதற்கான வழிமுறைகள், நாள்தோடம், மாதத் தோடம், மாதப்புள்ளுத்தோடம் - குணங்கழிப்பு, மாதப்புள்ளு தோடம் - குணமும் கழிப்பும், ஆண்டுதோடம் ஆகிய ஐந்து தலைப்புகளில் கூறப்பட்டுள்ளன. ஒவ்வொரு தலைப்பிலும் முறையே முதற் பாடலும் முடிவுப் பாடலும் காணப்படு கின்றன. 72-85 வரையுள்ள ஏடுகளில் சிறுசிறு உட்டலைப் புகளில் பலவிதமான மந்திரங்கள் சொல்லப்பட்டுள்ளன. இது மாந்திரீக நூல் வகையைச் சேர்ந்தது. 39-45 ஏடுகளில், 1-43 பாடல்களில், இரண்டாம் நாள் முதல் 29ஆம் நாள் வரை ஏற்படும் கழிப்பு குணமாகும் முறைகளும், 46-55 ஏடுகளில், 1-12 பாடல்களில், 12 மாதங்களில் ஏற்படும் கழிப்பு குணமாகும் முறைகளும், 56-59 ஏடுகளில், 1-25 பாடல்களில், 2 ஆம் திங்கள் முதல் 11 ஆம் திங்கள் முடிய கொள்ளிப் புண்ணுக்குக் குணம், அரிப்புள்ளுக்குக் குணம், சகல தோடங்களுக்கும் மேலில் (உடலில்) பூசும் மருந்து ஆகியனவும், 59-67 ஏடுகளில், 1-43 பாடல்களில், ஒன்றாந் தருணம், இரண்டாந் தருணம், செங்களிப் புள்ளின் குணம் முதலான தலைப்புகளில் செய்திகளும், 67-71 ஏடுகளில், 1-24 பாடல்களில் ஆண்டுத் தோடம் பற்றியும், 72-85 ஏடுகளில் உரைநடை யில் பலவிதமான மந்திரங்களும் சொல்லப்பட்டுள்ளன. கழிப்பு-தோடம்-குணம் என்ற முறையில் ஒரு பொருளை மையமாகக் கொண்டு நூல் அமைந்துள்ளது. இரண்டாம் நாளின் கழிப்பு, மூன்றா நாளின் குணம், இருபத்தேழில் செய்யுங் குணம், மாதத்தோசம், மூன்றாம் மாதக் குணம், பேய்த் தோசமும் கழிப்பும், மாதப்புள்ளு தோசம் குணமும் கழிப்பும், மூன்றாந்திங்களில் அரிதாரப் புள்ளின் குணம், நாலாந் திங்களில் வெளிப்புள்ளு குணம், அரிப்புள்ளு குணம், ஏழாந் திங்களில் எரிப்புள்ளு குணம், பதினோராம் மாதம் கொள்ளிப் புள்ளுகுணம், சகலதோசங்களுக்கும் மேலில் பூசமருந்து, மாதப்புள்ளு தோச குணமும் கழிப்பும், செங்களிப் புள்ளின் குணம், அறல்வழிப் பறவை குணம், வறப்புள்ளு குணம், கானப்புள்ளு குணம், குழித்தோச குணம், குளித்த வகை குணம், நிழல் தோசம் சாத்திய குணம், தேரைதோச குணம், வேரு கட்டும் முறை, படுக்கை

தோச குணம், பல தோசத்துக்கும் பிள்ளை கையில் கட்ட மருந்து, அஞ்சாம் மாதத்தின் குணம், கூகைப்பேயின் குணம், ஏழாம் மாதம் சிவ ஞானப் பேயின் குணம், எட்டாம் மாதம் சிவ கரிப்பேயின் குணம், ஆண்டு தோசம், பல தோசத்துக்கும் கும்பம் செபிக்க முறை, கும்பம் செபிக்க மந்திரம், பிள்ளைகளுக்குத் திருநீரிட அட்சரம்-மந்திரம், தன்னெப் பூசிக்க மந்திரம், வெள்ளம் ஓதி முகத்திலெறிய, கும்பம் செபித்து முகத்திலெறிய, கணபதியை, விளக்கை, கும்பத்தைப் பூசிக்க மந்திரங்கள், கும்பம் செபிக்கச் சொடுக்கு மந்திரம், சகலதோசத்துக்கும் வெள்ளம் ஓதி எறிய மந்திரம், கும்பம் செபிக்க மூலமந்திரம், பந்த மெடுத்துப் பார்க்க, அர்த்தம் ஒழிவான மந்திரம், அர்த்தம் கொண்டு அழுத்துவான், தெள்ளி எறிவான் மந்திரம், வெள்ளம் கோரி ஒழிவான மந்திரம், குழந்தைகளுக்கு வெள்ளம் ஓதி எறிய, பிள்ளைப் பிணிக்கு வெள்ளம் ஓதி எறிய, உருவு பூசிப்பான முறை, கோழி உழிவான மந்திரம், பிள்ளைப் பிணிக்குத் திருநீரிடுவானும், உழிவானும் மந்திரம், சகலதோசத்தின் குணம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 960. நவரத்தின வராகி மாலை

**அ. 214:424; ஆ.** 7 ஏடுகள்; **இ.** 12.5 x 4.5 செ.மீ.; **ஈ.** 9-11 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

அரவுக்கு மந்திரமா மல்கைக்கு எந்திரமாம்
இரவுக்கு நல்ல துணையிதுவாம் - பாவ
தவமுத்தி யுண்டாஞ் சங்கமிதன் பேரில்
நவரத்தின மாலைதனை நல்கு.
பயங்கரி அகோரி கவுமாரி நீலிதன் பத்தரோடு
நயங்களீ [illegible]ன்றிப் பகைக்கு மவர்களை நடுங்கவுள்ள
மயங்கக் கிழித்துக் குடல்மாலை யிட்டுஇவ் வையமெல்லாந்
தயங்க நடிக்கும் வராகி யென்றேமறை சாத்திடுமே.

முடிவு

கட்டென்ன பிரம்மாவின் கட்டே ஆணை
கணபதிநமாஉந்தன் கட்டே ஆணை
விஷ்ணுவின் கட்டென்ன கட்டே ஆணை
வேலவனார் கட்டென்ன கட்டே ஆணை
எட்டுவிஞ்சை அய்யனார் கட்டே ஆணை
ஈசுவரனார் கட்டென்ன கட்டே ஆணை
துஷ்டவயி ரவிகட்டு வீர பத்திர
துர்க்கையார் கட்டென்ன சுருங்கத் தானே.

குறிப்புரை

கட்டு, ஆணை, மாரணம், வசியம், பஞ்சபட்சி முதலான மந்திரச் செயற்பாடுகளைக் கூறும் இந்நூலில்மாந்திரீகத்திற்குத் தக்கபடி மனித உருவங்கள், கட்டங்கள், சக்கரங்கள் முதலானவை வரையப்பட்டுள்ளன.

## 961. பட்சிணி விஞ்சைவூர்தி

**அ.** 516:798; **ஆ.** *1-4* ஏடுகள்; **இ.** 30 x 3.5 செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

சிவ்வள வுருத்திரன் முடிமே லானான்
சேவலது புயமாகி யானான்
மகாநிற மானவல் வினையை விதிவிதிக்கு மரன்யிடது
மாகினான் நற்சத்தி வடிவேலா
சூரரைவென்ற மவ்வு சிவவோறு நவ்வினும்
யெழுத்தை மசி-நசி-யென்று
உருலச்ச மாகில் வெவ்வுணர்வு யாயுபோல்
வேல்முருகர் சர்வசங் காரமாமே (2)

முடிவு

அருளுகின்ற விஞ்சையது யாருக் கானால்
அரன்மாலைப் பணிந்துண்மை அறிவுள் ளோர்க்கும்

குருவிசு வாசம் நன்றி மறவாத
குணமிகுந்த பெரியோ ருக்குக் கூறலாம்
அருளுடைய மனத்தாருக்கும் நெஞ்சில் வஞ்சம்
அத்தோர்க்கும் அரன்செயலோர்க் கரைய லாகும்
அருளுகின்றோம் புவியதனில் மாத ராசை
வையாத மனந்தெளிந்த அறிவுள் ளோர்க்கே (19)

குறிப்புரை: சுப்பிரமணியர் குறுமுனிகள் அருளிய பட்சிணி விஞ்சைவூர்தி

'சீர்மேவு வானவ யபிராமி சூலி திரிபுரை சங்காரி வாழிவாழி' எனத் தொடங்கும் **காப்புப் பாடலுடன் 19 பாடல்கள் உள்ளன.** முருகனைப் பூசை செய்து மந்திரத்தை இலட்சம் முறை செபித்தால் ஆலகால விசங்கள் கூட நாஸ்த்தியாகும், ஊருக்குள் விசமண்டாது, ஏவல், பில்லி, வஞ்சனை, சூனியம், கண்ணேறு அணுகாது என்றும், வரைந்த எந்திரத்தைச் சிரசினில் அணிந்து மூன்றெழுத்து ஓதுவோர்க்குப் பண்டான வினை, இராசபிளவை, வீக்கம், சுரம், குட்டம், பெருவியாதி நீங்கும் என்றும் கூறும் இந்நூலின்வழி துன்பம், நோய் ஏற்பட்டால் இறையை நினைத்து ஆவன செய்ய நீங்கும் என்பதை அறிய முடிகின்றது.

## 962. பதினாறு வீட்டில் ஏவல் இலக்கம் போடும் விபரம்

**அ. 509:785; ஆ.** 77 வது ஏடு; **இ.** 40 x 3 செ.மீ; **ஈ.** 6 வரிகள்; **உ.** சற்றுச் சிதைவு; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

பதினாறு வீடு போட்டு
அதுக்குத் தோது அச்சரம் முதல்வீட்டில்
அகாரம் ரெண்டாம் வீட்டில்
சகாரம் மூனாம் வீட்டில்
தகாரம் நாலாம் வீட்டில்

முடிவு

ஒருவர் போடச் சொன்ன கூடுமான துகைப்படி போடு ... சரிசெய்யவே மேற்படி யிதுக்குச் சொன்ன துகையைப்பாதி பண்ணிப் பாதியில் ஒண்ணைத் தள்ளி அமைத்த துகையைப் பாட்டில் சொல்லிய தோதச்சர் - அத் - தில் போடும்போது போடப்போட ஒண்ணு குறச்சுப் போட்டுப் பார்த்தால் ஒருவர் சொன்ன கூடிய துகைச் சரியாயிருக்கும்.

முற்றும்.

பதினாறு வீட்டு விபரம் அறியும்படி அமைத்த வீட்டுக்குத் துகை போடுவது. பாடலில் சொல்லிய பிஞ்ஞகனில் தொடுத் துத் தொடுத்துப் பானுவைச் சேந்த வீட்டு யிறக்கத்தி லறியவும்.

குறிப்புரை

77 ஆவது ஏட்டின் முன்பகுதியில் தொடங்கி, பின்பகுதியில் முடிகின்றது. மந்திரம் தொடர்பான செய்தி கணக்கிடு முறையுடன் கூறப் பெறுகின்றது. இதனையடுத்து உடைந்த ஓர் ஏட்டில் சக்கரம், அச்சரம் தொடர்பான படங்களும் விளக்கமும் உள்ளன. பதினாறு வீடுள்ள கட்டம் போட்டு அதில் அகாரம், பகாரம் முதலான மந்திரங்களை எழுதி எந்தக் கர்மத்தைச் செய்ய வேண்டுமோ அதனை அதில் அமைத்து அக்கர்மம் நடைபெறும் வழிமுறை கூறப்படுகிறது.

## 963. பதினாறு வீட்டில் ஏவல் இலக்கம் அடைக்கக் கக்கிசம்

**அ.** 509:784; **ஆ.** 76-77 ஏடுகள்; **இ.** 40 x 3 செ.மீ.; **ஈ.** 6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

மேஷமோ டாறுங் கீழே மிகவுடன் மூன்றுங் கீறி
பேசவே மிதுன நான்கு பின்பு கற்கடக மஞ்சு
வாசமாந் துலாத்தி லொன்று அதினுள்ளே அஷ்ட்ட சத்தி
பாசமாந் தனுவி லேழு பகர்ந்திட மகரம் ரெண்டே

முடிவு

யீச னாலு வேதங் கொழுந்தன்
தத்தியென் றாடுந் திரியம்பக மூர்த்தி
தீரநாடு சமையத் தலைவன்
பாதி யதனில் பருந்தொன்றை நீக்கி
பிஞ்ஞுக நிருதாழன் மலர் சாற்றி
சீவன் - அவ்வுயிர் - தானே - தன்னிலை - ஆனந்தம்
சிற்பரை - பினாகபாணி - பேணித்தொழு வோமே

முற்றும்

குறிப்புரை: **பதினாறு வீட்டில் யேவல் இலக்கம் அடைக்க வேணுமென்றாலும் கக்கிஷம்**

76-ஆவது ஏட்டின் பின் பகுதியில் தொடங்கி 77-ஆவது ஏட்டின் முன்பகுதியில் முடிவு பெறுகிறது. சோதிடத்துடன் தொடர்புபடுத்தி மந்திரச் செய்தி கூறப்பெறுகின்றது.

## 964. பலவகை மந்திரங்கள்

**அ.** 190:390; **ஆ.** 4-55 (46 ஏடுகள்); **இ.** 22X3 செ.மீ.; **ஈ.** 7-8 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

இன்ன தன்மையிந் நூலி னைக்கவி
ராச ராசவ ரோதயன்
மன்ன னம்பிர மாதி ராயன்
வடித்த ரும்பொருள் கூறவே
கன்ன லஞ்சிலை வேளெ னுங்கவி
ராச பண்டித வீரையான்
சொன்ன யம்பெறு காவி யக்கவி
சொல்ல வென்றுதொ டங்குவாம் (5)

இத்தமிழ் கூறினாரின்னாரென்று பாயிரஞ் சொல்லுதற் குரியார் சொல்லப்படுவது.

முடிவு

பரம்பெறுதல்

வேத நுண்பொரு ளாதி சுந்தரி
வீடி டங்களு நேர்தரு
ஈத றிந்துவி டாதொ ழுங்கவி
ராச பண்டித வீரையான்
ஆத ரஞ்சகி தாள்பெ றுந்திரு
நாம மொன்பது நூறுமே
யோதி னன்பவ போக முஞ்சிவ
லோக மும்பெறு வார்களே (104)

குறிப்புரை

**பாட்டும் உரையுமாக 5-104 பாடல்கள் உள்ளன.** தடைவிலக, வச்சிரமோகினி, ஞானபோதகம், குடிவிலக்கல், சித்திவித்தை, படைவிலக்கல், ஸ்ரீ வசீகரம், தீ விலக்கல், இருள்விலகல், இடி விலகல், நஞ்சுக்கும் பாம்புக்கும் சுரத்துக்கும், கவிஞர் குலமறிதல், தியான போதம், ஆறுதீர்த்தக்கரையேற, நீர்ப்பாட்டுக்கு அக்கினி எரிவடக்கல், நாவடக்கம், மங்கல சூத்திரம் மோகினி தெரிய, குருஞான போதகம் - சோதி, அமரி, விஷத்துக்கும் நஞ்சுக்கும், தமிழ்வாணி போதகம்- கலியாணம், அக்கின்கட்டு, படுவன் பருவுக்கு, ஸ்ரீபெலம் அனுபோக சித்தி, பிசாசு விலக, கெற்பவிப்புருதிக்கு, வற்றிச்சிறுத்தவர் பெருக்க, வயத்தில் பிள்ளை மத்திச்சால், சடஞ்சுத்தியாக, ராவழிநடக்க, சபையடக்கம், அன்னவர் தரித்திரியம் வெட்ட, இராச சதை விலக்கல் - அனுபோக சித்தி உண்டாக, சவுந்தர்யலகரி - ஊர்வன பலவுந் தீண்டாமல், உச்சாடனம், பிறர்மனை விருப்பம், ஸ்ரீ வசீகரம், தன்னிலை பெற்று வாழ்தல், தானுந் தலைவியும் நிலைக்குச் சேர்தல், ஸ்ரீ வாழச் செபித்தல், விகார வெற்பு நோட்டம், தேவியுடமகிமை, முலைசுரக்க, பாலக்கிரி கைக்கு, துணுக்கு, பிள்ளையழுகிறதுக்கு, பெண்டுகள் வலிப்புக்கு, இருப்புக்கு, பிறவலிப்புக்கு, தலைவனைப் பெற்று வாழ்தல், ருதுவாகாப் பெண்ருதுவாக, சரீரம் உலருகிற பேருக்கு, தன்விகாரமடக்க, தண்ணீர் தாகமடக்க, சூதுவெல்லு கிறதுக்கு, முலைப்பால் சுரக்க, புத்திரருண்டா

தல், சிறுத்தமுலை பால்சுரக்க, மதகர்விலகல், சுயம்பாட, வானங்குண்டு அம்புவிலக்கல், யாகம் வளர்க்கப் பரிவிலக் கல், பாணம், வளையம், அம்பு விலக்கல், பகை விலக்கல், செய்யும் விகார மந்திரம், நாடு கொண்டாடுதல், தேவியு டைய பிரகாசம், தவம்பெற்று வாழ்தல், வெயிலோன் சோதியாம், பரமபதம், அடியார் பெரும் இம்மை மறுமை முதலானவற்றிற்குரிய மந்திரங்களும் அவற்றுக்குரிய சக்கரங்களும் தெளிவாகக் கூறப்பெற்றுள்ளன.

## 965. புலிப்பாணி சாலத்திரட்டு

**அ.** **513:791;** **ஆ.** *1-37* (*38*) ஏடுகள்; **இ.** *30*X*3.5* செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. புலிப்பாணி பலதிரட்டு ஜாலம் என்ற நூல் (*1882*) அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பாரப்பா ஜாலமொடு சல்லிய மொட்டியம்
பாங்கான ஒட்டியம்தொட் டாவி சித்து
சாரப்பா நொடியானும் மொட்டியான வித்தை
சார்வான கிரிகருணை யொட்டா ரந்தான்
காரப்பா சித்துலட்சங் கள்சடா வித்தை
கருவான கிக்கிசமு பஞ்ச பச்சி
வாரப்பா சீனி வித்தை மாந்தரீகம்
வளமான படுபச்சி கைவல்ய மாமே (2)

முடிவு

ஆமேநீ கெந்தியிட்டுச் செந்திரி யத்தால்
அப்பனே நவகோணம் தன்னில் வேதை
வாமேநீ இருநூறு மிந்திர ஜாலம்
வளமான கண்ணாடி போலே தோற்றும்
தாமேநீ நவரத்தினங் கோத்தாப் போல
தரணிதனில் தான்விளங்கும் புலிப்பாணி தானும்
நாமேநீ போகருட கடாச்சத் தாலே
நலமான ஜாலமிரு நூறு முற்றே (202)

புலிப்பாணி ஜாலத்திரட்டு முற்றும்.

குறிப்புரை: புலிப்பாணிமகாமுனிவர்அருளிச்செய்த ஜாலமந்திரம்

'சித்தியே தயாபரியே ஞானநூலி சாம்பவியே மனோன் மணியே' என்று தொடங்கும் **காப்புப் பாடலுடன் 202 பாடல்கள் உள்ளன.** காப்புப்பாடல் உள்ள ஏட்டிற்கு எண் இல்லை. கண்கட்டு வித்தை, பச்சைப்பாம்பு வித்தை, மூலிகை, ஜாலம், தெய்வ ஜாலம் எலுமிச்சம் பழ, வித்தை, பாம்பு காணாமல் இருக்க, எக்காளசாலம், அக்கினி சாலம், எச்சணி ஜாலம், மாம்பழ ஜாலம், மயேந்திர ஜாலம், சமுத்திர ஜாலம், சங்கிலி ஜாலம், பட்டண சாலம், பிசாசு சாலம், சண்டை ஜாலம், மாடன மந்திரம், கொள்ளி ஜாலம், கவசமந்திரம், ஒண்டி மூலிகை, பாதாள அஞ்சனம், குறி சொல்ல, ஈடு மூன்று, தாதுபுஷ்டி, பூத பிசாசு விநோதம், வினோத ஜாலம், சிலை மெழுகு பாவை, மோடிவித்தை, சிங்கிரி மகிமை, நற்சிங்க மந்திரம், அயச்செம்பு, இரசமணி முதலான தலைப்புகள் உள்ளன.

## 966. புலிப்பாணி சிதம்பரம் 25

**அ.** **513 : 792;** **ஆ.** *38-44* ஏடுகள்; **இ.** *30X5.3* செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சற்றுக் கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. புலிப்பாணி முனிவர் பலதிரட்டு ஜால சிதம்பர பூஜை *(1873)* என்ற நூல் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

காப்பான ஆறுவகைக் குறுக்கே கீரிக்
கலக்கமிலா ஆறுவரை நேரே கீரி
ஆப்பான இருவத்தஞ் சிரையு மாச்சு
அடைவான முனைதோறும் சூலம்போடு
தாப்பான முதலரையில் நாலுக் கோணம்
தயவான நகாரமொடு அகாரம் கூட
வாப்பான ஐயோடு வகாரம் தானும்
வளமான லக்கமது பத்து மாமே (1)

முடிவு

ஆமடா இரையாறு வீச மாகும்
அப்பனே பனிரண்டு அரைக்கா லாகும்
தாமடா மூவெட்டுக் காலே யாகும்
தயவாக இதிலரைப்படி யரையே யாகும்
வாமடா இதிலிரட்டி முழுதென் பார்கள்
வளமான கனமப்பா நேரக் கனந்தான்
நாமடா வீசமது ஒருநெல் லாகும்
நலமான சிதம்பரத்தின் பூசை முற்றே (25)

பிற்குறிப்பு

சுக்குல வருசம் ஆவணி மாதம் நான்காம் தேதி எழுதி முடிஞ்சிது.

குறிப்புரை: புலிப்பாணி முனிவர் அருளிச்செய்த சிதம்பரம் 25

'அத்தி முகன்தனை யளித்த ஊரனே காப்பு' எனத் தொடங்கும் காப்புப்பாடல் நீங்கலாக **ஒன்று முதல் 25 பாடல்கள்** உள்ளன.பாடல் முடிந்தபின் 44ஆவது ஏட்டில் சக்கரமும் அதுபற்றிய செய்தியும் உள்ளன. சக்கரம், சுத்திப்போடுதல், வசியம், தம்பனம், உச்சாடனம், அகார, உகார, மகாரம், நயவசம வித்துவேஷணம், சிவயநம, மாரணம், பூசைமார்க்கம், வெள்ளி மாரணம் என்பன போன்ற செய்திகளைக் கூறும் இந்நூல் மந்திரங்களைக் கூறிய முறைப்படி கடைப்படித் தொழுகினால் அட்ட சித்துஞ் சித்தியாகும், எண்ணியது யாவுங் கைகூடும் என்று கூறுகின்றது.

## 967. புலிப்பாணி நாயனார் பாடிய கருவு உச்சாடனம்

**அ. 485:734; ஆ.** 5-7 ஏடுகள்; **இ.** 21 x 2.5 செ.மீ.; **ஈ.** 5 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

ஆமேனி மூஞ்சுரைப் பய்யர் வாங்கி
அப்பனே யெதிரி நிர்மலமும் மண்ணும்

வீமேனி யிதில்செலுத்தி பஞ்சு வெட்டும்
விதமான குத்தட்டி யிறுக்கிக் கட்டி
நாமேனிக் கும்நமோ உச்சிட்ட' காளி
தயவாகி யேகியேக வாகா வென்று
வாமேனில வும்உருஞ் சித்திவள மாக
புத்தில் கட்ட ஒபத்திர மாமே (1)

முடிவு

பாதியே படிவாசல் தூவிப் போட்டு
பதிகெட்டு விட்டோடிப் பிரிந்து போவார்
வாதியே வடமொழியில் சொன்னேன் மார்க்கம்
வையகத்தோர் தான்பிழைக்க வாழ்த்தி னென்பார்
ஆதியே போகரும் கடாட்சத் தாலே
அன்பாகப் புலிப்பாணி பாடினேனே

## மந்திரம்

தூமசி தூமதூம சீசீ போபோ ஓம் திரி பிரியந் சிந் சுவாகாயென்று உரு செபித்துத் தூபம் தீபம் தேங்காய் பாரு இலை நெய்வேத்தியம் மங்கள வார நாள் செய்து வைக்கவும். பிரியும் வித்து வேசனமாமே கைகண்டது அறியவும்.

குறிப்புரை

உச்சாட முனியின் அடைப்பு மாரணம் படுக்கை செய்வது என்ற தலைப்பு நூல்தலைப்பிற்கு மேலே எழுதப்பட்டுள்ளது. மந்திரத்தால் நலம் பெறும் வகை கூறப்படுகிறது. பிசாசை ஏவுதல், எதிரியை மந்திரத்தால் இறக்கச் செய்தல், நட்பாகிய விடத்து விரோதஞ் செய்விப்பதாகிய செயல் முதலானவற்றை மந்திரத்தின் உதவியுடன் செய்யும் முறைகள் கூறப்பெற்றுள்ளன.

## 968. புலிப்பாணி நாயனார் பாடிய கருவு உச்சாடனம்

**அ.** 565:917; **ஆ.** 5-7 ஏடுகள்; **இ.** 31 x 2.5 செ.மீ.; **ஈ.** 5 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

குறிப்புரை

*485:734* இல் அமையும் தொடக்க முடிவுப் பாடல்களே இதிலும் இடம் பெறுகின்றன. இறுதிப்பாடல் முடிந்தபின் ''மந்திரம் - உரு *1008* தூமசி-தூமதூம சீசீ போபோ ஓம் திரி பிரிய நசி நசி சுவாகாயென்று உரு செபித்துத் தூபதீபம் தேங்காய், பழம், வெற்றிலை நெய்வேத்தியம், மங்கள வாரநாள் செய்து வைக்கவும். பிரியும் வித்து வேசனமாகும். கைகண்டது அறியவும்'' என்றுள்ளது. நூற் தலைப்பிற்கு மேல் ''உச்சாடனம் முன்பின் அடைப்பு மாரணம் படுக்கை செய்வது'' என்று எழுதப்பட்டுள்ளது. புலிப்பாணி நாயனார் பாடினது வித்துவேசனம் செய்கிறது. சினேகம் பிரிதல், ஸ்ரீகள் புருசனைப் பிரிதல், சகலவிதமும் பிரிதலாகும்படி கருவுபூசை செய்வது அறியவும் என்ற உட்தலைப்புகள் உள்ளன. புலிப்பாணியின் கருவு உச்சாடனம் என்ற நூலினுள் வரும் பகுதிகளுள் மேற்சுட்டிய பகுதிகள் மட்டும் இந்நூலில் தரப்பட்டுள்ளன.

மந்திரச் சுவடிகளிலுள்ள செய்திகளின்வழி, பேராற்றல் மிக்க செயற்பாடுகளைச் செய்யுதற்கு வழிமுறைகள் கூறப்பட்டுள்ளன என்பதை அறிய முடிகிறது. இவ்வாற்றல் மிகு செயற்பாடுகளுள் செய்வினை மந்திரம், ஏவல், பில்லிசூனியம், குட்டிச்சாத்தான், குறளிவித்தை முதலானவை அழிவு வேலைகளுக்காகப் பயன்படுத்தப் படுதல் பெருகியநிலை காணப்படுகின்றது. பிறருக்குத் துன்பம் தருதல், பெண்ணை வசியம் செய்தல் முதலான வற்றில் மந்திர சக்தி தீய சக்தியாகப் பயன்படுத்தப்படுதல் நடைமுறையில் இன்றும் காணப்படுகின்றது. இத்தகைய செயற்பாடுகளால் 'மந்திரக்கலை' எனும் இவ்வரிய கலை பெரிதும் புறக்கணிக்கப்படுகிற நிலை உருவாகி வருகிறது. இங்ஙனம் தீமை செய்வதற்கும், அழிவு சக்தியாகவும், கீழான மோக வசப்படலுக்குமாகப் பயன்படுத்தியதால் மட்டுமின்றி, குருவின் நேரடிப் பயிற்சி மூலமே மந்திரக் கலையைக் கற்றுத் தேற வேண்டும் என்ற நிலை, குரு கற்போருக்கு முக்கிய சில மந்திரக் கூறுகளை மறைத்தல், மந்திரக் கலையில் வல்லவர் குறிப்பிட்ட மலை நாட்டுப்

பகுதிகளில் வாழ்தல், மந்திரக்கலையில் வல்லவர்களின் மரணங்களோடு இவர்கள் கற்ற மந்திரக் கலையும் புதையுண்டு போனமை முதலான காரணங்களாலும் மந்திரக்கலை வீழ்ச்சியை எட்டி வருகிறது.

## 969. மச்சமுனி மனோன்மணி மைப்பெருநூல் 800

**அ.** 207:416; **ஆ.**1-7 ஏடுகள்; **இ.** 13.5X2 செ.மீ.; **ஈ.** 7-8 வரிகள்; **உ.** ஏடுகள் முறிந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை, இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பொருளான பூரணமா யிருந்த சூட்சம்
புகலார்கள் நாதர்கள் புகலக் கேளு
அருளான மாடாடு பெண்ணான அனைத்து
வழியாகப் பிறந்திருக்கும் செகத்தி லப்பா
மருளாமல் மதினுடைய குழம்பு நாலும்
வரிப்போலே அவலவளாய் சீவி நாழி
வெருளாமல் கொம்பதிலே உழக்குச் சீவி
மேலாக வேயுழக்குக் கலசத் திட்டே (212)

முடிவு

படுத்தலாம் மையதனைக் கையில் பூசி
பாவையரைக் கைப்பிடித்துப் பரீட்சை பாரு
தொடுத்தலாய்த் திரிவமென்று புணரச் சொல்வாள்
சுரணைகெட்டு நினைவுகெட்டு நாணங் கெட்டு
அடுத்தலாய் அணுகியுன்னை அணைவாள் நாளும்
அனவரத காலமுமே அகல மாட்டாள்
விடுத்தலாய் நினைத்தாலும் உனைவி டாள்பார்
விலக்கவென்றால் விதியென்ன பதிவு தானே (217)

குருவே துணை.

குறிப்புரை

**213-217 பாடல்கள்.** மனோன்மணி என்னும் மையின் செய்முறையும் பயனும் கூறும் இந்நூல் மச்சமுனி இயற்றியது. ஆதலின் மச்சமுனி மனோன்மணி மைப் பெருநூல் என்ற பெயரைப் பெற்றுள்ளது. 800 பாடல் களிலான இப்பெரு நூலிலிருந்து ஆறுபாடல்கள் மட்டுமே இதில் எடுத்தெழுதப் பெற்றுள்ளன. முழுநூலின் ஒரு பகுதியே ஆயினும் ஒரு மைவகை பற்றிய முழுமையான செய்தியை உடையது. தான் விரும்பிய பெண்ணை அடைந்து, அவளுடன் கூடுவதற்கு உதவும் மையின் செய்முறையும், அதனைப் பயன்படுத்தும் முறையும், அதைப் பயன்படுத்திய பின் தான் விரும்பிய பெண் எப்படியெல்லாம் நடந்து கொள்வாள், எதிர்காலத்தில் எப்படியிருப்பாள் என்பவையும் விளக்கம் பெறுகின்றன. அச்சுநூல் : மச்சமுனி பெருநூல்-800, 1985.

## 970. மந்திர அரிச்சுவடி

**அ.** 194:394; **ஆ.** 52 ஏடுகள்; **இ.** 24X2 செ.மீ.; **ஈ.** 3-5 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; சில ஏடுகள் சிதைந் துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

ஓங்கார ரூபனே ஓம்நமசி வாயனே
 ஓம்நமோ நாராயணா
ஓமென்ற அட்சரம் ஆமென்ற அட்சரம்
 ஓம்நமசி வாயஅட்சரம்
பாங்கான ரூபனே பலகார முக்கனி
 பயர்அவல் கடலைதுவரை
பட்சிக்கு மகிழ்ச்சியாய்ப் பேழைவயி றாறுமுகப்
 பன்னிரு கரத்தலைவனே!
தேங்காயும் வாழையும் வாவியும் சோலையும்
 தீவனூர் எல்லைவளரும்
பாங்கான கரத்துடன் பொய்யாத கணபதி
 சடுதியாய் வந்துதவுவாய்
சகடகட கிடவிகட சடசட நடனமிடும்
 தாந்தோணிப் பிள்ளையாரே

முடிவு

கொண்டல்வண்ணா உன்மாயம் ஒன்றோ
கோடானு கோடி கோபியர் துகிலெடுத்து
ஓடாமல் நின்று ஒளித் தாயே (கொண்டல்)
தாடாஅம் மாதர் ஆடையைக் கேட்கத்தம்
இருகரத்தையும் சரணமாய்க் கூப்பி

குறிப்புரை

மந்திரங்களைக் கற்க விரும்புவோர் முதலில் இறைவனை வணங்கும் முறையறிய வேண்டும் என்பதற்காகப் பல இறை வணக்கப்பாடல்கள் அமைகின்றன. தொடர்ந்து ஓம் சரவணபவ, ஓம் தன்கட்டு, இருப்புக்கட்டு என்பனவற் றிற்கு மந்திரங்கள் கூறப்பெற்றுள்ளன. 'கந்தர்சஷ்டி' போன்ற நூல்களில் சிலபகுதிகள் இடையிடையே அமை கின்றன. சில சக்கரங்களும் அட்சரங்களும் காணப்படு கின்றன. ஏடுகள் பலவாறான ஓலைகளால் ஆனவை. முதல் 28 ஏடுகள் வரை வரிசையாக எண்கள் உள்ளன. பிற எண்களின்றித் தொடர்பில்லாது உள்ளன.

## 971. மந்திரத்திரட்டு

**அ. 336:568; ஆ.** *1-320* ஏடுகள்; **இ.** 21 x 3.5 செ.மீ; **ஈ.** *6-8* வரிகள்; **உ** நன்று; இடையிடையே பல ஏடுகள் முறிந்தும் சிதைந்தும் உள்ளன; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சூலிசூலி மாதங்கி நீலிநீலி மாதங்கி
நிர்மலி கொங்கணி சத்தி சாமந்தரூபி நயனந்தி
சீவலந் திருத்திரி ருத்திரோகாரி வலத்தி
சேரகவத்தி ஓம்ஓம் தண்டுதண்டு.... (ஏடு.8)

முடிவு

பகையை வெல்ல

அரியமன் கோவில் நீடிக்கச் சேர்கினிற் பாத மேத்த
வுரியநம் பதத்தை யீதோ வுறுமென்பப் பெறாது பெம்மான்
எரிவுர மரத்தை நோக்குமியல்பினைக் கேட்டு யானுன்
வரிமலர் பாதம் போத்து மவள்ஏக சுருபி மேலத்தே-
பாதபூசை வாமபூசை மனத்தில் ரிசபமானது நிவேத்தியம்.

குறிப்புரை

**பாடலும் உரைநடையும் கலந்தது**. ஒன்று முதல் ஏழு ஏடுகளில் சொல் கேளாத பேய்க் கெழுதிக் கட்டச் சக்கரம், மோகினிக்கு எழுதிக் கட்டச் சக்கரம், ஒரு தலைவலிக்குக் கட்டச் சக்கரம், விக்கினேஸ்வர மந்திரம் செபிக்க அனுமந்த சக்கரம், நாலா மாரலுக்கு எந்திரம், சத்திசக்கரம், முதலான சக்கரங்கள் போடப் பெற்றுள்ளன. எட்டாம் ஏட்டில் சத்திமந்திரம் எழுதப்பெற்றுள்ளது. தொடர்ந்து அனுமார் உச்சாடனம், பிள்ளையில்லாத பேருக்கு மந்திரம், பாம்புத் தடைக்கு மந்திரம், கெருடபஞ்சாக்கரம், பில்லி சூனியத்துக்குச் சக்கரம், முலைக்குத்து மந்திரம், வீரபத்திர சக்கரம் பேய்களுக்குக் கட்ட, லீலா காளிசக்கரம் தக்காத பிள்ளைக்கு எழுதிக் கட்டவும், பத்திரகாளிச் சக்கரம் பிசாசுக்கு எழுதிக் கட்ட, திசை கட்டு எந்திரம், திருடர்கள் வராமல் எந்திரம், மாட்டு நோவுக்கு எழுதிக் கட்ட, மோகினிக்குக் கட்டச் சக்கரம், முலை சுரவாத பேருக்கு, வாழாத பெண்ணுக்கு, நித்திரையில் மூத்திரம் பெய்யும் பேருக்கு, பல்லு கடிக்கிற பிள்ளைக்கு, ஒரு தலைவலிக்கு, வைப்பு முறிய குளிசம், வயத்து நோவுக்கு வெற்றிலையில் எழுதிக் கொடுக்க, எண்ணை ஓத மந்திரம், பயிர்க் குழியில் எலி கடியாமல் கட்ட, நாவாய்க்கு எந்திரம், பிள்ளை உண்டாக மருந்து, தீட்டு வாராத பேருக்குக் கண்டது, அனுமன் உச்சாடனம், அனுமந்த மந்திரம், கெருடபஞ்சாக்கரம், ஆனைகள் விடுவிக்கிறதுக்கு மந்திரம், பிள்ளை பெறமாட்டாதவளுக்கு எண்ணை, ஸ்ரீ வசியம் - அடங்காதவளுக்கு, சருவ அஞ்சனம் - விநோதம், அனுபோகமில்லாதவளுக்கு, பால் குடியாத பிள்ளைக்கு,

ஆடாத பேய்க்குத் தலையில் வைக்க, புருசனுக்குக் கட்ட பெஞ்சாதி சேருவாள், சீதை சக்கரம், பூரண சத்தி சக்கரம், காலபயிரவன் சக்கரம், சுப்பிரமணியர் சக்கரம், கணபதி சக்கரம், துர்க்கை சக்கரம், ருத்திர அகோர, சர்வ கோர சக்கரம், ருத்திர சகோரம், பேயிக்குக் கட்டச் சக்கரம், எதிரேத்தும் மந்திரம், வேதாள மந்திரம், கெடுதலுக்குச் சன்னியாசி மந்திரம், வீரபத்திர செபம், மலையாள பகவதி ஆவேசு மந்திரம், வசீகரத்துக்கு மந்திரம், வயிரவ மந்திரம், வீரபத்திர மந்திரம், சுப்பிரமணிய கவசம், பச்சொடுக்கு, வயிரவகாளி மந்திரம், பச்சொடுக்கு எதிரேற்று மந்திரம், அரவுளி பச்சொடுக்கு எதிரேற்று மந்திரம், திக்கு பந்தனம், மோகனி மந்திரம், காமாலைக்கு மந்திரம், மாட்டுக்குத் திஷ்டி மந்திரம், விபூதி மந்திரம், எதிரேற்றல், பணமோடி வைக்க மந்திரம், கறுப்பன் உச்சாடனம், கிண்ணி விட மந்திரம், பத்திரகாளி மந்திரம், கணபதி மந்திரம், கன்னப் பிசாசு மந்திரம், மூல மந்திரம், வெட்டுப் பட்டதுக்கு மந்திரம், காளி மந்திரம், காட்டேரி செபம், காட்டேரி அழைப்பு, கட்டு மந்திரம், பிசாசு, முனிநாட்ட மந்திரம், ஆறுமுலை வீரபத்திர செபத்தியானம், கட்டு, மோகினி உச்சாடனம், எதிரி அழைப்பு, கெடுதலுக்குக் கட்டும் மந்திரம், ஸ்ரீ பாலர் மந்திரம், சூனியம் அழிய மந்திரம், அரவுளி மந்திரம், எலிகடிக்கு மந்திரம், வீரபத்திர உச்சா டனம், இருளன் மந்திரம், எதிராளி வாய் கட்ட, வீரபத்திரன் அகவல், அனுமந்த செபம், கெருடனிட தோத்திரம் சுப்பிரமணியர் அகவல், அம்பிகை மாலை (30 பாடல்கள்), மூலிகை வயனம் (*182-217* ஏடுகள்), அஞ்சனக் காப்பு, சர்வ வித்துவேசனம், சாவல் பலிகொடுத்துப் பிடுங்கும் மந்திரம், காமதேவ மந்திரம், அக்கினி பேதனம், பேதனத்துருவம், மரண மூலிகை, புருசமோகனம், ஊமத்தைப் பிடுங்கி வர மந்திரம் காப்பு கட்டி தூப தீபங் குடுத்துத் தேங்காயுடைத்துப் பிடுங்கும் மந்திரம், வேத மந்திரஞ் சொல்லிப் பிடுங்க மந்திரம், மோகன மூலிகை வயனம், குளிக்கும் மந்திரம், கட்டுக்கொடி பிடுங்க மந்திரம், பரட்டை சமூலத்துடன் பிடுங்க மந்திரம், சக்கர வயனம், தேவ உச்சாடனம், ராச வித்துவேசனம், கோழி அவரைக்குச் சோதிநாள் காப்பு கட்டி சித்திரை நாள் பிடுங்க மந்திரம், முக வசீகரம், குளிகை சேர்க்க,

வசீகர மோகினி தடை விலக்கல், வசீகர மோகினிக்கு புத்திரருண்டாதல், சிவசத்தியின் பாதமறிவது, தெரிசினைத்தி யானம், ஞானபோதம், ஸ்ரீ வசீகரம், நஞ்சுக்கும் சுரத்துக்கும், தீவிலக்கல், தியான போதகம், ஆறுதீர்த்தக் கரை ஏற நீர்ப்பாட்டுக்கு, நாவடக்க மங்கல சூத்திரம், குருஞான போதகம், தலைவலிக்குத் தமிழ்வாழி போதகம், அக்கினிக் கட்டு, படுவன்பருவுக்கு, ஸ்ரீபலம், ஞானவருஷம், பிசாசு விலக்கல், கெர்ப்பவிப்புருதிக்கு, மணிபூரகச் சக்கரத்தில் தரிசிக்கும் இயல்பு, சபையடக்கம், சவுந்தரியலகிரி, ஊர்வன பலவுந் தீண்டாமை, தன்பிணி தீரல், பிள்ளைப் பிணிக்கு, பிறவலிப்புக்கு தலைவனைப் பெறுதல், வயிற்றுப் பிள்ளை பிறந்து சாகாமல், சரீரம் உலர்ந்து போற பேருக்கு, புத்திரருண்டாதல், தண்ணித்தாக மடங்க, சூதுவெல்ல, மதகிரி விலக்க, வெயிலோன் சோதியாடல், நோன்புப் பலனுண்டாக, நாடு கொண்டாள, சென வசீகரம், பகையை வெல்ல முதலான தலைப்புகளில் செய்திகள் இடம் பெறுகின்றன. இடையில் ‘வாக்குண்டாம்’ ‘அத்திமுகத் துத்தமனை’ எனும் காப்புப் பாடல்கள் உள்ளன. இச்சுவடி நூல் தொகுப்புச் செய்திகளைக் கொண்ட நூல்.

## 972. மந்திரத்திரட்டு

**அ.** **412:656;** **ஆ.** *1-31 (29)* ஏடுகள்; எண்ணில்லாத சில ஏடுகளும் இடையிலுள்ளன; **இ.** 17.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *10-11* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

அனுமர் தியானம்

ஓம் அனுமந்தனுக்கே
இராவணர் பட்டணம் சுட்டவனே வா
பரிமளம் சுமந்தவனே வா
கிருஷ்ணன் தூதனே வா
திரியெடுத்தோனே வா
உனக்கு வடிவு யிடதுபுறம்
சங்கு வலது புறம், நடுவே தோரணம், தோரணத்தின் மேலிருக்கும்

அனுமந்து யென்னை அறியாயோ. என் முன்னே வந்து எதிர்த்த சத்திராதிகளைப் .பிடித்தார் போலே பிடி.

முடிவு

மாரணத்துக்குச் சீட்டெழுதி அவன் தனங் கருவெடுத்து ஐயிங்காயமும் நாட்டுக் கருவும் கூட்டி அவித்துச் சீட்டிலே தடவி அவன் பேருங் கூட யெழுதிச் செவிக்கவும். மந்திரம்- உன்னாணை, உன்னை என்னையும் படைத்த பரமசிவன் ஆணை, நசிநசி என்று செவித்து, வெள்ளிகாத்தமை யன்று மறுகடத்தில் ஒரு சீட்டைப் பிச்சு உருவித் தினங் காலின் கீழ் வைக்கவும். ஒரு சீட்டை வண்ணான் கல்லுக்குக் கீழ் வைக்கவும். ஒரு சீட்டை அவன் வீட்டில் வைக்கவும். ஒரு சீட்டை விளக்கில் வாட்டவும் (ஏடு.*31*).

குறிப்புரை

**உரைநடை**. அகோர அனுமார் தியானம், தொண்டையில் முள்ளு நின்றால் பார்க்க, கணபதி, சுப்பிரமணி, சிங்கி, சல்லியவேலை, வளமடைய எண்ணை, சத்தி மரிக்க, ஓங்காரத்துக்கு, நெத்தியை யிருக்கிப் பிடித்துச் செவிக்கவும், வசியம். மூத்தவள் பிரிவு, சத்துரு வசியம், மோகனம், விடுமாடன், குட்டிச்சாத்தி மந்திரம். சர்வகட்டு கறுப்பண்ண மந்திரம், தேவி பூசைக்குத் தூமாபதி சக்கரம், மோகினி, சத்துருதம்பனம், கல்லெறி மாடன் முதலான தலைப்புகள் உள்ளன. இறுதியில் எண்ணில்லாத ஏடு ஒன்றில் குறளிருமாகி மந்திரமும், சக்கரங்களும் உள்ளன.

## 973. மந்திரத்திரட்டு

**அ. 482:731; ஆ.** *14-143* ஏடுகள்; *71*ஆவது ஏட்டிற்குப் பின் *11* ஏடுகளே உள்ளன; **இ.** 23.5 x 3.5 செ.மீ.; **ஈ. 5-7** வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சர்வ விசம் திஷ்டி

மங்கை உமைபங்கா! மணிமார்விலர் ஆரமே!
பொங்கு கடலைக் கடைந்த யோகமே!

செங்கண்ணால் திரிபுர மெரித்தோன்
தெய்வசிலைக் கயரை எரிய கொம்பா
எறங்கு எறங்கு சிவாயஓம் எறங்கு

முடிவு

**உச்சாடனம்**

ஓம் கிலியும் சவ்வும் சத்தி கணபதியே நமஹா. பட்டாலாசனம் தெற்கு முகம் செயம் சங்குமணி ஆக்கிராஷணம் - ஓம் ரீங் கிலியும் வாலை கணபதியே நமஹா. ஆசனுட்பட்டு வடகிழக்கு முகம் செயம் படிகமணி.

குறிப்புரை

**பாடலும் உரைநடையும்** கலந்தது.முதல் 13 ஏடுகள் இல்லையெனினும் உள்ள செய்திகள் அனைத்தும் முழுமைபெற்றுத் தனித்தனி மந்திரங்களாக அமைவதால் இதனை முற்றுப் பெற்ற சுவடியாகவே கொள்ளலாம். வாலைமந்திரம், பிசாசு அண்டாமல் ஆகர்ஷணம், திஷ்டிக்கு விபூதி பிடிக்க, அனல்வாங்க, வாய் புலம்புகிறதுக்கு, ஸ்திரீகளுடன் சேராத பேருக்கு, லோகவசியம் உலக மோகனம், மூலக் கணபதி மந்திரம், அரவு தடுக்க, பருவுக்கு, புழு, எரி பூச்சி விலக, புருசனோடு சேராத பேருக்கு மஞ்சள் ஓதிக் கொடுக்க, ஆவேசிக்க, வாய்புலம்புகிறதுக்கு, தலைநோவுக்கு, வில்லு முறிய, கண்கட்டு வித்தை, தூக்கு, சீலை காப்பு, விசம் இறங்க, குளிதோசத்துக்கு, அரையாப்பு, வாலை மூலம், முகம் அருள் வாங்க, சத்துரு ஓடிப்போக, மூத்தவள் மந்திரம், தொழுவத்தில் உணி பெருத்தால், கத்திரிப் பாம்பு விசத்துக்குக் கியாழம், எமதண்டனை நீங்க, தவப் பலன்பெற, சுப்பிரமணியர் மூலம், வராகி மூல மந்திரம், அஸ்தகிரிவராகி, மேற்படி விசங்களுக்குச் சூரணம், திண்டுகத்திரிக்கு ரத்தகத்திரிக்கு, அஷ்டகர்மம் விதிமுறை, நரசிங்க வாதமுறை, ஞானம் பெற, சுவாமி மந்திரம், பேயோட்டுதல், வெறி நீக்குதல், ஆசை விலக முதலான தலைப்புகள் உள்ளன. 17 ஆவது ஏட்டில் **வாலை சரஸ்வதி தியானம்-மூலம்** என்ற தலைப்பு உள்ளது. தவம், யோகம், ஞானம் என்பவற்றின் வழி அட்ட கருமம் செய்வதற்கான ஆற்றலைப் பெற மனது ஒருநிலைப்பட வேண்டும்.

அங்ஙனம் மனது ஒருநிலைப்பட எம்முறையில் மந்திரங்கள் உருச்செய்யப்பட வேண்டும் என்பதையும் நூல் கூறுகின்றது. கூறுகின்றது.

## 974. மந்திரம்

**அ.** 191:391; **ஆ.** *1-21* ஏடுகள்; **இ.** *20.5X3* செ.மீ. **ஈ.** 4-5 வரிகள்; **உ.** நல்ல நிலை; சில ஏடுகள் மிகச் சிறிதளவு உடைந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

> சல்லியம் மாரணம் .... மோகனம், வாலகிரகம்,
> சகலத்துக்கும் உச்சாட்டம், வசியம்
> தட்சணி மதுரைவீரன் - சக்கரம்
> காட்டேரி உச்சாட்டம் - சக்கரம்

### முடிவு

அனுமார்க்கு வொப்ப, தெச்சம் கட்டுமானி விஸ்தாரம் கெச்சை கட்டும் கதிலயிட்டும் குண்டலமும் கமாலெகான னும் யிட்டமானி நாவராத நாள் திருனாமும் மேனியெங்கும் எங்கும் - வேளாங்குறுபா - அஸ்தகிரி பாற்றைப் பாதத்தை எட்டுது - அட்டும் வீர அனுமந்தா உன்னைத் தொழுவேன் அடியேன் தானே.

### குறிப்புரை

சல்லியம், மாரணம், மோகனம், வாலகிரகம் போன்றவற்றிற் கான உச்சாடனமும், வசியமும் கூறுகின்ற மந்திரங்களும், உரிய சக்கரங்களும் அடங்கிய நூல். யட்சனி, மதுரைவீரன், காட்டேரி, இருளன், மோகினி முதலான தெய்வங்களை முன்னிறுத்திச் செய்யப்படும் வசியங்களுக்கான மந்திரங் களும் சக்கரங்களும் அடங்கியுள்ளன. மேலும் வண்ணார், மாடன மந்திரம், உடல்கட்டு மந்திரம், தேளுக்குத் தாண்டு மந்திரம், இருளன் மந்திரம் முதலான மந்திர தந்திரங்களும் விநோதங்களும் சுருக்கமாகக் கூறப் பெற்றுள்ளன. இறுதியில் ஆறு வெற்றேடுகள் உள்ளன.

## 975. மந்திரம்

**அ.** 203.409; **ஆ.** 66 ஏடுகள்; **இ.** 23X3 செ.மீ.; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** நன்று; சில ஏடுகள் செல்லரித்தும் சிதைந்தும் உள்ளன; **ஊ.** சற்றுக்கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

பல்லி விழுந்தால் ... சிரசில் மரணம், ... இடக்கரத்தில் நன்றாம், வலக்கரத்தில் தீது, ... நெத்தியில் பட்டாபிஷேகம், கழுத்தில் சந்தோஷம், மார்பில் பீனிசம், இடப்புறக் கையில் மரணமாம், வலப்புறக்கையில் பெரிய சாவாம், வயத்தில் குழந்தையுண்டாம், குறியில் கேடுஉண்டாம், மூக்கில் பொருள்நாசம், அபானத்தில் தனமுண்டு, துடையில் நோயாம், முழங்காலில் கலக்கம், பாதத்தில் பிணியாம், கால் விரலில் இராசபயமாம்.

### முடிவு

மாரணம்

ஓம் ஐய்யும் கிலியும் சவ்வும் கிலியும்
எரிஎரி. சிவசிவ மாரண மாரண
உச் சாட்டாஸ்ரீ ஐய்யும் கிலியும் சவ்வும்
அவ்வும் கிலியும் ஓம் நஷ்ட்ட மந்திருந்த விர்தி விற்ப...

### குறிப்புரை

முதல் ஏடு மட்டும் கௌளி சாத்திரம் கூறுவதாக அமைய மற்ற ஏடுகள் அனைத்தும் மந்திர ஏடுகளாக உள்ளன. திரிபுர அம்மன் வசியம், வசியம், சஷ்டி மூலம், மாரணம், மோகனம், பிள்ளைபெறமாட்டாதவளுக்குக் கட்டவும், ஸ்ரீபோகம் விடாமல் இருக்க, மருந்துவிட, கவலைகள் தீர, சத்துரு சம்மாரம், நகர்புறத்துக்கும் மந்திரம், யகாரம், சுப்பிரமணியர் வசியம், முழுச்சக்கரம் - மூலம் அரிச்சக்கரம், உச்சாட்டம், சுப்பிரமணியர் சக்கரம், அனுமந்தன் சக்கரம், பிள்ளை பெறமாட்டாதவளுக்கு எண்ணை மந்திரிக்க மந்திரம், கீரக சக்கரம், வீபூதி பிடிக்க, பார்வைக்குத் தீர்மானம் செய்யவும், மதுரைவீரன் முதலான தலைப்புகள் உள்ளன.

மதுரைவீரன் எனும் தலைப்பில் அதிகமான மந்திரங்கள் கூறப்படுகின்றன.

## 976. மந்திரம்

**அ.**238:454; **ஆ.** *1-57* ஏடுகள்; **இ.***21.5X3.5* செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

சிவசிவா உச்சியில் யீசுபரன் காக்க
நெத்தியில் பார்வதி காக்க
கண்ரெண்டும் பெருமாள் காக்க
மூக்கு பிரமதேவன் காக்க
நாக்கு சரஸ்வதி காக்க
காதுரெண்டும் கெருடன் காக்க
கழுத்து காளேஸ்பரன் காக்க
வலதுபக்கம் வயிரவன் காக்க
இடதுபக்கம் அனுமான் காக்க
மார்பு வீரபத்திரன் காக்க
வலதுகால் கறுப்பன் காக்க
இடதுகால் காளி காக்க
பாதம் பாதாளகன்னி காக்க

வடக்கே வருகிற வடபத்திர காளியைக் கூப்பிட்டேன். யேனென்று ஓடிவந்து யென்முகம் பார்த்து யெதிர் மொழி கேட்டான். மறுமொழி உரைத்து உன்னுட திசையிருந்து வருகிற பூதப்பிசாசுகளைக் கட்டு கட்டு... (ஏடு.*1*).

### முடிவு

செந்தேளுக்கும் செவ்வரி ஓடி வெந்தேளும் தீயும் தேளும் உருவகமும் யேற ஓந்தியேற தேள் இறங்கிப் போதுநசிநசி.

### குறிப்புரை

ஒன்று முதல் 44வரை 'மந்திரங்கள்' என்ற பெயருடைய சுவடி முழுமையாக உள்ளது. 44வது ஏட்டில் சக்கரங்கள் வரையப்பட்டுள்ளன. வீரபத்திரன் சக்கரம், காளிச்சக்கரம்,

அனுமார் மந்திரம், பால்சுரக்க, வசியம், மாடனமாரணம், தேவிசக்கரம், விசத்துக்கு, நாய்வாய்கட்டு, நல்லபாம்பு அழைக்க, முடக்கம், காளிஏவல், கறுப்பய்யா மந்திரம், மாடன மந்திரம், ஏவல், பில்லி சூனியம், சத்துரு மாரணம், தேளுக்கு மருந்து, ஸ்ரீவசியம், பூதப் பிசாசுகள் விலக, பேய்,பில்லி, பிள்ளை தோசம் இதுகளுக்கு வரைந்து கட்ட, மகா சூர ரசாங்க பூபதி மந்திரம், ஆயிரந்தளை காட்டேறி வசியம், பூதபிசாசுகள் விலக, சிதம்பரச் சக்கரம். இதுதவிர மந்திரம் தொடர்பான 13 ஏடுகள் இதனைத் தொடர்ந்து காணப்படுகின்றன. இதில் வீரபத்திரன் சக்கரம், காளிசக்கரம், அனுமார் மந்திரம், வசியம், விசத்துக்கு, நல்லபாம்பு தடைக்கட்டு, முடக்கம், கவுளி, யேவல், மாடமந்திரம், தோள், நாட்டுவாக்காலிக்கு மருந்து காளி தியானம், மதகினி மந்திரம், உச்சாடனம், 'சாபநிவர்த்தி', பூதபிசாசுகள் விலக முதலான தலைப்புகளில் மந்திரங்கள் கூறப்பட்டுள்ளன. முதலிலும் இறுதியிலும் ஒவ்வொரு சட்ட ஏடுகள் உள்ளன.

## 977. மந்திரம்

**அ.** **245:461;** **ஆ.** *2-27;* **இ.** *12 X 2.5* செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள் **உ.** நன்று; **ஊ.** படிக்கக் கூடிய எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

யீசுரமூலி வேரோவென்று பேர் சொல்லித் தரிக்கவும் சாலநிகண்டு 524 ஆம் பாடல்.

தூம்புறசீலை மடிப்பில் சீந்தி விழுதை வைத்து பகைவர்... சீடில் சீயென்று எழுதி 501ஆம் பாடல் பார்த்துச்செய்.

விந்து சல்லிய வேரை வெள்ளியில் காப்பிட்டு வெண்சாவல், வேட்டி வாங்கி வெள்ளித்தகட்டில் கட்டிஞால் வேடிக்கை யாமே. ஸ்ரீவசியம், சௌவசியம் பகைவசமாகும் 518ஆம் பாடல் பார்த்துச் செய்யவும்.

முடிவு

...மைத்தொருவன் பேரில் போட அவனுக்கு இம்மூன்று பணம் தூக்கம் வாங்கிக் கிழக்காய் வேர்க்கரியாலாட்டி ஆத்தாளைப் பூசை பண்ணி வெற்றிலையில் பணம் போல் போட்டு ஓங்பூமி தேவி தெஷ்சணியஞ்சனாதேவி சகலரூப பதார்த்தம் தரிசிக்க சிவாயவென்று சிமிடாமல் பார்க்கவும். பூசை செய்து பார்.

குறிப்புரை

பலவிதமான வசியங்களின் செய்முறைகளும் பூசை முறைகளும் உரைநடையில் கூறப்பட்டுள்ளன. இராமபாண மாத்திரை, ஸ்ரீ வசியம், செனவசியம், எட்சணி விபரம், அர்த்தனாரிட மகாபயிரவம், கருக்கட்டி, இருக்கட்டி மந்திரம், வாந்தி, பேதி போக, வளையல் வசியம், குறி, புலிப்பாணி சால அயசெம்பு 195ஆம் பாடல் பார்க்க, அக்கினிக் கட்டு, திரிலோக வசியம், மச்ச முனி நாதர் தொழுகண்ணி 649ஆம் பாடல் பார், மச்சமுனி 800இல் அறியவும் முதலான பொருண்மைகள் உள்ளன. இந்நூலில் கூறப்படும் செய்தி தொடர்பான விளக்கத்தினைப் பிறநூல்களிலிருந்து அறிக என்று கூறும் முறை பின்பற்றப்பட்டுள்ளது. மருந்துப் பொருட்கள் மிகுதியாகச் சுட்டப் பெறுகின்றன.

## 978. மந்திரம்

**அ.** 270:492; **ஆ.** 1-47 (43) ஏடுகள்; **இ.** 17X3 செ.மீ.; **ஈ.** 6 வரிகள்; **உ.** நன்று; 2-4 ஏடுகள் இல்லை; சில ஏடுகள் சிதைந்திருக்கின்றன; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

பால் சுரக்கர மந்திரம்

அரிஓம் கறுப்பா கறுப்பழகா
கஞ்சா வெறியழகா
உறுப்பான பொழகா
ஒன்றுபதி யோன்நமோ அங்கம் துறக்க

அகந்துறக்க கும்பந் துறக்க
குடந்துறக்க
திருமுலையில் திருக்கண் துறக்க..

முடிவு

சுப்பிரமணிய மந்திரம்

அரகர காத்திருச் சிற்றம்பலமே முதலே
சிவாமுலத் தாதிபர் நிறைந்தமே
முகத்தலத் தாவனை சரவணபவனே
பிரணவாத்துக்குயே உலகிலு மடங்காப்
பிள்ளையே தந்தையு மகபேசியும்
பேசாதிருந்த சபிகுருஸ் பேரிந்த மாதே...

குறிப்புரை

சருவ மோகனம், ஆவேசிக்க களரிமுறிப்பிக்க, பூசை எந்திரம், புழுக்கடி விலக, முட்டையாட,திசைக் கெட்டு, அக்கினி கெட்ட மந்திரம், லோகவசீகரம், மாடன மந்திரம், பத்திரகாளி மந்திரம், கால மந்திரம். பிள்ளை தேறும் மந்திரம், வியாதி தீரமந்திரம், பிசாசு தம்பவும், சர்வவசீகரம், சர்வ தம்பனம், அனுமார்மந்திரம், கருவித்தை முதலான தலைப்புகள் உள்ளன.

## 979. மந்திரம்

**அ.** 300:525; **ஆ.** *1-34* ஏடுகள்; **இ.** *18.5X4.5* செ.மீ.; **ஈ.** *6-10* வரிகள்; **உ.** மிக நன்று; **ஊ.** மிகக் கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

தனியே சேத்தந்ததைக்கூட்டை எடுத்து, தோலக் குளித் தண்ணியைத் தோற்சுடுகாட்டுக் கள்ளியை முறித்து அந்தப் பாலதில்குத்திச் சத்துருவின் மேலில் தொளிக்க முகமாத்து வீட்டிலே தளிகக் கூட்டு போம்.

### முடிவு

சிறுபலகையில் சந்தனப் பாத்தி அதில் ஓம் ஶ்ரீங் என்றே எழுதி, சிவந்த பூச்சாத்த, தண்ணீர்க் கரையில் படதாகக் கிழக்கு முகமாக இருந்து ஞாயறாச்சை முதல் ஞாயறாச்சைக்குத் தினமொன்றுக்கு உருச் செபிக்கவும். முந்ததை வதை வரும். வந்தால் முட்டகலாப் பத்தோடு கூட்டுமிருக்கும். இறுக்கு நிறையப் பட்டு, சர்க்கரையும் பழமும் வெற்றிலைப் பாக்கு நெய்வேத்தியம் பண்ணி வரவும் (ஏடு. 33).

### குறிப்புரை

**உரைநடை.** தீராபாவகா வீசம், போகிக்க மந்திரம், வண்ணம் சமுதை ஆசனிப் பலகை, சிதம்பரச் சக்கரம், நடுவரைக்கிறுதி பிலிபரம், பல்லுக்கட்டுக்கு எழுதிக்கட்டச் சக்கரம், மாதவிடாய் வராமல் தடுக்கப் பரலோதிக்கொடுக்க மந்திரம், நவக்கிரகவீசம், கன்னிவீசம், அட்டநாக வீசம், அட்டகெசவீசம், பஞ்சபட்சி வீசம், சிதம்பரவித்தை, எட்டுக் கர்மத்துக்கும் வசியம், பிரிவுக்குத் தியானம், மோகனம், மாரணம், உச்சாடனம், சிதம்பர மந்திரமும், சக்கரமும், மருத்துவம், வராகி கற்பம், அனுராகினி மந்திரம், வித்தை எட்டு கர்மத்துக்கும் வசியம், அஞ்சனா தேவி மந்திரமும் சக்கரமும், வாதை ஒழிக்க, தம்பனம், ஆகிருஷனம், வித்துவேசனம், கணபதி மந்திரமும் அச்சரமும், கெருட தியானம், அன்னபுவனைக்குத்தியானம், வடுக வயிரவன் சட்டையப்பா மந்திரமும், சக்கரமும் அனுராகினி மந்திரம் முதலான தலைப்புகளில் பலவிதமான மந்திரங்களும் அவற்றிற்குரிய சக்கரங்களும், பிறவும் வரையப் பட்டுள்ளன. 'சிதம்பரப் பஞ்சாச்சரம்' என்ற தலைப்பிலுள்ள மந்திர ஏட்டிற்கு எண் இல்லை.

## 980. மந்திரம்

**அ.** 378:619; **ஆ.** *1-52 (44)* ஏடுகள்; **இ.** 22 x 3 செ.மீ.; **ஈ.** *4-6* வரிகள்; **உ.** நன்று; சில ஏடுகள் சிதைந்துள்ளன; **ஊ.** பிழை மிகுந்த சுமாரான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

காக்கைக் கொடியும் கழுதை வாகனமும்
தேத்தும் பல்லும் குறைய
மூக்கும் சிறிய முகமும் என்னைப்பார்த்தே அடியம்மே
நான் நினைத்தளைப் பாத்தென அடியம்மே
முலைத்தண்டு விறகாக முழுக்கனப் பாம்புபல வரிசையாக
பிள்ளைத்தலையே பேயாகப் பேயும் கையே தொடுப்பாகப்
பாழுங்காட்டில் பாழ்மனை..... ழம்
செங்காட்டில் அம்மையின் னானுமையின் நாளுமஞ்
சிறிதேத்ததுப் பாரிப்பர்..ன்னிரு காதம் போகச் சுவாகா-

முடிவு

கத்திகொண்டு வந்து தலைகீழாய்த் தரையிலே ஊனி இந்த மந்திரத்தைச் சபித்துச் சேஷை குடுத்து இரைக்கச் சொன்னால் கத்தி சுத்தினால் திருடனைப் பிடிக்கலாம். அதுக்கு மூல மந்திரம் - சேகாதுரு மூலந்தான் கையுவெட்டி எறிந்திடும் வீரனைப் போலவே சுடு எந்திடும் சூரனைப் போலவே ஐயன் குளுந்து ஆதிபைரவி உன் பாதந்தானைத் தான் சாய எட்டு மூலம் எழுகாத வழி சுத்தி வரவேணும். சூரன் உன் ஆணை.

ஆகாது தான் சைய ஓம் ஸ்ரீ நமா, ஓங்காளிநமா, ஓம் பராசக்தி யித்தனை பேரும் என் காவலுக்குள் அட்டுக்கும் சுவாகா.

குறிப்புரை

பாம்புக்கு, வாழாத பெண்ணுக்கு வரைந்து கட்டும் மந்திரங்கள், சத்துரு சங்காரம், சுளுக்கு, எதிரிதுரத்த சத்ரு சங்கார மத்துரு அட்சரம் மூலம், காட்டேரி மந்திரம், திசைக் கட்டு மந்திரம் - சக்கரம், சூனியத்தைக் கட்டுகிற மந்திரம், சகல வியாதிக்கு மந்திரம், சூனியப் பிசாசு ஓட்டுகிற மந்திரம் - சக்கரம், எதிரிதுரத்து, சத்திமந்திரம், சிதம்பரசுவாமியார் உச்சாடனம், மூலிகைகளுக்கு வயனம், புலமாடன், சுடலமாடன், கசமாடன் ஒடல்கட்டு முதலான தலைப்புகள் உள்ளன.

## 981. மந்திரம்

**அ.** 387:630; **ஆ.** *11* ஏடுகள்; **இ.** 18 x 3.5 செ.மீ.; **ஈ.** *10-12* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** அழகான கடினமான மயக்கந் தரும் கையெழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

இந்தச் சக்கரம் நீலகேசி பிருதா பிடிச்சா எழுதிக் கட்டுவான் சக்கரம் கண்டு வரைந்து கொள்ளவும். இதுக்குச் சக்கரம். இது சத்தி தெரிசனம் ஏந்தியவும் முன்புறம் இந்தச் சக்கரத்தைச் சார்ந்தது.

### முடிவு

இந்தப் பிரகாரம் நாற்பது தட்டு வரைந்து முப்பத் தொன்றால் மரேசியில் இட்டு ரேகைக்கு இடைவெளியில் அங்காரமிட்டு இதன் கீழ்த்தட்டுதோறும் இந்த... கீழ்த்தட்டிலே இந்த லக்கம் எழுதிப் பின் மாறிப் பிடித்து இந்தப் பிரகாரம் எழுதி சொன்னபடிச் செய்யவும். இது சக்கரம்.

### குறிப்புரை

தியானச் சக்கரம், இரத்தப் பசும்புரவிச் சக்கரம், அன்னச் சக்கரம் முதலான சக்கரங்களும், அஞ்சனாதேவி மந்திரம், சிங்கமுகதேவதை மந்திரம், நீலகண்ட அத்தியாய மூல மந்திரம் முதலான மந்திரங்களும் முதல் *11* ஏடுகளில் காணப்படு கின்றன. இறுதியில் *26, 42* என்ற எண்ணிட்ட மந்திரம் தொடர்பான இரண்டு ஏடுகள் உள்ளன.

## 982. மந்திரம்

**அ.** 443:690; **ஆ.** *11* ஏடுகள்; **இ.** 12 x 3.5 செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; சில ஏடுகளில் துளைகள் உள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

வசியம்

கருநாளில் முள்ளெலி யொன்றடித்து வந்து தலைகீழாகத் தூக்கி, சாபம் தீர்த்து முந்நூறு உரு செபித்து வெந்தரம், கைக் கிழங்கு வாங்கி இரண்டையும் உலர்த்தித் தூளாய்ப் பண்ணி, கிராம்பு பலம் ஒன்று, இந்திரகோபம் பலம் ஒன்று முன் தையிலம் மங்கிக் காய்ந்த மண் தொட்டுக் கன்னித்தீட்டுச் சீலையில் வைத்துத் திரியிட்டச் சீலையில் திரித்து ஆவின் நெய் விட்டுத் தீபம் ஏற்றிச் சட்டியில் பொற்கையான் சாறு தடவி முச்சுவரில் எரித்து மைவாங்கி கோரோசனைக் கூட்டி மத்தித்து, சிமிழில் வைத்துச் சிதமிடப் பரவசிய மந்திரம் அதிமோக வசீகர மையிது, தப்பாது.

முடிவு

... தயிலம் யிறக்கி முஞ்சூரு ரத்தம் ஒரு கரண்டி விட்டு விரைதயிலத்தே சேர்த்துத் தனித்திருந்த பூப்பொடியும் கூடச் சேர்த்துக் கண்கட்டு மையும் சேர்த்து மயானத்தில் புதைத்து வைத்து மண்டலம் சென்று எடுத்து நடத்தி, எடுத்து எதிரிக்குக் கடுகளவு பூச... உடன் மரணம்.

குறிப்புரை

சூத்திர மாடன மந்திரம், கண்கட்டு வித்தை, சருவசண்டி தியானம், அனுமன், சர்ப்பம் கடிக்க முதலான தலைப்பு களில் மந்திரங்கள் செய்முறைகளோடு கூறப்பட்டுள்ளன. மருத்துவ முறையில் பயன்படுத்தப்படும் மருந்துப் பொருட் கள் பல செய்முறைகளில் அடங்குகின்றன. செழிப்பை வேண்டிச் செய்யப்படுபவையும், அழிவை எண்ணிச் செய்யப்படுபவையும் கலந்த மந்திரச் சடங்குகள் இடம் பெறுகின்றன.

## 983. மந்திரம்

**அ.** 500:761; **ஆ.** 5 ஏடுகள்; **இ.** 27.5 x 3 செ.மீ.; **ஈ.** 2-4 வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

ஓம் சக்கிலி, சக்கிலி, ஓயாத்திரரகி, கம்பளச் சின்னுள் ரசுரசுகி சுடச பந்து பந்து, சுருதியிலே போடு, வீடு சடித காடு கொண்டேகு, கொண்டேகு, அம்மை யானை கொண்டேகு செல்லு செல்லு, சீவனை வாங்கு, சிவாய நமா உரு லெட்சம்.

முடிவு

நயவசிம பவித்து வேஷணம், சிவயநம, மாரணம், ஓடு ஓடு நசி நசி சீக்கிரம் சீக்கிரம் ஆவேசு ஆவேசு சீக்கிரம் சீக்கிரம் உச்சாடு உச்சாடு ஓம் நசி சிவாய நமக.

குறிப்புரை

முதல் நான்கு ஏடுகளில் மந்திரச் செய்திகள் ஏட்டெண்கள் இன்றி இடம் பெற்றுள்ளன. சக்கிலிச்சி, மூதேவி மந்திரம், மூதேவிமணி, திசைகட்டு, சாபம் நிவர்த்தி, சிதம்பர மந்திரம் என்ற தலைப்புகளில் மந்திரச் செய்திகள் கூறப்பெறு கின்றன. ஐந்தாவது ஏட்டில் 'அஞ்சனமைய்' என்ற தலைப் பிற்குரிய செய்தி கூறப்பெற்றுள்ளது.

## 984. மந்திரம்

**அ.** **522:814;** **ஆ.** *26-47* ஏடுகள்; **இ.** 13 x 4.5 செ.மீ; **ஈ.** *12-16* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

ஓம் ஆம் ஊம் ஸ்ரீயும் ஹீயும்
ஓம் கெங்கெணபதி கேசரி புத்திரா
யாதந்தி நாயகா தாம்புத் திராயா
நமா என்முகம் பொன்முகம் என்முகங் கண்ட

அரசரும். மத்து மனிசரும் தன்முகம் போட்டு, என்முகம் பார்த்து, என்னை வணங்கி நிற்கவே சிவா. ஸ்ரீமுகாயா சித்திமுகாயா சிவாயா கெங்கணபதி நமாவா உரு 1008.

முடிவு

நாவடங்க மந்திரம்

கோவு நாவடங்க நமசிவாயா
கொடிய நாவடங்க நமசிவாயா
நயன நாவடங்க நமசிவாயா
பிசகு நாவடங்க நமசிவாயா
என்முகங் கண்டபேர் கண்கெட்டு கைமாண்டு பல்
கெட்டு பல்செத்து தன்னிலே நாவெடுக்காமல்
நாவடங்கிக் கிடக்க நமசிவாயம் உரு 1008
செய்யவும். பூசை நிருதிமூலை நோக்கிச் செய்யவும்
(ஏடு.46).

குறிப்புரை

**உரைநடை.** கணபதி சாரம், கணபதி மந்திர வசியம், அஷ்டகர்மவசியம், மோகனம், உச்சாடனம், பகவதி உருத்திரம், ஆக்கிராணம், தம்பனம், அஷ்டமாசித்து வசியம், மோகனம், பேதனம், வித்துவேசனம், லச்சுமி மந்திரம், ரோகிணி மந்திரம், மோகினி மந்திரம், சர்வ வசிய மந்திரம், மாடனம், உடல்கட்டு, கிங்கிலியன் தூமாதி மந்திரம், சக்கிலியன் மந்திரம், வயிரவன் மந்திரம், சீறி அழுகிற பிள்ளைக்கு, களவுக்கு முட்டை ஓத, வீரபத்திரன் மந்திரம், திருநீரு தரிக்க மந்திரம், வியாதி நாசம் முதலான தலைப்புகள் உள்ளன. 47 ஆவது ஏட்டில் நான்கு அட்சரங்கள் வரையப்பட்டுள்ளன. நூலின் இடைஇடையே படங்களும் சக்கரங்களும் உள்ளன.

## 985. மந்திரம்

**அ.** **522:817;** **ஆ.** 59-66 ஏடுகள்; **இ.** 13 x 4.5 செ.மீ.; **ஈ.** 8-9 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** மிகக் கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

படபடஎனத் தப்பி காரி பாபா வாவா அந்திர தந்திரங்க ளாடாறாம் அங்காரகன் கண்டால் பிக்கும் தமை யித்த

மெய்யாயி புவிவான மந்திர மண்டி ஆலையங்கள் சீறடா முகடு தம்ப மீறோராம் யில்லவர் மகமது திரிசூலல்லாவ உரு. *1008* குரோம் யிறா புறா *1008*.

முடிவு

அன்னவே ஆகாசபூமிகாளி, அரிகாளி, விரிகாளி, ஆலகாளி, தன்னவே வருகாளி, பொற்காளி, தூகாளி, மாகாளி, சோரி காளி, மின்னையே பரடுகாளி, மாரிகாளி, வீரிகாளி, நாத வாலைதேவி, தேவி, மூதேவி, ஸ்ரீதேவி, திருநேத்திர நயன தேவி, காடைதேவி, புரிதேவி, விபரிதேவி, ஆவிமேலழியாத ஆதிதேவி, அரிப் பிரமரானவரும் ஆங்கார தேவி காவி விழியக்கை வரைதந்த ததிகானாஷ்த்திர தேவி.

குறிப்புரை

அனுமார் மந்திரம், அய்யனாருக்கு, காளி, குட்டிச் சாத்தானுக்கு, மாடன் மந்திரம், காட்டேரி, ரணசாமுண்டி, கிங்கிலியன், மொட்டையன், காலன்மந்திரம், பவதேவ தைக்கு ஓதுமந்திரம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 986. மந்திரம்

**அ. 523:818; ஆ.** *14* ஏடுகள்; **இ.** 13.1 x 4 செ.மீ.; **ஈ.** *8-10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** மிகக் கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

கணபதி மந்திரம் வசியம்

ஓம் ஆம் அவ்வும் சிவகணபதி
சிவய நமவே ஹீயும், ஸ்ரீயும் ஐயுங்
கிலியுஞ் சவ்வும் கிலியும் - சத்தி
மகா கணபதி சர்வலோகமும் சர்வ
தேசமும் சருவ புண்ணியரும் உன்வச
மானாப் போலே நீயும் என்
வசமாக சிவா. உரு 1008.

முடிவு

நகாரம் - வல்லூர்; மகாரம் - காகம்;
சிகாரம் - ஆந்தை; வகாரம் - கோழி;
யகாரம் - மயில்.
செவ்வாய், ஞாயிறு - வல்லூர், கூகை-½
திங்கள், புதன் - ஆந்தை, ... டக் ¼
வியாழன் - காக்கை, அரசு-2
வெள்ளி - கோழி, தூக்கம் ¾
சனி - மயில், சாவு.

குறிப்புரை

மந்திரக் குறிப்புகளுக்குப் பின் உள்ள ஒரு வெற்றேட்டை அடுத்து **'நவரத்தின வராகி'** என்ற தலைப்புள்ள ஓர் ஏடும், **வராகி மாலை** என்ற தலைப்புள்ள மற்றொரு ஏடும் உள்ளன.

## 987. மந்திரம்

**அ. 524:819; ஆ.** 5 ஏடுகள்; **இ.** 13.5 x 4 செ.மீ.; **ஈ.** *14-16* வரிகள்; **உ.** நன்று; வலதுபக்க ஓரப் பகுதிகள் தேய்ந் துள்ளன; **ஊ.** மிகக் கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

வ மலையே வாணியே கபாலியானகற் பகமே
நற்பத மேகருத் துளான ...
விமலையே காளியே வேதத் தாயே
விளக்கொளியே ரவியொளியே காந்தி மீனும்
அமலையே மதியொளியே முப்பா லாயே
அப்பிரத்தே நின்ற அருட்சுடரே சோதி
நிமலையே ந...க்கள் மேவடி ... ப்பில்லா
... ...யே காமி பெரியே யென...

முடிவு

சிவயோகி தரிசிக்கும் ஞானமனமும் நீயே
தெளிவும்நீ அழிவும்நீ கலியும் நீயே
அவயோக சமுசார வாழ்க்கை நீயே
அடைக்கலம்நீ நட்பன்றி பகையும் நீயே

தவமீறுங் காரணம்நீ காரி யம்நீ
சச்சிதா னந்தவெளித் தாயும் நீயே
சவமாகிப் போனபின்பு சடலத் தீயிற்
சாம்பலாய் நீத்திவிட்ட துருவும் நீயே

குறிப்புரை

வித்துவேஷனம், தம்பனம், மோகனம், வசியம் முதலான வற்றிற்குரிய மூலமந்திரங்கள் கூறப்படுகின்றன. பரிபூரணம், மூலசூட்சும மவுனம், ஆனந்தம், ஞானம், தத்துவம், பஞ்சபூதங்கள், பஞ்சசத்தி, சிவன், அறுசுவை, வராகி, முத்தி, அஷ்டசத்தி, அண்டபகிரண்டம், அமுர்தம், சுழுமுனை, சாத்திரம், தாய், தந்தை, குரு முதலான அனைத்தும் நீயே எனும் பொருளமைந்த எண்சீர் விருத்தப் பாடல்கள் பத்துக்கும் மேல் அமைகின்றன.

## 988. மந்திரம் - வசியம்

**அ.** **219:429;** **ஆ.** *98* ஏடுகள்; **இ.** 23 x 2.5 செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

சுப்பிரமணியர் வசியம் - விபூதி

ஓம் சூரசங்கரா சுப்பிரமணிய சுவாமி மூவரும் நாமும் முகத்தில் தரித்தாய் மனோகரா சுவாமி விபூதி ஒரு கையில், வேலாயுதம் ஒரு கையில், வாளொரு கையில், வல்லைய மொரு கையில், வேலொரு கையில், அம்பொரு கையில் சூலமொரு கையில், சுக்குமாந்தடி யொருகையில், காண்டீப மொரு கையில், கபாலமொரு கையில், சங்கொரு கையில், சக்கரமொரு கையில், பன்னிரு கையில் ஆயுதமெடுத்துப் பாரிய மயில்மேலேறியே வருவாய்.

முடிவு

என்மேலே எதிர்த்த சத்துருக்கள், ஏவல், பில்லி, சூனியம் வைத்தவன் அவன் நெஞ்சைப் பிடுங்கி உன் காலுக்குங் கீழே போட்டுக் குத்து. என்பேரில் எதிர்த்த சத்திராதிகள்

எல்லாம் நாசக்கிரியாப் போக சுவாகா. இது முப்பத்து முக்கோடி தேவாதிகள் கட்டிக்கொண்ட கட்டு.... என்கட்டு, எங்களய் யன் பரிகட்டு, என்னைக் கட்டுவன் கட்டாக நிற்க, இருப்பு நெருப்புத் தணலாக் கட்டு. ஓம் குருவே மயம் நமசிவாயம்.

### குறிப்புரை

சுப்பிரமணியர் வசியம், விக்கினேசுவர மந்திரம், அனுமந்த ராயர் மந்திரம், அனுமந்த மந்திரம், எந்திரம், அனுமந்தர் உச்சாட்டம், அனுமந்தர் உச்சாடனம், நரசிம்ம உச்சாடனம், சத்திமந்திரம், வயிரவர் மந்திரம், கணபதி, அம்மன், வயிரவர் தெரிசனம், மூலமந்திரம், கணபதி தீட்சை, துர்க்கை மந்திரம், வீரபத்திரன் மந்திரம், அனுமந்தன் கட்டு, ரெணகிங்கிலிய உச்சாட்டம், மோக வசீகரம், துர்க்கி மந்திரம், அகோரசிவ மந்திரம், துர்க்கி காளி மந்திரம், மூல மந்திரம், அகோர செபம் சகலத்துக்கும் வீரபத்திர ஆக்கிரிசன உச்சாடன மந்திரம், சோகி மந்திரம், பயிரவ கட்டு மந்திரம், இருளப்பன் மந்திரம், சத்தி கவசம், காளி மந்திரம் - கட்டு, சகலத்துக்கும் திருப்பல், பகவதி மந்திரம், காட்டேரி மால, சர்வ சண்டி மால, சத்துரு மாரணம், மோகம்பரி மால, காட்டேரி உச்சாடனம், சத்துரு சங்காரம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 989. மந்திரமும் சோதிடமும்

**அ. 542:878; ஆ.** *17-23* ஏடுகள்; **இ.** 20.5 x 2.5 செ.மீ.; **ஈ.** 4-6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** மிகக்கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

முந்தி முந்தி எழுந்திருந்து நீராடிச் சந்தி வணைந்த ராமர் கதரளி முகத்தாளை விக்கினங்கள் வாராமல் விக்கினேசுரப் பிள்ளையாருக்கும், பரமேசுரப் பிள்ளையாருக்கும் குருவான குருவினுட பாதந் தலை தொண்டென மலை மேலிருக்கு மலைவேடன் மகனே மலைநாகந் தீட்சை சென்று தேடுன்னா பாசம் விண்ணோர் பாக்கத் தீஞ்சு

எரிஞ்சு போகுதென்று ஆனைமுகச் சிலந்தி, குதிரைமுகச் சிலந்தி அறுவாளப்பட்டது, கொடிவாளப்பட்டது, குத்துப்பட்டது, வெட்டுப்பட்டது.

முடிவு

தேங்காய், வாழைப்பழம், கடலை, அவல், சூடம், சாம்பிராணி, வெத்திலை, பாக்கு உரு செவ்வேத்தி வேரை வெட்டி இகுசுவன் கல்லையில் புதச்சால் பானை வேகாது. கொல்லன் தலன் முகத்தில் புதச்சால் இருப்பு வேகாதுரை. உரு 108.

குறிப்புரை

**உரைநடை**. பிழை மிகுதி. பத்து கடல் தாண்டியுள்ள ஆலவிரிட்சத்தின் கீழேயுள்ள புற்றிலுள்ள ஆறுதலை நாகம், ஐந்துதலை நாகம், பட்சி முதலியவற்றைப் பயன்படுத்திப் பலவகையான மந்திரங்களை, உரிய பூசை முறைகளுடன் செபித்தால், எழுதிக் கட்டினால் 4148 நோய்களும் தீருமென்பதும், மனை கட்டும்போது 10 அடி முதல் 23 அடி வரை இடம் விட்டுக் கட்டினால் பலன் இவை என்பதும், 9 கோள்களுக்குரிய தசா ஆண்டு எவ்வளவு என்பதும் கூறப்படுகின்றன. செக்கு மாட்டுக்கு மந்திரம், நீர்ப்பாம்புக்கு மந்திரம் முதலான தலைப்புக்களும் உள்ளன.

## 990. மந்திரமும் சோதிடமும்

**அ.** 571:928; **ஆ.** *29-56* ஏடுகள்; **இ.** 19.5 x 3 செ.மீ.; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சிசுபேருஞ் சன்மலக்கினத்து அதிபர் சேர்ந்திடும் அந்தப் பேரும் தரும் பலம் மெய் நிறஞ் சொரூபம் பொருநிதி யூதர் மத்தகமும் ஓர் பேரு முபரங் கஞ்சந்தி தங்கிப் பேச இலக்கணங் கீர்த்தி மூர்த்திகளும் பார்.

முடிவு

என் முன்னே நின்று என்பேரில் வருகின்ற அய்யன், பிடாரி, அழகான துர்க்கை, மாகாளி, சாமுண்டி, இடாகினி,

மோகினி, மாடன், கருப்பன், சுடலை மாடன், இருளன், இருசி, காட்டேரி மந்திரப் பேய்கள் வாய்கட்டிய சூனியம்.

குறிப்புரை

**உரைநடை**. முதல் 3 ஏடுகளில் 12 இலக்னப் பலன்களைப் பெயரோடு பொருத்திக் கூறும் சோதிடச் செய்தி இடம் பெறுகின்றது. அடுத்துப் பாம்பு விசத்துக்கு, பூச்சிவெட்டு மந்திரம், தலைவலிக்கு வெற்றிலையில் எழுதிக் கொடுத்தல், பெண்கள் வாழ, புருசன் வாழ எழுதிக்கட்டும் மந்திரம், சகலத்துக்கும் எழுதிக் கட்ட, பிள்ளை பிறப்பதற்கு எண்ணை மந்திரம், தன்னைக்கட்டு, உடல்கட்டு, விபூதி தியானம், திசைகட்டு, தலைவலிக்கு மந்திரம், வயிரவன் சாவல், அனுமார் மந்திரம், திசைகட்டு தன்னைக்கட்டு, பாம்பு தடை விடுகிற மந்திரம், நாய் வாய்க்கட்டுதல், அனுமார் உச்சாட்டம், கணபதி தியானம், மந்திரம், செனனக் குறிப்பு முதலான செய்திகள் உள்ளன.

## 991. மாந்திரீகம்

**அ**. 213:423; **ஆ**. 1-25 ஏடுகள்; **இ**. 18 x 3 செ.மீ.; **ஈ**. 5-6 வரிகள்; **உ**. நன்று; **ஊ**. ஓரளவு கடினம்; **எ**. முழுமை; **ஏ**. அச்சாகவில்லை.

முற்குறிப்பு

மாந்திரீகம் சுவடி எவர்களாவது எடுத்தவர்கள் கொடுத்துவிட வேண்டியது. இப்படிக்கு

அகீம் பீப்கான் சாஹேப் சுவடி.

தொடக்கம்

அல்லித்தட்டை எடுத்துவந்து அதில் நாலு சிப்பி எடுத்து மசானக்கரி கொண்டுவந்து வேண்டாத ஸ்ரீபேரும், அவன் பேரும் தலைமாற்றி எழுதி - தூமாபதி சக்கரத்தில் எழுதி அதன் பேரில் சிப்பியே வச்சு தூமாபதி மந்திரம் நூற்றெட்டுச் செபித்து அவர் ஏற்பில் வைக்கப் பிரியும். எடுத்துப் போடக் குடும்.

முடிவு

லோக மோகனம்

ஓம் ஓம் அவ்வும் சிறிய நமசிவாயா யநமசிவ - வயநமசி - சிவாயநமசி - சிவாயநமசி - வாயநம என்று உருவு 81 செபித்துப் புஷ்பம் துபத்தியம் நிபத்தியம் கொடுத்துச் செபிக்க லோக மோகனம் முடிந்தது.

குறிப்புரை

தூமாபதி, பிரிவுக்குச் சக்கரம், சாமுண்டி மந்திரம், சாமுண்டி சக்கரம், ஆவேசம் பரவினோதம், மாரகம், குதிரைலாடப் போக்கு, பூதவசியம், பூதசகாயம், மூஞ்சூறு, சத்துருவுக்கு, துஷ்டனை டாலி மந்திரம், மாட்டுக்கும் பெரும் செலந்திக்கும் மந்திரம், வெள்ளெருக்கன் வேரு உடங்க மந்திரம், பிரிவுக்கு மந்திரம், துஷ்டவன காளி மந்திரம், லோக மோகனம் முதலான தலைப்புகள் உள்ளன. மந்திர வலிமையால் அசாதாரண வேலைகளைச் செய்யும் வித்தை இதில் கூறப்படுகின்றது. மாந்திரீக மந்திரம் செய்வதற்கு மசானக்கரி, சிப்பி, எதிரியின் நட்சத்திரம், எலும்பு, விறகு, சாம்பல், கரி முதலான பொருட்கள் பயன்படுவதை நூல் காட்டுகின்றது. இறுதியில் இரண்டு வெற்றேடுகள் உள்ளன.

## 992. மாந்திரீகம்

**அ. 541:877; ஆ.** 5-22 ஏடுகள்; **இ.** 21 x 2.4 செ.மீ. **ஈ.** 4-6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** மிகக் கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

அரி ஓம் சிரு ஞாத மந்தா நசி மசி மசி கட்டு கட்டு இருக்கு இருக்கு முட்டு முட்டு மோது மோது போடு போடு நம் பரமேசுபரி யானை போடு நம் பரமேசுபரி யானை போடு சருவ சத்துருக்களும் மசி சருவ சாதிகளும், சருவ பூத பேயி பிசாசுகளும் உச்சாடு உச்சாடு ஓம் சுவாக (ஏடு. 5).

முடிவு

குழந்தையளுக்குப் பால் சுரக்க

அரகர குருவே நம. கலங்கம் பொங்கப் பொங்கிக் கடல்நுரை பொங்கப் பொங்கி, அங்கம் பொங்கப் பொங்கி அதிர, பூவைப் பொங்கப் பொங்கி பால் பொங்கப் பொங்கிப் பாய்ந்து வா சிவா. இதற்குப் பச்சரிசி மஞ்சள் தேங்காயும் மந்திரிச்சுக் குடுக்கவும் (ஏடு. 22).

குறிப்புரை

**உரைநடை.** பிழைமிகுதி. ஈளை இருமலுக்கு, குழந்தை பிறவாமல் காச்சல் மிகுந்தால், கண்ணில் பருக்கை எடுக்க, கண்ணேறு, நாவேறு, தலையிடிக்கு, கணபதி மந்திரம், கணபதி தியானம், வசியமந்திரம், வெட்டுக்காயம் மாற எந்திர மந்திரம், பிள்ளை பெற மாட்டாதவளுக்கு எண்ணை கொடுக்க, நாய்கடிக்குச் செபிக்க, அக்கினி மந்திரம், தேள் நட்டுவாக்காலிக்கு மந்திரம், ஓடு பாம்புக்கு மந்திரம், மாட்டுக்குப் பால் சுரக்க மந்திரம், காத்துக்கு மந்திரம், வந்தவனுக்குத் தண்ணீர் ஓதிக் கொடுக்க, அனல் மந்திரம் வாங்க, வர்த்தி செய்ய மந்திரம், கன்றுக்குப் பால் கொடாத மாட்டுக்கு மந்திரம், எந்திர வாகனம் பண்ண, சத்துரு வசியம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 993. மாந்திரீகம்

**அ. தாள். 24:55; ஆ.** 2 பக்கங்கள்; **இ.** குறை; **ஈ.** அச்சாகாதது.

தொடக்கம்

விஷத்துக்கு மந்திரிக்க

வயிசிய - சிவிஷ... சிவாய பட்சி, அமுஷாய பட்சி, அமுஷாய நமோநாராயணாய. விஷம் இறங்கிப் போக - சிவா. தடைக்கட்டுக்கு உன் ஆணை, என் ஆணை, பரமசிவன் ஆணை, நிலை விட்டுப் போகாதே நில்லு நில்லு.

முடிவு

யேதனுக்குப் பாதிரிப் பலகையில் சடைக்கஞ்சா இலையும், பொன் ஊமத்தை இலையும் அரைத்துப்பூசி இந்த மந்திரம் முகப்பருக்குச் சடைக்கஞ்சா கொண்டெழுதிச் சங்குமணித் தாவடம் கொண்டெழுதிச் சங்குமணித் தாவடம் கொண்டு வடகிழக்கு மூலையாய் இருந்து 400 உரு செபிக்கவும்.

குறிப்புரை

பாண்டிச்சேரி பிரெஞ்சு இன்டாலஜி நிறுவனத்தில் ஆர்.இ. 31092 என்ற எண்ணிலுள்ள இச்சுவடி இந்நிறுவனத்தில் தாள்சுவடியாக உள்ளது. நான்கு ஏடுகளுள்ள இதில் உடம்பில் ஏறிய விசம் இறங்க, மனையிலுள்ள பாம்பு விலக, தான் வேண்டும் என்ற ஐந்து பேர்களைத் தம்பிக்க நினைக்க முதலானவற்றின் செய்முறைகளும், அவற்றுக் கான மந்திரங்களும், அட்சரங்களும் கூறப்படுகின்றன.

## 994. மூலிக்கக்கிஷம் - வசியம்

**அ. 21:40; ஆ.** *1-20* ஏடுகள்; **இ.** 30 x *3* செ.மீ.; **ஈ.** *8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சற்றுக் கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

ஸ்ரீதேவியார் செங்கழுநீரை, ஓம் ஸ்ரீ மலஸ்ரீ தேவிராஜ வசியம். குருகுருமூலி ஸ்வாஹா என்று காப்புக் கட்டி இந்த மந்திரம் சொல்லி, ஆணிவேர் அறாமல் பிடுங்கித் தாமரை நூலும், இந்த வேரும் திரியாகப் போட்டுக் கவலைப் பசுவின் நெய்யினாலே மை பண்ணித் திலதமிட ராஜவசியம்.

முடிவு

ஆனந்த பஸ்ட்டியுங் சிவயாநம, அனங்கவமிட்டி வசியம், லொங்தங் நமசிவாய, சாம்புவ பஞ்சாட்சரம் சூலைபோம், லுங் அங் சவுங் சிவாய நம சர்வசித்தி பஞ்சாட்சரம். கூடு விட்டுக் கூடு பாயலாம். இது ஆகமம் சொன்னது என்று அறிவாம். இனி, அகோரச் சக்கரம் சொல்லாநின்றேன்... நமிசிவாய கருட பஞ்சாட்சரம் ஆனைகள் வசியம்... ஆனைகள் தம்பிக்கும்.

குறிப்புரை

**உரைநடை**. வசியம், தம்பனம், உச்சாடனம், ஆகர்ஷணம், பேதனம், சிதம்பரச்சக்கரம், மாரணம் முதலான மந்திரங்களையும் செய் முறைகளையும் கூறிச் செல்லுகிறது. அட்டகர்ம முறைகளில் எந்தக் கர்மத்தைக் கருதிச் செய்கிறோமோ அதற்குரிய மந்திரமும், செய்முறையும் விரிவாகக் கூறப்படுகின்றன. பிறரை வசியம் செய்யும் முறை, கவர்ந்து இழுக்கும் முறை, மரணமடையச் செய்யும் முறை, பகைவனை அழிக்கும் முறை முதலானவற்றிற்கு ஓம் என்ற ஓரெழுத்து மந்திரம், நமசிவய என்ற பஞ்சாட்சர (ஐந்து எழுத்து) மந்திரம், யநமசிவ என்ற வசியமந்திரம், வயநமசி என்ற உச்சாடன மந்திரம் முதலானவை பயன்படுத் தப்படுதலை அறிய முடிகின்றது. 5 என்ற எண்ணிட்ட ஏடு, இரண்டு முறை எழுதப்பட்டிருப்பதால் அவ்வெண்ணில் 2 ஏடுகள் இருக்கின்றன. முதலில் நான்கும் இறுதியில் ஒன்றுமாக வெற்றேடுகள் உள்ளன. அடுத்துள்ள 2 ஏடுகளில் ஒன்றில் 'திருவாக்கும்' என்ற காப்புப் பாடலும், 'நட்சத்திரமாலை எழுதத் தொடக்கம்' என்ற குறிப்பும், 2ஆவது ஏட்டில் ஸ்ரீ உச்சாடனம், ஸ்ரீவசியன், ஒற்றை லக்கம் எழுதுகிற விபரம் என்ற தலைப்புகளில் செய்திகளும், அட்சரங்களும் உள்ளன. இறுதியில் 4 கிரந்த ஏடுகள் உள்ளன.

## 995. மோடிவித்தை

**அ. 528:852; ஆ.** *6-16* ஏடுகள்; **இ.** 13.5 x 4.9 செ.மீ; **ஈ.** *15-16* வரிகள்; **உ.** நன்று; ஓரிரு துளைகள்; ஊ. கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

வெறுப்பான மோடிவித்தை சொல்லக் கேளு
வெகுமோடி உண்டதிலே சிறிது மோடி
யுறுப்பான விஷமோடி மதிமோ டிக்கி
உத்தகரு விடையமினி உரைக்கக் கேளு
கறுப்பான தேவதைகள் அய்யன் காளி
கன்னிசக்க தேவிகுட்டிச்சாத்தி காத்தி

மறுப்படா வீரப்பேர் ராசன் மாடன்
வயிரவன் காட்டேரி மகாதெய்வம் பாரே

முடிவு

செய்யவேஅவன் கோட்டைக் குள்ளே பேய்கள் சென்று
சண்டைதான் கொடுத்துப் பஞ்சாய்ப் பண்ணி
நய்யவே கொண்டுளக்கி அவன்வீ டெல்லாம்
நாசமாய்ப் பண்ணிவிட்டுச் சுடலை யாக்கி
தொய்யவே படைமரணந் தூளாய்ப் போகும்
தூமாதியாள் போகிறத்தொழி லைச்சொல்லப்போமோ
அய்யய்யோ யிந்தவித்தை அரச ருக்கு
ஆனந்தஆச் சரியமடா செயிது பாரே

வேறு - நாற்பத்தி முக்கோணம் அடைக்கவும்

குறிப்புரை

பாடல்களுக்கு எண்கள் இல்லை. **நாற்பதிற்கும் மேற்பட்ட எண்சீர் விருத்தப் பாடல்கள் உள்ளன.** ஏவல், பில்லி, சூனியம் என்ற மாந்திரீக வகைகளுள் 'மோடி வித்தை' என்பதுவும் ஒன்று. இதற்குக் கவனத்தைத் திருப்புதல் என்பதே அடிப்படையாக அமைவதால் 'கண்கட்டி வித்தை' என்றும் கூறப்படும். மோடிகளின் வகையும், இம்மோடி வித்தைப் பலிதமாக என்னென்ன செயற்பாடுகளை எப்படி எப்படி மேற்கொள்ள வேண்டும் என்பதும், இதற்குப் பயன்படுத்தப்படும் பொருள்களும் கூறப்படுகின்றன. மாடன், வயிரவன், காட்டேரி, வீரபத்திரர், சக்காதேவி, குட்டிச்சாத்தான் முதலியன மோடி வித்தைக்குரிய தெய்வங்கள் என்பதும், இத்தெய்வங்களின் பல்வேறு நாமங்களும், பேய், பிசாசு, விலங்கினங்கள் முதலியனவும் மந்திர முறையில் உச்சரிக்கப்படுகின்றன என்பதும், காளிமந்திரம், வயிரவர் தியானம், தண்டகம், கிங்கிலியன் மோடி மந்திரம், மொட்டையன் மந்திரம், பலதேவதைக்கு யேகமந்திரம், அக்காள் மந்திரம் முதலான மந்திரங்கள் மோடியில் பயன்படுத்தப்படுகின்றன என்பதும், முகவசியம், எதிரியைக் கொல்லுதல், வீட்டை அழித்தல் முதலான 64 வகை மோடி வித்தைகளும் கைவரப்பெறும் முறை

எவ்வாறு என்பதும் சுட்டப் பெறுகின்றன. இறுதி ஏட்டில் பாடல் முடிந்தபின் மந்திரங்கள் இடம் பெற்றுள்ளன. இதனையடுத்து மந்திரம் தொடர்பான எண் இல்லாத ஓர் ஏடு உள்ளது.

## 996. வசியம்

**அ.** 278:500; **ஆ.** 21 ஏடுகள்; **இ.** 8 x 3 செ.மீ.; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; சில ஏடுகளில் துளைகள்; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

### தொடக்கம்

வசியம்

முலாம்மின்னிவேரை ஞாயிற்றுக்கிழமை நசி-மசி-நமசியவ மென்று சொல்லிப் பிடுங்கி வேரை மட்டும் அவள் வீட்டு விலக்கமாகிய மாதவிடாயில் புரட்டி அல்லது அவள் நீரில் மூனுநாளைக்கும் ஊறப்போட்டாவது வேரையெடுத்துத் தின்னக் கொடுக்க வருவாள்.

### முடிவு

மூன்று கருங்கோழி முட்டையைக் கொண்டுவந்து எழுத் தாணியால் பேத்து அதில் அரைக்கழஞ்சி ரசம் விட்டு, ஈனா கிடாரிச் சாணி கொண்டுவந்து பொதிந்து, பின்னையும் அந்தக் கிடாரிச் சாணியால் பொதிந்து கட்டுமஞ்சக் கருவை எடுத்துப் புனுகும் கற்பூரமும் கூட்டி மை போல்....

### குறிப்புரை

**உரைநடை.** பலவகையான வசியங்களின் செய்முறை களைக் கூறும் இந்நூல் வசியம் செய்வதற்குதவும் மருந்துப் பொருட்களையும், மந்திரங்களையும் கூறுகின்றது. ஏடுகளுக்கு எண்கள் இல்லை. வசியம், ஸ்ரீ வசியம், புருசவசியம், சாவதுக்கு, வெருகு பார்வை, காளிமந்திரம், தேள்கடிக்கு மந்திரம், தேள்கொட்டினால் மருந்து முதலான தலைப்புகள் உள்ளன.

## 997. (வாக்கு சல்லியம் சக்காதேவி மந்திரம்)

**அ. 444:691; ஆ.** *65* ஏடுகள்; **இ.** 14 x 3.5 செ.மீ.; **ஈ.** *9-11* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

...சாமிலோககாரி ரராலே *82* க்கு உருச் செபிக்கத் தூபதீபம் காட்டிச் சித்தி செய்து கொண்டு ஏதொரு காரியத்துக்கும் உச்சாடனம் எட்டி முளையிலே கருத்தொட்டு மூத்திரக் குழியில் வைக்கவும். திரும்பப் பிரைமடைத் தண்ணீரில் ஊதியெறிய நீங்கும். இதுக்கு அச்சரம் பிராணம் பிரதினுட் டாய நம மந்திரம். பிலக்கச் சிவாய நம அங்கரனியாசம். இனியோக நம கரனியா மியினியோக நம முடக்கும் உரு 55 செபித்துப் பிறகு எடுத்து ஓடுகிற தண்ணீரில் விடவும். தீரும்.

### முடிவு

108 கல்லெறிய

உமையே உமையே திருவே அம்மே என் தாயே மாகாளி, சாமுண்டி வயிரவி, மாடனும் நீயுமாகச் சென்று மகாபெலியுங் கொடுத்து ஒரு தெருவில் சென்று ஒருதலை அறுத்து ஒரு கல்லாலெறியச் சிவா கல்லெறியச் சாரம் பூதேங்காய்ப்பழம் சோடசப் பூசை பெலியிட்டுச் செய்யவும்.

### குறிப்புரை

**பாட்டும் உரைநடையும் கலந்தது**. ஒட்டிய நூல், வசியம், வட்டில் சிலாகை, தேங்காய் சுத்தி, கும்பசுத்தி, ஶ்ரீகள் திரண்ட விதி, கல்லெறிய மூத்தவளமை, பிணங்கள் வருவிளை மோகினி மந்திரம், ராசமோகினி, விரலொத்தி அடிக்கற மந்திரம், பிள்ளையுண்டாக, அனுமன், கன்னி, மிதுனம், ஈட்டுத் துறவுகோல், ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன் முடக்கம், சகலமாரணம், கன்னிப்பிசாசு மந்திரம் முதலான உட்தலைப்புகள் உள்ளன. சில சோதிடச் செய்திகளைக் கொண்டும் மந்திரங்கள் கூறப்பட்டுள்ளன. அகத்தீசர் சாலநிகண்டு என்ற நூலின் 1-11 பாடல்கள்

உள்ளன.மாயாசால வித்தை, இறைவனைப் போற்றி வேண்டி வணங்கி வடமொழியில் சுலோகம் கூறுதல், திருநீறு போடுதல், ஆடு வெட்டல், சேவல் அறுத்தல், இரத்தம் தெளித்தல், திருஷ்டி கழித்தல் முதலான பொருண்மைகளில் மந்திரச் செயற்பாடுகள் நிகழ்த்தப் படுவதை அறிய முடிகின்றது. முதலில் வருகின்ற உட்தலைப்பு நூல் பெயராகத் தரப்பட்டுள்ளது.

## 998. வாலைதேவி மனோன்மணி மாலை

**அ.** 56:84; **ஆ.** *1-37* ஏடுகள்; **இ.** 15 x 2 செ.மீ.; **ஈ.** 4 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

பாலைவெவ் வாறு வாலைநின் பாதம் பணிவிடைக்கே
காலையு மாம்படி செய்தது வோஎனைக் காத்தருள்வாய்
ஆலைய மாக அடியா ருளத்தில் அமர்ந்திருந்த
வாலை கௌரிம கமாயி தேவி மனோன்மணியே

முடிவு

வையம் புகழும் மனோன்மணி மாலையை வாகுடனே
செய்யும் கலிமுப்பத்து அஞ்சையும் பாடிஉள சிந்தைமெய்
மெய்யென்று அருள்கொடுத் தென்னாளும் காத்து மித்தாள்
துய்ய பரசிவ காமி எனக்குத் துணைதெய்வமே

குறிப்புரை

**செய்யுள் நடை.** திட்டிக்கு மந்திரம், உச்சாடனம், பேதமம், சுரத்துக்கு, குடல் ஏத்தத்துக்குத் தம்பனம், வித்துவேசனம். தோஷத் துக்குத் தண்ணீர் ஓதி எறிய, வியாதி பார்வைக்கு, விஷத்துக்கு, எதிராளி பார்வைக்கு, அக்கினித் தம்பனம், சுளுக்குக்கு, பிசாசு பிடிக்கு, மிருகம் விலக, பிள்ளைப் பேற்றுக்கு, வீபூதி ஜெபித்துத் தரிசிக்க முதலான தலைப்பு கள் உள்ளன. பாடல்கள் அனைத்தும் வாலை மனோன் மணியே என்னும் முடிவு மகுடத்தை உடையவை.

## 999. விக்கினேஸ்வரர் அகவல்

**அ.** 222:432; **ஆ.** *1-4* ஏடுகள்; **இ.** 32 x 2.5 செ.மீ.; **ஈ.** 5 வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை

தொடக்கம்

ஓம் கணபதே ஜெயஜெய வருகவருக
கற்பகத் தருவே கருணா கருமுகாகரனே
கதிரொளி மயமே
நித்தியா னந்த நின்மல சொரூபா
மூலா தார முச்சுடர் உதயமே!
ஓம்! ஆம்! ஊம்! பிரணவ...
ஓங்கார ஆங்கார ஸ்ரீரீங்கார கிலீங்கார....(1)

முடிவு

சொல்லுகிறேன் கர்மங்க ளாகும் போது
சுருக்காக இருக்கவென்றால் கருவைக் கேளும்
அல்லுகிறேன் ஓலையிலே சக்கரத்தைக் கீறி
அப்பனே பிராணாயம் அபதா னித்து
மல்லுகிறேன் சக்கரத்தி லஞ்சனம் பூசி
மைந்தனே தணல்காட்ட மண்டிச் சாகும்
சொல்லி ஆர்வந் தாலும் வெல்லாது
சிவனா னாலும் வேகும் பாரே (9)

வீட்டுக்கு வீடு முக்கோணமிட்டு நடுவே அட்சரம் எழுதவும். சிதம்பரச் சக்கரம் பஞ்சாட்சரம்.

குறிப்புரை

வசியம், தம்பனம், மோகனம், வித்துவேஷணம், உச்சா டனம், பேதனம், மாரணம், ஆகர்ஷணம் ஆகியவற்றைச் செய்தற்குரிய அஞ்செழுத்தின் மகிமையும். தொடர்ந்து பஞ்சாட்சரச் சக்கரம், சிதம்பரச் சக்கரம் ஆகியவை பற்றியும் கூறுகிறது. இறுதியில் 'சிவதீட்சை பதினொன்று' என்ற தலைப்புடைய ஓர் ஏடு மட்டும் உள்ளது. இந்நூல் துதிநூல் போன்று தோன்றினாலும் முற்றிலும் மந்திரமாகவே இலங்குகின்றது.

## 1000. விபூதி மந்திரம்

**அ.** 201:407; **ஆ.** 5 ஏடுகள்; **இ.** 32 x 3 செ.மீ.; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** சுமார்நிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

அரிஅரி சக்கரம் அரனொலி சக்கரம்
எரிஎரி சக்கரம் ஏகச் சக்கரம்
திரிதிரி சக்கரம் சிவனருள் சக்கரம்
நான்முகன் நாற்பத் தெண்ணாயிரங் கோடி
ரிஷிகளும் சதிர்கோடி சத்திகளும் நவகோடி
தேவதைகளும் சந்திரன், சூரியன், சதாசிவம், இந்திரன்,
எமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானி
யன் என்கிற மகாசக்கரம், அனுகிரகச் சக்கரம்
அனாதி சர்வாசத்திராதிகளைப் பிடிபிடி சக்கரம்
நாராயணன் தந்த நீர், நான்முகன் தந்த நீர்,
இந்திரன் தந்தநீர், ஈசுவரன் தந்த நீர்....
கோழியோதி விட்டது.

முடிவு

தேள் மந்திரம்

ஊருக்கு உத்திரானாயாட்டக்கு பரமட்டக் கூறு
மாமடிக்கிந்தமரி மாமடிக்கிந்த மரிமரி.... புட்ட
புட்டலோ முந்நூறு கொட்டிலோ முச்சி தேளு
நானூறு கொட்டிலோ நல்லதேளு ஏதேளு கொட்டினா
நெப்பை எக்குநிறை திதுநாக்கு செப்பின குருவு
பாதம் ஆணைதீத நவகோடி சித்தல்லு பாதம்
ஆணை.... அடியவர்க்கருளிய தருகிருபை
அறுமுகவர் திருவெந்நீரே.

குறிப்புரை

விபூதிமந்திரம், அகோரவீரபத்திரன் பேரில் விபூதி மந்திரம், தேள்மந்திரம் என்னும் மந்திரங்களடங்கியது. மொத்த முள்ள ஐந்து ஏடுகளில் இரண்டு ஏடுகள் ஒரு கையெழுத்

திலும், மற்ற மூன்று ஏடுகள் வேறு கையெழுத்திலும் உள்ளன. முன்னே 5 வெற்றேடுகளும், பின்னே 4 வெற்றேடுகளும் உள்ளன.

## 1001. வீரபத்திர சுவாமி பேரில் மந்திரம்

**அ. 226:436; ஆ.** 4 ஏடுகள்; **இ.** 18 x 3 செ.மீ.; **ஈ. 3-6** வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

### தொடக்கம்

ஓம் அய்யும் கிலியும் சவ்வும் அகோ வீரபத்திரா!
பிரளய கால வீரபத்திரா!
ஓங்கார ரீங்கார ஆங்கார ரணவீரபத்திரா!
அரே! வீரபத்திரா! ரா! ரா!
ஆக்கிரம் ஆக்கிரம்; சீக்கிரம் சீக்கிரம்; ரா! ரா!
இன்னார் பேரில் இருக்கின்ற பேய், பிசாசு...
.... மாற மாற ஓம்படு சுவாகா.

### முடிவு

சுளுக்கு

சங்கு உருள! சக்கரம் உருள!
அங்கு உருள! ஆகாசம் உருள!
ஆலம் உருள! சுடுகாடு உருள!
தேர் உருள! தேர்சக்கரம் உருள!
திரு திரு குரு ஆரண சுவாகா

### குறிப்புரை

பெரிய கடவுளர் முதல் சிறு தெய்வங்கள் வரை மந்திர மாந்திரீகத்தில் இடம்பெறுகின்றன. அவ்வகையில் வீரபத்திரர் இந்நூலில் சுட்டப் பெறுகிறார். கிராமங்களிலுள்ள நாட்டராயன், முனியசாமி, கருப்பராயன் முதலான முக்கிய தெய்வங்களுள் வீரபத்திர சுவாமியும் ஒன்று. இத் தெய்வங்களின் உதவியுடன், மாயசித்து, காயசித்து, மாரணவித்தை, சொக்குப்பொடி, அம்மி உரலைப் பறக்க

வைத்தல், பெண் வசியம், மந்திரச் சக்கரங்கள், கூடுவிட்டுக் கூடு பாய்தல், குறளிவித்தை, இந்திரசாலம், மந்திர சாலம், காட்டேரி மந்திரம், காளி, மோகினி அட்சரம், யோகமுள்ள மாரணம், அக்கினித் தம்பம், வாயுத் தம்பம், பஞ்சபட்சி சாத்திரம், கண்கட்டு வித்தை, இரசவாதம், பருவுடல் மறைப்பு, பருவுடல் காணச் செய்தல், பட்சியாகிப் பறந்து போதல், நீர்மேல் நடத்தல், பாலகரைக் கிழவராக்கல், கிழவரைப் பாலகராக்கல், குத்து, வெட்டு அறாமலிருத்தல் முதலான மந்திரச் செயற்பாடுகள் நிகழ்த்தப்படுகின்றன.

பொதுவான கட்டுமந்திரம், தண்ணீர் ஓதும் மந்திரம், பேய், பிசாசை விரட்ட மந்திரம், தேளுக்கு மந்திரம், சுளுக்குக்கு மந்திரம் ஆகியவை இச்சுவடி நூலில் கூறப்படுகின்றன. இறுதியில் 3 வெற்றேடுகள் உள்ளன.



